# கைவல்ய நவநீதம்

## மூலமும் – உரையும்

தா. சாமப்பா




**விஜயா பதிப்பகம்**

*20, ராஜ வீதி,*

*கோயம்புத்தூர் - 641 001.*

www.vijayapathippagam.org

## 'கைவல்ய நவநீதம்' மூலமும் உரையும்

*ஐயனே எனதுள் ளேநின் றனந்தசன் மங்கள் ஆண்ட*
*மெய்யனே உபதேசிக்க வெளிவந்த குருவே போற்றி*
*உய்யவே முத்தி நல்கும் உதவிக்கோர் உதவி நாயேன்*
*செய்யுமா றொன்றும் காணேன் திருவடி போற்றி போற்றி.*

மயிலாடுதுறை துலாக்கட்டதில் 12.09.2017 அன்று
அகில பாரதீய துறவியர்கள் சங்கம் பொதுமக்கள்
ஒத்துழைப்புடன் நடத்தும்
**காவிரி மஹா புஷ்கரம் திருவிழாவில்**
2017ல் கலந்து கொண்டு சிறப்பித்த
மெய்யஞானிகளுக்கு காணிக்கை

**பணிவுடன்**

திரு.திருமதி. சா. ஞானசேகரன் - சந்திரா, கன்னார்பாளையம்
திரு. திருமதி. சா. பழனிசாமி - ஜெயலக்ஷ்மி, கன்னார்பாளையம்
திருமதி. திரு. ப. சாமுண்டீஸ்வரி - பழனிசாமி, பாச்சானூர்
திருமதி.திரு. வே. பத்மாவதி - வேலுசாமி, குத்தாரிபாளையம்

# முன்னுரை

'கைவல்ய நவநீதம்' தமிழ்மொழியில் அமைந்துள்ள ஓர் ஒப்பற்ற வேதாந்த சார்பு நூல். இந்நூலின் ஆசிரியர் திருவாரூர் மாவட்டம் நன்னிலம் ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள். இவருடைய குருநாதர் ஸ்ரீ நாராயண தேசிகர். இவர் சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடத்தில் 10வது பீடாதிபதியாக விளங்கிய ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகளின் சீடர்களுள் ஒருவர் என்று கூறுகிறார்கள். இந்நூலை 'சங்கு கவி' என்பவர் சம்ஸ்கிருதத்தில் எழுதியுள்ளார்.

கைவல்யம் என்றால் மோட்சம் என்று பொருள். நவநீதம் என்றால் புதிதாக எடுக்கப்பட்ட வெண்ணெய் என்று பொருள். இது மெய்யறிவாகிய ஞானத்தைக் குறிக்கிறது. உபநிஷத்துக்கள், பிரம்ம சூத்திரம், ஸ்ரீமத் பகவத்கீதை, பிரகரண கிரந்தங்கள் (சாஸ்திர விஷயங்களைக் கொண்டு எழுதப்படும் நூல்கள்) முதலிய சாஸ்திரங்களின் சாரம் இந்நூலில் அடங்கியுள்ளது. தன்னுடைய இன்பத்துக்காகவும் பாதுகாப்பிற்காகவும் அமைதிக்காகவும் எதையும் சார்ந்திராத தன்மை (தன்னைப் பேரின்ப வடிவமாக உணர்ந்து கொள்வது) கைவல்யம் எனப்படும். கைவல்ய நவநீதம் என்றால் மோட்சத்தைப் பற்றிய அறிவு என்று பொருள். வெண்ணெய் உண்பதற்கு எளிதாக உள்ளதைப்போல தத்துவ ஞானத்தை மந்த அதிகாரிகளும் எளிமையாகப் புரிந்துகொள்ள இந்நூல் உதவுகிறது. இந்நூலை சுரோத்திரிய ஞான பிரம்ம நிஷ்டரான சற்குரு மூலமாக முறையாகக் கற்பதன்மூலம் ஞானம் பெற்று மோட்சத்தை உணரலாம்.

உயிரானது உடலோடு தொடர்பில்லாமலிருப்பது (பிறவாமல்) மோட்சம், ஒவ்வொரு சித்தாந்தமும் மோட்சத்திற்கு கர்மம், பக்தி, யோகம், ஞானம், நாம ஜபம்... என்று பலவிதமான சாதனங்களைக் கூறுகின்றன. இவ்வுடலில் வாழும்பொழுதே மெய்யறிவைப் பெற்று உடல் அபிமானம் இல்லாமலிருத்தல் மோட்சம் (ஜீவன் முக்தி) என்பது அத்வைத வேதாந்த முடிபு. ஆதிசங்கர பகவத்பாதர் அவர்கள்

உண்மையில் இருப்பது ஒரு பரம்பொருள்தான். அந்தப் பரம்பொருளும் நானும் ஒன்று என்று ஒன்றாக இருக்கும் தன்மையை உணர்த்தும் மெய்ஞானத்தைத் தவிர வேறு எதனாலும் மோட்சமில்லை என்று உறுதியாகக் கூறுகிறார். அந்தக் கருத்தை விளக்கித் தெளிவாக்குகிறது கைவல்ய நவநீதம்.

கைவல்ய நவநீதத்தைப் போன்று தமிழ்மொழியில் வேதாந்தத்தை விளக்கிக் கூறும் நூல் அதற்கு முன்பும், பின்பும் தோன்றியதில்லை. தத்துவத்தை விளக்கிக் கூறும் வகையில் சீடன் கேள்வி கேட்க, குரு பதில் கூறுவதுபோல் ஓர் உரையாடல் வடிவில் இந்நூல் அமைந்துள்ளது. எளிதில் விளங்க வைப்பதற்காக இந்நூல் முழுவதிலும் ஆங்காங்கே அற்புதமான உதாரணங்கள் கூறப்பட்டுள்ளன.

இந்நூல் முதல் பகுதியில் ஜீவ பிரம்ம ஐக்கியத்தை விளக்குவதால் 'தத்துவ விளக்கப்படலம்' (சிரவணம்) என்று 7+101 பாடல்கள் உள்ளன. தத்துவத்தை விளக்கிக்கூறிய பிறகு அதிலுண்டாகும் சந்தேகங்களை யெல்லாம் தீர்க்கக்கூடியதாக 'சந்தேகம் தெளிதல் படலம்' (மனனம், நிதித்யாசனம்) 180 பாடல்களில் அமைந்துள்ளது. கைவல்ய நவநீதம் என்னும் இந்நூலினைக் கற்றவர்கள், ஞான நூல்களின் பொருள்கள் அனைத்தையும் கற்று உணர்ந்த ஞானிகளுக்கு ஒப்பாய்த் திகழ்வார்கள்.

கைவல்ய நவநீத நூலுக்கு பல உரைக்ள் உள்ளன. தேனி ஸ்ரீ சுவாமீ சித்பவாநந்தர் ஆச்ரம ஸ்தாபகர் பூஜ்யஸ்ரீ ஓங்காராநந்த மகா சுவாமிகளின் விளக்கத்தை அடிப்படையாகக் கொண்டு, பூஜ்யஸ்ரீ வேதாந்த ஆனந்த சுவாமிகளின் வழிகாட்டுதலில் இந்நூலை எழுதியுள்ளேன். பூஜ்யஸ்ரீ சுவாமிகளின் திருவடிகளுக்கு நன்றி நிறைந்த வணக்கங்கள்.

இந்நூல் எழுத உதவிபுரிந்த ஆன்மிக அன்பர் திரு.முத்துசாமி அவர்களுக்கு நன்றியும் வணக்கமும்.

எமது பெற்றோர் நினைவாக எமது குடும்பத்தினர் இந்நூலை வெளியிடுகிறார்கள்.

ஓதும் அன்பர்களுக்கு உண்ணும் உணவு உடல்மயமாக மாறி அமைவது போன்று இக்கருத்துக்கள் உணர்வுமயமாக மாறி பிறவாப் பெருநிலை அடைய அருளுமாறு இறைவனை இறைஞ்சுகிறோம்.

சிறந்த முறையில் பதிப்பித்துள்ள விஜயா பதிப்பகத்தாருக்கு எமது நன்றியும் வணக்கமும். 'ஓம் தத் சத்'

இறைசேவையில்
தா. சாமப்பா

கன்னார்பாளையம்
காரமடை - 641 104.
போன் - 04254 - 274521
செல் - 95783 78346

ஓம் ஸ்ரீ பரப்பிரம்மணே நம:

ஸ்ரீமத் தாண்டவராய சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய

# கைவல்ய நவநீதம்

## பாயிரம்

### 1. நிர்குண பிரம்ம தியானம்

*பொன்நில மாதர் ஆசை பொருந்தினர் பொருந்தார் உள்ளம்*
*தன்னில்அந் தரத்தில் சீவ சாட்சிமாத் திரமாய் நிற்கும்*
*எந்நிலங் களினும் மிக்க எழுநிலம் அவற்றின் மேலாம்*
*நன்னிலம் மருவும் ஏக நாயகன் பதங்கள் போற்றி.*

பொன், மண், பெண் என்னும் மூன்றிலும் ஆசையுள்ள அஞ்ஞானிகள், ஆசையற்ற ஞானிகள் ஆகியோரின் உள்ளங்களில் ஆகாயத்தைப் போல சாட்சி மாத்திரமாக விளங்கும் ஏழு ஞான பூமிகளுள் மேலான நன்னிலத்தில் (துரியாதீத பூமி) சர்வ சாட்சியாக விளங்குகின்ற ஏக இறைவனின் (பிரம்மம்) பாதங்களை வணங்குவோம்.

*எல்லாருடைய உள்ளத்திலும் சாட்சியாக, யாண்டும் நித்ய முக்த ஸ்வரூபமாக விளங்கிக் கொண்டிருக்கும் பரம்பொருளை வணங்குதல்.*

*இது ('பிரக்ஞானம் பிரம்மம் என்னும் ரிக் வேத மகாவாக்கியம்)*

*ஞான பூமிகள் 1) சுபேட்சை - சுபத்தில் ஆசை, 2) விசாரணை - சாஸ்திர ஆராய்ச்சி, 3) தனுமானசி - மூவாசைகளை விடுதல். 4) சத்வா பத்தி - மெய்ப்பொருளைப் பற்றுதல், 5) அசம் சத்தி - சஞ்சலமின்றி இருத்தல், 6) பதார்த்த அபாவனை - திரிபுடி நீங்குதல், 7) துரியம் - மெய்ப்பொருளில் ஆழ்ந்து இருத்தல்.*

★★★

## 2. சகுண பிரம்ம தியானம்

***ஈன்றுஅளித்து அழிக்கும் செய்கைக்கு ஏதுவாம் அயனாய் மாலாய்***
***ஆன்றஈ சனுமாய்த் தானே அநந்தமூர்த் தியுமாய் நிற்கும்***
***பூன்றமுத் தனுமாய் இன்பப் புணரிஆ தவன்ஆய் நாளும்***
***தோன்றிய விமல போத சொரூபத்தைப் பணிகின் றேனே.***

*ஆக்கல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களுக்கும் காரணமாகவுள்ள பிரம்மனையும், விஷ்ணுவையும், மாட்சிமை பொருந்திய உருத்திரனையும் மேலும் எண்ணற்ற தேவர்களாய், தாவர ஜங்கமங்களுக்கு ஆதியாய் பூரணமான நித்ய முக்தனாய், ஆனந்தக் கடலில் தோன்றும் ஞானசூரியனாய், சதாசர்வ காலமும் தானே விளங்குகின்ற நிர்மலமான பேரறிவு சொரூபமாய் விளங்கும் ஆன்ம சொரூபத்தை பணிந்து வணங்குகின்றேன்.*

*ஜீவனுக்கும், ஈசுவரனுக்கும் ஆதாரமாக இருக்கும் தூய உணர்வை வணங்குதல்.*

*இது ('அயம் ஆத்மா பிரம்மம்' என்னும் அதர்வண வேத மகாவாக்கியம்).*

★★★

## 3. சற்குரு வணக்கம்

***எவருடை அருளால் யானே எங்குமாம் பிரமம் என்பால்***
***கவருடைப் புவனம் எல்லாம் கற்பிதம் என்று அறிந்து***
***சுவரிடை வெளிபோல் யான்என் சொரூபசு பாவம் ஆனேன்***
***அவருடைப் பதும பாதம் அனுதினம் பணிகின் றேனே.***

நானே எங்கும் நிறைந்திருக்கின்ற பிரம்ம சொரூபம் என்பதையும், என்னிடத்தில் தோன்றி விரிந்திருக்கின்ற உலகம் முழுவதும் கற்பனை (மித்தை) என்பதையும்;சுவரின்கண் உள்ள ஆகாசமும் வெளியில் உள்ள ஆகாசமும் ஒன்று என்று அறிவதுபோல், அண்டசராசரங்கள் அனைத்திலும் வியாபித்திருக்கக்கூடிய பரம்பொருளை என் சொரூப மாகவும் உணர்ந்து கொள்ளுமாறு உபதேசித்து அருள்புரிந்த கருணையே வடிவமான குருநாதரின் தாமரை மலர் போன்ற திருவடிகளை எப்போதும் பணிந்து வணங்குகின்றேன்.

நம்முடைய உண்மை சொரூபத்தை உணர்த்தியருளிய சற்குருநாதனின் திருவடிகளை எப்போதும் வணங்கவேண்டும்.

இது ('தத்துவம் அஸி' என்னும் யஜுர் வேத மகாவாக்கியம்)

★★★

## 4. குரு சொரூப வணக்கம்

என்னுடை மனது புத்தி இந்தி(ரி)ய சரீரம் எல்லாம்
என்னுடை அறிவி னாலே இரவிமுன் இமமே ஆக்கி
என்னுடை நீயும் நானும் ஏகம்என்று ஐக்கி யம்செய்ய
என்னுடைக் குருவாய்த் தோன்றும் ஈசனை இறைஞ்சி னேனே.

என்னுடைய சஞ்சல வடிவமான மனம், உறுதிப்படுத்தும் புத்தி, அந்தக்கரணங்கள், ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள் இவைகளால் உண்டான காரண, சூட்சும, தூலதேகம் ஆகிய அனைத்தையும் என்னுடைய மெய்யறிவால் (ஆத்ம ஞானம்) சூரியனைக் கண்ட பனிபோல் இல்லாமல் செய்து, (வெறும் தோற்றம் என்பதை உணர்த்தி) சீடனாகிய (கூடஸ்தன்) நீயும், குருவாகிய (பிரம்மம்) நானும் ஒன்றுதான் என்ற எனது சுபாவ சித்தமாகிய ஐக்கியத்தை உபதேசித்து அருள என்னுடைய குருவாகத் தோன்றியுள்ள இறைவனைப் போற்றி வணங்குகின்றேன்.

குருவும், இறைவனும் ஒருவரே வேறல்ல.

இது ('தத்துவம் அஸி' என்னும் சாமவேத மகாவாக்கியம்)

★★★

## 5. அதிகாரி, நூல், பொருள்

*அந்தமும் நடுவும் இன்றி ஆதியும் இன்றி வான்போல்*
*சந்ததம் ஒளிரும் ஞான சற்குரு பாதம் போற்றிப்*
*பந்தமும் வீடும் காட்டப் பரந்தநூல் பார்க்க மாட்டா*
*மந்தரும் உணருமாறு வஸ்துதத் துவம்சொல்வேனே.*

*துவக்கம், நடுவு, முடிவு இல்லாத ஆகாயம் போன்று எப்பொழுதும் ஒளிர்ந்து கொண்டிருக்கின்ற ஞானவடிவான சற்குருநாதரின் திருவடிகளை போற்றி வணங்கினேன். அவருடைய கிருபையால்; பந்தத்தையும் மோட்சத்தையும் விளக்கும் பொருட்டு இந்நூலில் பரந்து விரிந்துள்ள வேதாந்த சாஸ்திரங்களைக் கற்று புரிந்துகொள்ள இயலாதவர்களும் (ஆரம்ப நிலையில் உள்ளவர்கள்) எளிதில் உணர்ந்து கொள்ளும்படி மெய்ப்பொருள் தத்துவத்தை எளிமையாகச் சொல்லுகிறேன். (1. பந்த சொரூபம், 2. பந்த காரணம், 3. மோட்ச சொரூபம், 4. மோட்ச காரணம், 5. ஜீவ ஈசுவ'ர ஜகத் சொரூபம், 6. ஜீவ பிரம்ம ஐக்கியம்).*

★★★

## 6. நூல் பயன்

*படர்ந்தவே தாந்தம் என்னும் பாற்கடல் மொண்டு முந்நூல்*
*குடங்களில் நிறைத்து வைத்தார் குரவர்கள் எல்லாம் காய்ச்சிக்*
*கடைந்துஎடுத்து அளித்தேன் இந்தக் கைவல்ய நவநீ தத்தை*
*அடைந்தவர் விடய மண்தின்று அலைவரோ பசியி லாரே.*

*குருமார்கள் (ஞானி)கள் வேதங்களின் முடிவாக விளங்கும் உபநிஷதங்கள் என்னும் பாற்கடலில் மூழ்கி அதிலிருந்து முக்கியமான கருத்துக்களை எடுத்து, வேதாந்த சாஸ்திரங்களாகிய குடங்களில் நிறைவாக வழங்கியுள்ளனர். அந்நூல்களை சற்குருவின் சந்நிதியில் சம்பிரதாயமாகக் கேட்டுணர்ந்தேன். சுயபுத்தியால் சிரவணம், மனனம், நிதித்தியாசனம் செய்து, அவைகளில் கூறப்பட்டுள்ள முக்கியமான கருத்துக்களை எடுத்து கைவல்ய நவநீதம் என்னும் நூலாகக் கொடுத்துள்ளேன். இந்த நவநீதத்தை (வெண்ணெய்) உண்டவர்கள் நித்ய திருப்தர்களாய், புலனின்பம் என்னும் மண்ணைத் தின்ன மாட்டார்கள். இதைப் படித்து உணர்பவர்கள் உலக ஆசையினின்றும் விடுபடுவார்கள்.*

## 7. உபாசனா மூர்த்தியை வணங்கி, படலவகை கூறல்

***முத்தனை வேங்க டேச முகுந்தனை எனைஆட் கொண்ட***
***கர்(த்)தனை வணங்கிச் சொல்லும் கைவல்ய நவநீ தத்தைத்***
***தத்துவ விளக்கம் என்றும் சந்தேகம் தெளிதல் என்றும்***
***வைத்துஇரு படலம் ஆக வகுத்துரை செய்கின் றேனே.***

*முத்தொழில் புரிபவரும், பாசத்திலிருந்து நீங்கியவரும், யாண்டும் முக்தியில் நிலைத்திருப்பவரும், மோட்சத்தைத் தரும் மெய்யறிவை அருளுபவரும், என்னை ஆட்கொண்டருளிய கர்த்தரும், முகுந்தனும் ஆகிய நாராயண குருவினது திருவடித் தாமரைகளை திரிகரண சுத்தியுடன் வணங்கி, அவருடைய அருளால் சொல்ல எடுத்துக்கொண்ட கைவல்ய நவநீதம் என்னும் இந்நூலை ஜீவ ஈசுவர ஐக்கியத்தை உபதேசிக்கும் தத்துவ விளக்கம் (சிரவணம்) என்றும்; சிரவணத்தின் போது உண்டாகும் சந்தேகங்களைத் தெளிவிக்கும் சந்தேகம் தெளிதல் (மனனம்) என்றும் இரண்டு உட்பிரிவுகளாகப் பிரித்துக் கூறுகின்றேன்.*

★★★

# 1. தத்துவ விளக்கப் படலம்

## 1. மெய்ஞ்ஞானம் பெறத் தகுதி

*நித்திய அநித்தி யங்கள் நிண்ணயம் தெரிவி வேகம்*
*மத்திய இகப ரங்கள் வருபோகங் களில்நி ராசை*
*சத்தியம் உரைக்க வேண்டும் சமாதிஎன்று ஆறு கூட்டம்*
*முத்தியை விரும்பும் இச்சை மொழிவர்சா தனம்இந் நான்கே.*

நித்ய (அழியாத) பொருள் எது? அநித்திய பொருள் எது? என்றால் பரம்பொருள் ஒன்றே நித்தியமானது. உலகம், உடல், உறவு, செல்வம், வாழ்வு ஆகிய எல்லாம் நிலையற்றவை. இதை சுருதி, யுக்தி, அனுபவங் களால் தெளிவாகவும், உறுதியாகவும் தெரிந்துகொள்ளும் பகுத்தறிவு விவேகம் எனப்படும். ஒரு பொருளைப் பற்றித் தெரிந்துகொள்வது அறிவு. இரண்டு பொருள்களுக்குமுள்ள வேறுபாட்டைப் பிரித்துத் தெரிந்து கொள்வது விவேகம் (நித்ய அநித்ய வஸ்து விவேகம்)

இவ்வுலக இன்பங்கள், சுவர்க்காதி போகங்கள் ஆகிய அனைத்தும் தோஷமுடையவை, அநித்தியமானவை, பரம்பொருளை அடையத் தடையானவை என்பதை அறிந்து அவற்றில் அளவுக்கு அதிகமாக பற்று வைக்காமலிருப்பது வைராக்கியம் (நிராசை).

சத்தியம் (உண்மை) என்று சொல்லத்தகுந்த சமாதி என்று கூறும் சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம், சிரத்தை என்னும் ஆறு குணங்களாகிய சம்பத்துக்களை (சமாதி சட்க சம்பத்து) பெற்றிருக்க வேண்டும். நிலையான முக்தியை அடையவேண்டும் என்ற தீவிர ஆசை (முமுட்சுத்வம்) ஆகிய இந்நான்கு சாதனங்களை அடையப் பெற்றவர்கள் தான் சர்வ துக்க நிவர்த்தி, பரமானந்த சுக பிராப்தி வடிவ பிரம்ம சொரூபத்தை அறிய அதிகாரி ஆவார்கள். (ஜீவ பிரம்ம ஐக்கிய ஞானம்).

★★★

## 2. சம தமாதிகள்

*சமம் தமம் விடல்ச கித்தல் சமாதானம் சிரத்தை ஆறாம்*
*சமம்அகக் கரண தண்டம் தமம்புறக் கரண தண்டம்*
*அமர்தரு கருமம் பற்றாது அறுத்தலே விடல்என்று ஆகும்*
*மமர்செயும் சுகதுக் காதி அனுபவிப் பதுச கித்தல்.*

சமம் - மனதை முறையாக பண்படுத்துதல். நல்லதரமான, அளவான எண்ணங்களை முறையாக எண்ண வேண்டும். சினம், பேராசை, பொறாமை, வஞ்சம் போன்ற தவறான மோசமான எண்ணங்கள் எழாமல் விழிப்புடன் இருக்க வேண்டும். எண்ணம்தான் சொல்லாகி செயலாகிறது. செயல் நன்மை தீமைகளை விளைவிக்கிறது. அறநூல்களைக் கற்பது, அறச் செயல்களைச் செய்வது, நல்லவர்களுடன் பழகுவது (சத்சங்கம்) போன்றவற்றின் மூலம் மனதைப் பண்படுத்த வேண்டும். மனதை ஒழுங்குபடுத்துதலே ஆன்மிகத்தில் முக்கியமான பயிற்சி. மனம் போன போக்கில் போகாமல் தடுத்து, ஆத்ம சொரூபத்தில் மனதை நிறுத்திப் பழகுவது சமம் எனப்படும்.

தமம் - புலனடக்கம். கண், காது, மூக்கு, நாக்கு, மெய் (தோல்) ஆகிய ஐம்பொறிகளும் வெளிநோக்கியே செல்லும் தன்மையன. நல்லறிவும், விடாமுயற்சியும், விழிப்புணர்வும் கொண்டு அவைகளை நல்வழியில் செல்ல பழக்க வேண்டும். கர்ம, ஞானேந்திரியங்களை தவறான வழியில் செல்லாமல் நன்னெறிப்படுத்துவது தமம் எனப்படும்.

விடல் - நற்கர்மங்கள் (கர்மயோகம்) ஆற்றி மனதைத் தூய்மைப் படுத்தி, பூர்வஜென்ம வாசனையில் தோன்றும் விருப்பு வெறுப்புகளை நீக்கி, தர்மமான வழியில் இந்திரிய விஷயங்களை (உலக சுகபோகங்களை) அனுபவித்துக் கொண்டு, உடைமைகள், கடமைகள், உறவுகள் ஆகியவற்றைக் குறைத்துக்கொண்டு, பாவ கர்மங்களிலிருந்து விலகி இருப்பது விடல் ஆகும்.

சகித்தல் (திதிட்சை) குளிர், வெப்பம், இன்பம், துன்பம், ஆசை, கோபம், எரிச்சல் போன்றவை பூர்வவினையினால் வந்தவை என்பதைத் தெளிவாகப் புரிந்துகொண்டு அவைகளைப் பொறுத்துக் கொள்ளுதல் சகித்தல் எனப்படும்.

★★★

## 3.

*சிரவணப் பொருளைத் தானே சித்தம்சிந் திக்குமாறு*
*சரதமா வைக்கும் இத்தைச் சமாதானம் என்பர் மேலோர்*
*பரமசற் குருநூல் அன்பு பற்றலே சிரத்தை ஆகும்*
*வரம்மிகு சமாதி ஆறு வகையின்சொற் பொருள்இ தாமே.*

குருமுகமாக வேதாந்த நூல் கருத்துக்களைக் கேட்டல் சிரவணம் எனப்படும். மனதை வெளிவிஷயங்களிலிருந்து விலக்கி, மன ஒருமைப்பாட்டுடன் குரு உபதேசிக்கும் சாஸ்திர விஷயங்களில் மட்டும் மனத்தைப் பொருத்தி அதையே ஆழ்ந்து எண்ணுவது சமாதானம் எனப்படும். பரம்பொருள் தத்துவத்தை உணர்ந்து அதில் நிலைத் திருக்கும் குருநாதரிடமும், மெய்யறிவு நூல்களிடமும் அன்புகலந்த ஆழ்ந்த நம்பிக்கையுடனிருப்பது சிரத்தை எனப்படும். இவை மேன்மை மிகுந்த சமம் முதலான ஆறு குணங்கள் ஆகும்.

சாஸ்திரம், குரு கூறுவது பொய்யல்ல 'சத்தியம்' என்ற சிரத்தை ஏற்பட்டால்தான் மெய்யறிவு உண்டாகி பயனளிக்கும். தர்ம அனுஷ்டானம், சத்சங்கம், சகுண பிரம்ம தியானம் செய்தால்தான் இந்த ஆறு குணங்களும் விருத்தியாகும்.

★★★

## 4. சாதனங்களின் பெருமையும் பயனும்

*சாதனம் இன்றி ஒன்றைச் சாதிப்பார் உலகில் இல்லை*
*ஆதலால் இந்த நான்கும் அடைந்தவர்க்கு அறிவு உண்டாகும்*
*நூதன விவேகி உள்ளம் நுழையாது நுழையும் ஆகில்*
*பூதசன் மங்கள் கோடி புனிதனாம் புருடன் ஆமே.*

ஒரு செயலைச் சிறப்பாகச் செய்துமுடிக்க உரிய தகுதிகள் (கருவி, வழிமுறை பழக்கம்) இருந்தால்தான் அதைச் செய்து முடிக்க முடியும். தகுதி இல்லை என்றால் அதை அடைய இயலாது. எனவே விவேகம், வைராக்கியம் சமம் முதலான ஆறு குணங்களுடன் முக்தியில் தீவிர ஆசையும் உடையவருக்குத்தான் ஜீவ பிரம்ம ஐக்கிய ஞானம் (நானும் பரம்பொருளும் ஒன்றுதான்) தோன்றும்; இல்லை என்றால் தோன்றாது. உலகியல் அறிவு எவ்வளவு பெற்றிருந்தாலும் அவர்களுக்கு மெய்ஞ்ஞானம் விளங்காது. ஆனால் முன்பிறவிகளில் கர்மயோகம் அனுஷ்டித்து, சாதனைகள் செய்து, சித்த சுத்தி

ஏற்பட்டிருந்தால் முன்ஜென்ம வாசனையால் இப்பிறவியில் மெய்ஞ்ஞானம் விளங்கி மோட்சமடைவான். பல பிறவிகளில் செய்த புண்ணியபலன் ஒருவனுக்கு மெய்யறிவில் நாட்டத்தை உண்டாக்கும்.

அடையவேண்டிய இலட்சியம் சாத்தியம் எனப்படும். அடைவதற்கான காரியம் (வழி) சாதனம் எனப்படும். சாதனத்தைப் பயன்படுத்தி சாத்தியத்தை அடைபவன் சாதகன் எனப்படுகிறான்.

★★★

## 5. அதிகாரி [தகுதி]

***இவன்அதி காரி ஆனோன் இந்திரி யங்க ளாலும்***
***புவனதெய் வங்க ளாலும் பூதபௌ திகங்க ளாலும்***
***தவனம் மூன்று அடைந்து வெய்யிற் சகித்திடாப் புழுப்போல் வெம்பிப்***
***பவம்அறு ஞான தீர்த்தம் படிந்திடப் பதறி னானே.***

சாதன சம்பத்தியை உடையவன் புலன்களாலும் (அத்யாத்மிகம்) இயற்கையாலும் (அதிதெய்விகம்) பிற உயிர்களாலும் (அதிபௌதிகம்) உண்டாகும் மூன்றுவிதத் துன்பங்களை (தாபத்திரையங்கள்) அடைந்து, வெயில் சகிக்கமாட்டாத புழுப்போல் வெம்பி இந்த தாபத்தைத் தீர்க்கக்கூடிய ஞான தீர்த்தத்தை (மெய்யறிவை நல்கும் குருவை) தேடி ஓடினான்.

சாதன சதுஷ்டய சம்பத்தி அடைந்தபிறகு கர்மத்தால் முக்தி இல்லை என்பதை அறிந்து, மெய்ஞ்ஞானம் பெற சற்குருவை நாடுகிறான். பசி, தாகம், வியாதி போன்றவற்றால் உண்டாகும் துன்பம் அத்யாத்மிகம்; மழை, வெயில், பூகம்பம் போன்றவற்றால் உண்டாகும் துன்பம் அதிதெய்விகம், திருடர், புலி, பாம்பு போன்ற பிற உயிர்களால் ஏற்படும் துன்பம் அதிபௌதிகம் எனப்படும்.

★★★

## 6. குரு தரிசனம்

***ஆனபின் மனைவி மக்கள் அர்த்தஏ டணைகள் மூன்றில்***
***கானவர் வலையில் பட்டுக் கைதப்பி ஓடும் மான்போல்***
***போனவன் வெறுங்கை யோடே போகாத வண்ணம் சென்று***
***ஞானசற் குருவைக் கண்டு நன்றாக வணங்கி னானே.***

மனைவி, மக்கள், பொருள் (ஏஷணாத்திரையம்) என்னும் மூவாசைகளிலுள்ள அபிமானத்தை நன்கு துறந்துவிட்டு, நான் யார்? எனக்கு இந்தத் துக்கம் எதனால் வந்தது? இது எதனால் நீங்கும்? நீங்குவதற்குரிய உபாயத்தை போதிக்க வல்லவர் யார்? அவர் எங்கு இருக்கிறார்? அவரை எவ்வாறு அடையலாம்? என்று உள்ளம் பதறி வேடர் வீசிய வலையில் அகப்பட்டு, அதைக் கிழித்துக் கொண்டு தப்பித்து ஓடும் மானைப் போன்று, சம்சாரம் என்னும் வலையிலிருந்து விடுவித்துக் கொண்டு வெகுவேகமாக ஓடினான்.

அவ்வாறு ஓடினவன் வெறுமனே போகாமல் உள்ளத்தில் அன்பு, நம்பிக்கையுடனும், கைகளில் பழம், பூ முதலிய பொருள்களை எடுத்துக்கொண்டு மனம், வாக்கு, காயம் ஆகிய திரிகரண சுத்தியுடன் ஞான சற்குருவை அடைந்து, கண்குளிர தரிசித்து, எடுத்துச் சென்ற காணிக்கைப் பொருட்களை குருவின் திருவடிகளில் சமர்ப்பித்து அவர் மகிழும் வண்ணம் பலமுறை அவரை வலம்வந்து வீழ்ந்து வணங்கினான்.

தெய்வம், குரு, பெரியோர், அரசன், குழந்தை, நோயாளிகள், கர்ப்பிணிப் பெண்கள் ஆகியோரைக் காண வெறுங்கையுடன் செல்லக்கூடாது என்று தர்ம சாஸ்திரம் கூறுகிறது. மரத்திலிருந்து காய்ந்த குச்சிகள் கீழே விழுவது போன்று நானும் சம்சார பந்தத்தி லிருந்து விடுபட்டு விட்டேன் என்பதன் அடையாளமாக சமித்துகளை எடுத்துக்கொண்டு செல்வதும் வழக்கம்.

★★★

## 7. தன்னை முழுதும் ஒப்படைத்தல் [சரணாகதி]

**வணங்கிநின்று அழுது சொல்வான் மாயவாழ்வு எனும்சோ கத்தால்**
**உணங்கினேன் ஐயனேஎன் உள்ளமே குளிரும் வண்ணம்**
**பிணங்கிய கோச பாசப் பின்னலைச் சின்னம் ஆக்கி**
**இணங்கிய குருவே என்னை இரட்சித்தல் வேண்டும் என்றான்.**

பின்னர் இருகரங்களையும் கூப்பிக்கொண்டு, கண்களில் நீர் பெருக, அழுதுகொண்டு குருநாதா! பொய்யான சம்சார வாழ்வென்னும் சோகத் துயரத்தால் வாடுகிறேன். எனது மனமானது மகிழுமாறு ஒன்றோடொன்று இணைந்திருக்கின்ற பஞ்ச கோசங்களில் ஏற்படும் யான், எனது என்னும் அபிமான வடிவ பந்தங்களை அழித்து, எனக்கு அருள்புரிந்து காக்க வேண்டும் என்று வேண்டினான்.

## 8. தீக்ஷை அருளல்

**அன்னதன் சிசுவை ஐயன் ஆமைமீன் பறவை போலத்**
**தன்னகம் கருதி நோக்கித் தடவிசந் நிதிஇ ருத்தி**
**உன்னது பிறவி மாற்றும் உபாயம்ஒன்று உண்டு சொல்வேன்**
**சொன்னது கேட்பாய் ஆகில் தொடர்பவம் தொலையும் என்றார்.**

அவ்வாறு வேண்டிக்கொண்ட சீடனைச் சற்குருவானவர், ஆமை தான் கரையிலிட்ட முட்டை குஞ்சாகுமாறு அதைத் தன் உள்ளத்தில் பாவித்து குஞ்சாக்கும். அதுபோல சீடன் தான் உடல் என்ற பாவனை நீங்கி தான் ஆத்மா என்று உணரவேண்டும் என்று குரு தமது உள்ளத்தில் பாவித்தார் (சங்கல்ப தீட்சை). மீன் தனது முட்டை குஞ்சாக வேண்டுமென்று அதை நோக்கும். அதைப்போன்று சீடனது சஞ்சிதவினை நீங்கவேண்டுமென்று குரு அன்போடு நோக்கினார் (நயன தீட்சை). பறவை தனது முட்டையை சிறகினால் அரவணைத்து குஞ்சாக்குவதுபோல சீடனது சந்தேக விபரீதங்கள் ஒழிந்து ஆன்மஞானம் உண்டாக வேண்டுமென்று சீடனை அருகே அழைத்து, அமர்த்தி, அஞ்சாதே! என்று அவனுடைய சிரசில் தமது கரத்தை வைத்து அபயமளித்தார் (ஸ்பரிச தீட்சை). பின்னர் அவனை நோக்கி "உனது பிறவித் துன்பத்தை நீக்கும் உபாயம் ஒன்றிருக்கிறது. அதனை உனக்கு உபதேசிக்கிறேன். கவனமாகக் கேட்டு அதன்படி நடப்பாயாகில் உன்னை அநாதி காலமாய்த் தொடர்ந்து வந்து கொண்டிருக்கும் பிறவித்துன்பம் நீங்கிவிடும்" என்று அருளிச் செய்தார் (வாக் தீட்சை).

★★★

## 9. அக மகிழ்வு

**தொடர்பவம் தொலையும் என்று சொன்னதைக் கேட்ட போதே**
**தடமடு மூழ்கி னான்போல் சரீரமும் குளிர்ந்துள் ஆறி**
**அடரும் அன்புஒழுகு மாபோல் ஆனந்த பாஷ்பம் காட்டி**
**மடல்மலர்ப் பாதம் மீண்டும் வணங்கிநின்று ஈது சொல்வான்.**

அநாதி காலமாகத் தொடர்ந்து வந்துள்ள உனது பிறவித் துயரம் நிவர்த்தியாய்விடும் என்று குருநாதர் அருளியதைக் கேட்ட உடனேயே வெயிலால் தவிக்கப்பட்டு வாடினவன், விசாலமான தடாகத்தில் மூழ்கி நீராடினவன் போன்று மனவெப்பம் தணிந்து, உடல் குளிர்ந்து, அன்பானது கரைபுரண்டு ஓடுவதுபோல இரு கண்களிலும் ஆனந்தக்

கண்ணீர் பெருக, சற்குருநாதனுடைய தாமரை மலர் போன்ற திருவடிகளை மீண்டும் வீழ்ந்து வணங்கி எழுந்து நின்று, இரு கைகளையும் தலைமீது கூப்பிக்கொண்டு சொல்லத் தொடங்கினான்.

★★★

## 10.

*சொன்னது கேட்க மாட்டாத் தொண்டன் ஆனாலும் சுவாமி*
*நின்னது கருணையாலே நீர்எனை ஆளலாமே*
*உன்னது பிறவி மாற்றும் உபாயம் ஒன்று உண்டுஎன் றீரே*
*இன்னதுஎன்று அதைநீ காட்டி ஈடேற்றல் வேண்டும் என்றான்.*

''குருநாதா! தாங்கள் உபதேசித்ததைக் கேட்டு அதன்படி நடக்க முடியாதவன் ஆனாலும்; நான் உமது தொண்டன். தங்களுடைய கருணையினால் என்னை ஆட்கொள்ள வேண்டியது தங்களுடைய கடமையாகும். உன்னுடைய பிறவியை மாற்றுகின்ற உபாயம் ஒன்றுண்டு என்று அருள் செய்தீர்கள். அவ்வுபாயம் இத்தன்மையது என்று உபதேசித்து பிறவிக்கடலிலிருந்து என்னைக் காப்பாற்றி கரையேற்ற வேண்டும்'' என்று விண்ணப்பஞ் செய்தான்.

★★★

## 11. குரு உபதேச துவக்கம்

*அடங்கிய விருத்தி யான்என்று அறிந்தபின் செறிந்த மண்ணின்*
*குடம்பையுள் புழுமுன் ஊதும் குளவியின் கொள்கை போலத்*
*தொடங்கிய குருவும் ஆன்ம சொரூபமே மருவ வேண்டி*
*உடம்பினுள் சீவ னைப்பார்த்து உபதேசம் ஓது வாரே.*

இவன் எண்ணங்கள் அடங்கியவன் என்று ஆராய்ந்து அறிந்து கொண்டபின், குளவி மண்கூட்டினுள் இருக்கும் புழுவின் முன்னால் ரீங்காரமிட்டு அதைக் குளவி ஆக்கும். அதுபோல குருவானவர் சீடன், அறியாமை நீங்கி தனது நிசவடிவான ஆத்ம சொரூபத்தை அடையும் பொருட்டு, தேகத்துக்குள் இருக்கும் ஜீவனைப் பார்த்து உபதேசிக்கத் தொடங்கினார்.

★★★

## 12.

***வாராய்என் மகனே தன்னை மறந்தவன் பிறந்து இறந்து***
***தீராத சுழற்காற்று உற்ற செத்தைபோல் சுற்றிச் சுற்றிப்***
***பேராத கால நேமிப் பிரமையில் திரிவன் போதம்***
***ஆராயும் தன்னைத் தான்என்று அறியும் அவ் வளவுந் தானே.***

''எனது அருமை மகனே! தன்னை யார் என்று விசாரித்து அறியாதவன் பிறந்து இறந்து தீராத சுழற்காற்றில் அகப்பட்ட சருகு போலச் சுற்றிச் சுற்றி இவ்வுலகிற்கும், மேல் உலகிற்கும் வருவதும், போவதுமாய் நீங்க முடியாத காலச்சக்கரத்தின் சுழற்சியில் சுற்றித் திரிவான். சாஸ்திர ஆராய்ச்சியினால் தன்னை பிரம்ம ஸ்வரூபம் என்று உணரும்வரையில் இந்நிலை நீடிக்கும்.

*ஆத்ம அஞ்ஞானம் - சம்சார காரணம். ஆத்ம ஞானம் - சம்சார நீக்கம்.*

★★★

## 13.

***தன்னையும் தனக்குஆ தாரத் தலைவனை யும்கண் டானேல்***
***பின்னைஅத் தலைவன் தானாய்ப் பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன்***
***உன்னைநீ அறிந்தாய் ஆகில் உனக்கொரு கேடும் இல்லை***
***என்னைநீ கேட்கை யாலே ஈதுஉப தேசித் தேனே.***

ஆதலால், ஜீவநிலையில் தோற்றமாய் இருக்கிற கூடஸ்தனையும் தனக்கு ஆதார தலைவனாக இருக்கிற ஈசனையும் தன்னிலேயே (பிரம்மம் தனக்கு வேறாக இல்லை என்பதை) கண்டுகொண்டவன் பிறப்பிலிருந்து விடுபடுவான். இவ்வாறு உன்னை நீ அறிந்தாய் என்றால் உனக்கு ஒரு கேடும் விளையாது. என்னை நீ கேட்டதால் இதனை உனக்கு உபதேசிக்கிறேன்'' என்று அருளிச் செய்தார்.

★★★

## 14.

***என்னைத்தான் சடனா உள்ளத்து எண்ணியோ சொன்னீர் ஐயா***
***தன்னைத்தான் அறியா மாந்தர் தரணியில் ஒருவர் உண்டோ***
***பின்னைத்தான் அவர்கள் எல்லாம் பிறந்துஇறந்து உழலுவா னேன்***
***நின்னைத்தான் நம்பி னேற்கு நிண்ணயம் அருளு வீரே.***

''எமது குருநாதரே! அடியேனை ஜடநிலையிலுள்ள மூடன் என்று எண்ணியா இவ்வாறு அருளிச் செய்தீர்? இவ்வுலகில் யாராவது தன்னை யார் என்று அறியாத மனிதர்கள் இருக்கிறார்களா? இல்லையே. அவர்கள் அனைவரும் பிறப்பு இறப்பு என்னும் துன்பத்தில் சுழலுவானேன். உம்மையே மாதா, பிதா, குரு, தெய்வமாக நம்பிக் கொண்டிருக்கிற அடியேனுக்கு நிச்சயமானதை உள்ளவாறு உபதேசித்து அருள்வீராக'' என்று பிரார்த்தித்தான்.

★★★

## 15.

**இன்னது தேகம் தேகி இவன்என உணர்வான் யாவன்**
**அன்னவன் தன்னைத் தான்என்று அறிந்தவன் ஆகும் என்றார்**
**சொன்னபின் தேகி யார்இத் தூலம்அல் லாமல் என்றான்**
**பின்னது கேட்ட ஐயர் பீழையும் நகையும் கொண்டார்.**

''அன்பனே! இது உடல், இவன் உடலில் உறைபவன் என்று பிரித்து அறியும் விவேகமுள்ளவனே தன்னைத்தான் அறிந்தவன் ஆவான்'' என்று குரு கூறக்கேட்ட சீடன், ''இவ்வுடம்பைத் தவிர்த்து தேகி என்று கூறப்படுபவன் யார்?'' என்று கேட்டான். அதைக்கேட்ட குருவானவர் அஞ்ஞானத்தினால் நான் கூறியதை இவன் அறிய வில்லையே என்று துன்பமும்; இவனது அஞ்ஞானத்தை ஒழிப்பது நமக்கு எளிது என்று புன்னகையும் கொண்டார்.

★★★

## 16.

**தேகம்அல் லாமல் வேறே தேகியார் காணேன் என்றாய்**
**மோகமாம் கனவில் வந்து முளைத்தவன் எவன் நீ சொல்வாய்**
**சோகமாம் கனவு தோன்றாச் சுழுத்திகண் டவன்ஆர் சொல்வாய்**
**ஆகநீ நனவில் எண்ணும் அறிவுதான் ஏது சொல்வாய்.**

குருநாதர் சீடனை நோக்கி, ''இந்தத் தேகமே அல்லாமல் தேகி என்பவனை நான் கண்டதில்லை என்று கூறுகிறாய். உடல் உணர்ச்சி யற்றுக் கிடக்கும் மோகமாகிய கனவில் வந்து தோன்றி விஷயங்களை அறிபவன் யார்? கனவும் தோன்றாத ஆழ்ந்த உறக்கத்தில் (சுழுத்தி) இன்பத்தை அனுபவித்தவன் யார்? என்று ஆராய்ந்து சொல்வாயாக.

விழிப்பு நிலையில் கனவு உறக்கம் இவ்விரண்டையும் அறியும் அறிவு எது? அது தேகமா அல்லது அதற்கு வேறானதா என்பதையும் ஆராய்ந்து கூறுவாயாக'' என்றார்.

★★★

## 17.

**நனவுகண் டதுநான் கண்ட நனவுள நினைவு நீங்கி**
**கனவுகண் டதும்சு ழுத்தி கண்டதும் வேறுஒன் றேபோல்**
**தினம்அநு பவிப்பது ஒக்கும் தெரியவும் இல்லை சற்றே**
**மனதினில் உதிக்கும் பின்னே மறைக்கும் அது அருளு வீரே.**

சீடன், ''குருநாதா! நனவில் நான் பொருள்களைப் பார்த்ததும்; நனவு நீங்கி கனவில் ஸ்திரமில்லாத பொருள்களைக் கண்டதும்; நனவு கனவு இரண்டும் நீங்கி ஆழ்ந்த உறக்கத்தில் அஞ்ஞானத்தைப் பார்த்ததும்; தேகத்துக்கு வேறாக ஒரு தேகியைப் போல நாள்தோறும் அனுபவித்தேன். அது உள்ளவாறு எனக்கு விளங்கவில்லை. இமைப் பொழுதும் மனதில் விளங்குகிறது. பின்பு மறைந்துவிடுகிறது. அதை விளக்கமாக உபதேசித்து அருளவேண்டுமென்று பிரார்த்தித்தான்.

★★★

## 18.

**தாலத்தின் மரங்கள் காட்டித் தனிப்பிறை காட்டு வார்போல்**
**ஆலத்தின் உடுக்கள் காட்டி அருந்ததி காட்டு வார்போல்**
**தூலத்தை முன்பு காட்டிச் சூக்கும சொரூபம் ஆன**
**மூலத்தைப் பின்பு காட்ட முனிவரர் தொடங்கி னாரே.**

இவ்வுலகில் மக்கள் மரங்களைக் காட்டி பின்னர் அவற்றின் நுனியை ஒட்டி வானத்திலுள்ள மூன்றாம் பிறையைக் காட்டுவது போலவும்; (சாகா சந்திர நியாயம்) ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்களைக் காட்டி அவற்றின் இடையே உள்ள அருந்ததி நட்சத்திரத்தைக் காட்டுவதுபோலவும் (ஸ்தூல அருந்ததி நியாயம்) தூல ரூபமான உலகம், உயிர்கள் ஆகியவற்றை முதலில் காட்டி, அவைகளுக்கு மூலகாரணமான சூக்கும பிரம்ம சொரூபத்தைப் பின்னர் விளக்கிக் காட்ட குருவானவர் தொடங்கினார்.

★★★

## 19.

*அத்தியா ரோபம் என்றும் அபவாதம் என்றும் சொல்லும்*
*உத்தியால் பந்தம் வீடுஎன்று உரைக்கும்வே தாந்தம் எல்லாம்*
*மித்தையாம் ஆரோ பத்தால் பந்தம்ஆம் அபவா தத்தால்*
*முத்திஆம் இவ்வி ரண்டில் முந்திஆ ரோபம் கேளாய்.*

''மகனே! வேதாந்த சாஸ்திரங்கள் எல்லாம் உண்மையான ஒன்றில் பொய்யான ஒரு தோற்றத்தை (மித்தியா) எடுத்துக்காட்டும் 'அத்தியாரோப உத்தியினால் பந்தம் உண்டாகும் என்றும்; காரணத்துக்கு அன்னியமாக காரியம் இல்லை என்று எடுத்துக்காட்டும் 'அபவாத' உத்தியினால் முக்தி என்றும் கூறுகின்றன. இவ்விரு உத்திகளில் முதலில் அத்தியா ரோப உத்தியைக் கூறுகிறேன்''.

★★★

## 20.

*ஆரோபம் அத்தி யாசம் கற்பனை ஆவ எல்லாம்*
*ஓர்ஓர்வத் துவினில் வேறே ஓர்ஓர் வத் துவினை ஓர்தல்*
*நாரூடு பணியாய்த் தோன்றல் நரனாகித் தறியில் தோன்றல்*
*நீரூடு கானல் தோன்றல் நிறம்தலம் வெளியில் தோன்றல்.*

ஆரோபம், அத்தியாசம், கற்பனை என்பன எல்லாம் ஒரு பொருளிடத்தில் வேறொரு பொருளை எண்ணுகிற நினைப்பு ஆகும். (பாம்பு இல்லாத) கயிற்றில் பாம்பு தோன்றுவதும், (நீர் இல்லாத) கானலில் நீர் தெரிவதும், (நிறம் இல்லாத) ஆகாயம் நீலநிறமாகத் தெரிவதும்; விளிம்பில்லாத ஆகாயம் விளிம்போடு தோன்றுவதும்; கட்டையில் மனிதன் தெரிவதும் அத்யாரோபத்துக்கு எடுத்துக்காட்டுகள் ஆகும். இவைகளால் பந்தம் உண்டாகின்றன.

★★★

## 21.

*இப்படிப் போல நாம ரூபங்கள் இரண்டும் இன்றி*
*ஒப்பமாய் இரண்டுஅற்று ஒன்றாய் உணர்வுஒளி நிறைவாய் நிற்கும்*
*அப்பிர மத்தில் தோன்றும் ஐம்பூத விகாரம் எல்லாம்*
*செப்புகற் பனையி னாலே செனித்தவென்று அறிந்து கொள்ளே.*

பெயர்களும் உருவங்களும் இல்லாததாய், ஒரே தன்மையாய், இரண்டற்றதாய், உணர்வுமயமாய், நிறைவாய் இருப்பது பிரம்மம். அந்த பிரம்ம சொரூபத்தில் தோன்றுகின்ற பஞ்சபூத வேறுபாடுகள் எல்லாம் கற்பனையால் உண்டாகின்றன என்பதைத் தெளிவாகத் தெரிந்து கொள்வாயாக.

(அதிஷ்டானம் = தூய இருப்பு, பிரம்மம். அத்தியாசம் = கற்பனைப் பாம்பு.)

★★★

## 22.

***அதுதான்எப் படிஎன் றக்கால் அநாதிஆம் சீவர் எல்லாம்***
***பொதுவான சுழுத்தி போலப் பொருந்தும் அவ் வியத்தம் தன்னில்***
***இதுகால தத்து வப்பேர் ஈசன்உட் பார்வை யாலே***
***முதுமூல சுபாவம் விட்டு முக்குணம் வியத்தம் ஆமே.***

கற்பனை சிருஷ்டி எப்படி உண்டாயிற்றென்றால் அநாதியாய் உள்ள ஜீவர்கள் அனைவருக்கும் உலக, தேச வாசனை அனைத்தும் சுழுத்தியில் எங்ஙனம் அடங்கியிருந்து மீண்டும் சாக்கிரத்தில் எப்படி வெளிப்படுகிறதோ; அதுபோல அவ்யக்தம் என்னும் மூலப்பிரகிருதியில் முக்குணங்களும் அடங்கியிருந்து மீண்டும் காலதத்துவமான ஈசனுடைய சங்கற்பத்தினால் அவ்வியத்தமானது முக்குண வடிவமாக வெளிப்பட்டு விளங்கும்.

அநாதியில் கர்ம வாசனையுடன் அழுந்தி இருக்கும் இம்மாயை யானது காலதத்துவம் என்னும் பெயருடைய ஈசுவரனது சங்கல்பத்தினால், முன்னிருந்த காரண தன்மையை (பிரம்ம சொரூபம்) விட்டு சத்வம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று குணங்களாக வெளிப்படும்.

மாயை என்பது சத்துமல்ல அசத்துமல்ல ஸதசத்விலட்சணம். மாயை காரண அத்தியாசம்; அங்கு பேதமில்லை. பிரபஞ்சம் காரிய அத்தியாசம்; இதில் இருவித பேதங்கள் உள்ளன. 1) உலகம், கோள்கள், மரம், மிருகங்கள், மக்கள் இவையெல்லாம் ஈசுவர சிருஷ்டி. 2) இவைகளெல்லாம் உண்மை என்று நினைப்பது ஜீவ சிருஷ்டி.

ஆறு பொருட்கள் அநாதியானவை. 1) ஜீவன், 2) ஈசுவரன், 3) ஜீவ ஈசுவர பேதம், 4) அறியாமைக்கும் சுத்த சைதன்யத்துக்கும் உள்ள சம்பந்தம், 5) அவித்தை, 6) சுத்த சைதன்யம்.

## 23.

**உத்தம வெளுப்புச் செம்மை உறைத்திடு கறுப்பும் ஆகும்**
**சத்துவ குணத்தி னோடு ரசோகுணம் தமோகு ணந்தான்**
**சுத்தமோடு அழுக்கு இருட்டாச் சொல்லுமுக் குணமும் மூன்றாய்**
**ஒத்துஉள வேணும் தம்முள் ஒரு குணம் அதிகம் ஆமே.**

அவற்றுள் சத்வகுணம் உத்தமத் தன்மையும், வெண்நிறமும், சுத்தத் தன்மையும் கொண்டது. ரஜோகுணம் மத்திமத் தன்மையும் செந்நிறமும் அழுக்குத் தன்மையும் (கலக்கம்) பொருந்தியது. தமோகுணம் அதமத் தன்மையும், கரிய நிறமும், இருட்டுத் தன்மையும் கொண்டது. இவ்வாறு இம்மூன்று குணங்களும் தம்முள் குணங்களில் ஒத்திருந்தாலும்; ஒரு குணம் மேம்பட்டிருக்கும்பொழுது மற்ற இரண்டும் அடங்கி இருக்கும். சத்வகுணம் மேம்பட்டிருக்கும் பொழுது ரஜோ குணமும், தமோ குணமும் அடங்கியிருக்கும். இவ்வாறே மற்ற குணங்களும்.

| குணம் | தன்மை | நிறம் | தர்மம் | தோற்றம் |
|---|---|---|---|---|
| சத்வம் | உத்தமம் | வெள்ளை | சுத்தம் | வெளிச்சம் |
| ரஜஸ் | மத்திமம் | சிவப்பு | சுத்தாசுத்தம் | அழுக்கு |
| தமஸ் | அதமம் | கறுப்பு | அசுத்தம் | இருட்டு |

★★★

## 24.

**ஒருவழி இதுஆம் இத்தை ஒருவழி வேறாச் சொல்வர்**
**மருவும்அவ் வியத்தம் தானே மகதத்துவம் ஆகும் அந்த**
**அருள்மக தத்து வம்தான் அகங்காரம் ஆகும் என்றும்**
**கருஅகங் காரம் மூன்றாக் காட்டிய குணம்ஆம் என்றும்.**

முக்குணங்கள் தோன்றிய முறையை வேறுவிதமாகவும் ஆன்றோர் கூறுவார்கள். சிருஷ்டிக்கு முன்பு ஜீவத்தன்மைகள் எல்லாம் மாயையில் வித்து வடிவமாக அடங்கியிருக்கும். அது மக தத்துவம், அவ்யக்தம், அகங்காரம் என்றும் கூறப்படும். அந்த மூல அகங்கார தத்துவமானது முக்குணங்களுக்கும் காரணமாக இருந்து தன்னை முக்குணங்களாக

வெளிப்படுத்தும். (பிரகாச வடிவமுடைய சத்வகுண அகங்காரம் தைசத அகங்காரம் என்றும்; பிரவிருத்தி வடிவமான ரஜோகுண அகங்காரம் வைகாரிக அகங்காரம் என்றும்; மோக வடிவமான தமோ குண அகங்காரம் பூதாதி அகங்காரம் என்றும் கூறப்படுகிறது.

★★★

25.

**இக்குணங் களிலே விண்போன்று இருக்கும்சிற் சாயை தோன்றும்**
**முக்குணங் களினும் தூய்தாம் முதற்குணம் மாயை ஆகும்**
**அக்குணப் பிரமச் சாயை அந்தரி யாமி மாயை**
**எக்குணங் களும்பற் றாதோன் நிமித்தகா ரணன்ஆம் ஈசன்.**

இம்மூன்று குணங்களிலும் ஆகாயத்தைப் போல களங்க மற்றிருக்கும் சின்மயமான பிரம்ம சொரூபத்தின் (சித்) பிரதிபலிப்பு (சாயை) நிழல் தோன்றும். இவற்றில் தூய்மையான சத்வ குணம் மாயை எனப்படும். அத்தூய சத்வ குணத்தில் தோன்றிய பிரம்ம சொரூப பிரதிபிம்பம் அந்தர்யாமி. எல்லாப் பொருள்களிலும் நிறைந்திருப்பவன் மாயா சம்பந்தமான எந்த குணமும் பற்றாதவன் ஜகத்ஜீவ சிருஷ்டிக்கு நிமித்த காரணனாகிய ஈசுவரன் ஆவான். (சாத்விக அம்சமாயையி லிருந்து ஈசுவரன் உண்டாகிறான். ராஜச அம்ச அவித்தையிலிருந்து ஜீவர்கள் உண்டாகிறார்கள்.)

★★★

26.

**ஈசனுக்கு இதுசுழுத்தி இதுவேகா ரணச ரீரம்;**
**கோசம்ஆ நந்தம் ஆகும்; குணம்இரா சதம்அ வித்தை,**
**தேசுஅறும் அவித்தை தோறும் சிற்சாயை ஜீவ கோடி**
**நாசம்ஆம் உயிர்க்கு அப்போது நாமமும் பிராஞ்ஞனாமே.**

ஈசுவரனுக்கு இந்த சத்வகுண மாயையே சுழுத்தி அவஸ்தையும் காரணசரீரமும், ஆனந்தமய கோசமும் ஆகும். ரஜோகுணம் அவித்தையின் இருப்பிடமாகும். அவித்தையில் பிரதிபலிக்கும் பிரம்ம சொரூப சாயை (கூடஸ்தன்) ஜீவராசிகளாகும். சுசுப்தியை அனுமானிக்கும் ஜீவர்களுக்கு பிராஞ்ஞன் என்று பெயராகும்.

(சமஷ்டிகாரண பிரதிபிம்ப சைதன்யம் ஈசுவரன். வியஷ்டி காரண பிரதிபிம்ப சைதன்யன் ஜீவன் (பிராஞ்ஞன்))

(பிராஞ்ஞன் = அறிஞன், சமர்த்தன், பண்டிதன்.)

★★★

## 27.

**அழுக்கொடு பற்றும் சீவர்க்கு அதுவே ஆநந்த கோசம்**
**சுழுத்திகா ரணச ரீரம் சொன்னதிம் மட்டும் மோகம்**
**முழுக்குணத் திரண்டால் வந்தமூலஆ ரோபம் சொன்னோம்**
**வழுத்துசூக் குமஆரோப வழியும் நீ மொழியக் கேளாய்.**

இரஜோ குணத்தில் பிரதிபலித்த பிரம்ம சொரூபம் நான், எனது என்னும் அறியாமையோடு (அவித்தை) கூடிய ஜீவனுக்கு ஆனந்தமய கோசமும் சுழுத்தி அவஸ்தையும் காரண சரீரமும் ஆகும். (மலின சத்துவமாயுள்ள அவித்தைகள் தோறும் தோன்றியுள்ள சித்தின் பிரதிபிம்பங்களேஜீவராசிகள்) இதுவரையில் அகங்காரத்தின் காரியமான சத்வகுண மாயையாலும், ரஜோகுண அவித்தையாலும் உண்டான காரண சரீர அத்தியாசத்தை உரைத்தோம். இனி சூக்கும பிரபஞ்ச அத்தியாசத்தைப் பற்றிக் கூறப்போவதை நீ கேட்பாயாக.

★★★

## 28.

**ஏமமா யாவி னோத ஈசனார் அருளி னாலே**
**பூமலி உயிர்கட்கு எல்லாம் போகசா தனம்உண் டாகத்**
**தாமத குணம்இ ரண்டு சத்தியாய்ப் பிரிந்து தோன்றும்**
**வீமம்ஆம் மூடல் என்றும் விவிதமாம் தோற்றம் என்றும்.**

மோகமாகிய மாயையை விளையாட்டாக உடைய ஈசனது அருளால் காரணமாயை, அவித்தையோடு கூடிய ஜீவர்களுக்கெல்லாம் போக சாதனங்கள் உண்டாகும் பொருட்டு தமோ குணத்தில் பிரதிபலித்தது. தமோகுணமானது ஆவரண சக்தி (மறைப்பு) என்றும்; விட்சேப சக்தி (தோற்றம்) என்றும் இரண்டு சக்திகளாகப் பிரிந்து தோன்றும்.

சூட்சும சரீரம் = போக சாதனம், அனுபவிக்கும் கருவி.

தூல சரீரம் = போக ஆயதனம் அனுபவிக்கும் இடமாகிய வீடு.

சிருஷ்டி 2 வகை

1. கிரம சிருஷ்டி - எறும்பு ஊர்வதுபோன்று படிப்படியாகத் தோன்றுவது.
2. உகபற் சிருஷ்டி - கனவில் பொருள்கள் தோன்றுவதுபோன்று எல்லாம் ஒரே சமயத்தில் தோன்றுவது.

பிறப்புக்கு தன்வினையும் (வியஷ்டி) பிறர் வினையும் (சமஷ்டி) காரணமாகிறது.

★★★

## 29.

**தோற்றம்ஆம் சத்தி தன்னில் சொல்லிய விண்ணாம் விண்ணின்**
**காற்றதாம் காற்றின் தீஆம் கனலில்நீர் நீரில் மண்ணாம்**
**போற்றும்இவ் ஐந்தும் நொய்ய பூதங்கள் என்று பேர்ஆம்**
**சாற்றுமற்று இவற்றில் போக சாதன தனுஉண் டாகும்.**

விட்சேப சக்தியிலிருந்து சப்த தன்மாத்திரையான ஆகாயம் உண்டாகும். ஆகாயத்தில் பரிச தன்மாத்திரையாகிய வாயு உண்டாகும். வாயுவில் ரூப தன்மாத்திரையாகிய அக்னி உண்டாகும். அக்னியில் ரச தன்மாத்திரையாகிய நீர் உண்டாகும். நீரில் கந்த தன்மாத்திரையாகிய நிலம் உண்டாகும். இந்த ஐந்து தன்மாத்திரைகளும் சூட்சும பூதங்கள் (அபஞ்சீகிருத பூதங்கள்) என்று பெயர் பெறும். இவற்றினின்றும் சூட்சும சரீரங்கள் உண்டாகும்.

தன்மாத்திரை = சூட்சும மூல தத்துவம், சூட்சுமமான வெளிப்பாடு. பூதபஞ்சகத்தின் குணம் முதலியன.

| பூதபஞ்சகம் | ஆகாயம் | வாயு | தீ | நீர் | மண் |
|---|---|---|---|---|---|
| 1. குணம் | சப்தம் | சப்தம்<br>ஸ்பரிசம் | சப்தம்<br>ஸ்பரிசம்<br>ரூபம் | சப்தம்<br>ஸ்பரிசம்<br>ரூபம்<br>ரசம் | சப்தம்<br>ஸ்பரிசம்<br>ரூபம்<br>ரசம்<br>கந்தம் |
| 2. செயல் | இடம் கொடுத்தல் | உலாவல் | பக்குவப் படுத்துதல் | திரட்டல் | பொறுத்தல் |
| 3. தர்மம் | வெளி | பரிசம் | வெப்பம் | நெகிழ்ச்சி | கடினம் |
| 4. அதிதேவதை | சதாசிவன் | மகேசன் | உருத்திரன் | விஷ்ணு | பிரமன் |

## 30.

***ஆதிமுக் குணம்இப் பூதம் அடங்கலும் தொடர்ந்து நிற்கும்***
***கோதில்வெண் குணத்தில் ஐந்து கூறுஉணர் கருவி ஆகும்***
***ஓதிய பின்னை ஐந்தும் உளம்புத்தி இரண்டாம் ஞான***
***சாதனம் ஆம்இவ் ஏழும் சற்குணப் பிரிவி னாலே.***

*சத்வம் ரஜஸ் தமஸ் என்னும் முக்குணங்களும் சூக்கும தன் மாத்திரைகள் ஐந்திலும் கூடியிருக்கும். சூட்சும பூதங்களினது சத்வ குணத்தில் கூடியிருக்கும் வியஷ்டியான ஐந்து பங்கும் ஐந்து ஞானேந்திரியங்களாக உருவாகும். சமஷ்டியான ஐந்து பங்கும் மனம் புத்தி என்னும் இரண்டு அந்தக்கரணங்கள் ஆகும். இவைகள் சத்வ அம்சமாதலால் இந்த ஏழும் அறிகருவிகளாகும்.*

| **ஞானேந்திரிய பஞ்சகம்** | **வியாபாரம் (தொழில்)** | **அதிதேவதை** | **ஸ்தானம் (இருப்பிடம்)** |
|---|---|---|---|
| 1. சுரோத்திரம் (காது) | கேட்டல் | திக்கு | காது |
| 2. துவக்கு (தோல்) | பரிசித்தல் | வாயு | உடம்பு (தோல்) |
| 3. சட்சு (கண்) | காணுதல் | சூரியன் | கண் |
| 4. சிங்குவை (நாக்கு) | ருசித்தல் | வருணன் | நாக்கு |
| 5. ஆக்கிராணம் (நாசி) | மோத்தல் | அசுவினி தேவதைகள் | மூக்கு |

| **அந்தக்கரண சதுட்டயம்** | **தொழில்** | **அதிதேவதை** | **இருப்பிடம்** |
|---|---|---|---|
| 1. மனம் | சங்கற்பவிகற்பம் | சந்திரன் | கண்டம் |
| 2. புத்தி | பதார்த்த நிச்சயம் | பிரமன் | முகம் |
| 3. சித்தம் | பதார்த்த சிந்தனை | விஷ்ணு | நாபி (தொப்புள்) |
| 4. அகங்காரம் | நானென்ற பிமானித்தல் | உருத்திரன் | சர்வாங்கமும் |

★★★

# 31.

**இராசத குணத்தில் வேறிட்டு எடுத்தகூ றைந்தும் ஐந்தும்**
**பிராணவா யுக்கள் என்றும் பெருந்தொழில் கருவி என்றும்**
**பராவிய பெயராம் இந்தப் பதினேழும் இலிங்க தேகம்**
**சுராசுரர் நரர்வி லங்காய்த் தோன்றிய உயிர்கட்கு எல்லாம்.**

சூட்சும பூதங்களினது ரஜோகுண சமஷ்டி அம்சத்திலிருந்து பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன் என்னும் ஐந்து பிராணன்களும்; வியஷ்டி அம்சத்திலிருந்து வாய், கை, கால், குதம், குய்யம் (குறி) என்னும் ஐந்து கர்மேந்திரியங்களும் உண்டாயின. அந்தக் கரணங்கள் இரண்டு, ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, பிராணன்கள் ஐந்து இந்த 17 தத்துவங்களும் சேர்ந்து இலிங்கதேகம் எனப்படும். (அந்தக்கரணங்கள் நான்கு என்று கூறி 19 தத்துவங்கள் என்றும் கூறுவார்கள்) இது தேவர், அசுரர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரங்கள் ஆகத்தோன்றிய உயிர்கள் அனைத்துக்கும் சூட்சும சரீரமாகும் (சுத்த சைதன்யத்தை உணர்ந்து கொள்வதற்கு சூட்சும சரீரம் அடையாளமாக இருப்பதால் லிங்கதேகம் எனப்படுகிறது)

★★★

| **பிராண பஞ்சகம்** | **வியாபாரம் (தொழில்)** | **அதிதேவதை** | **ஸ்தானம் (இருப்பிடம்)** |
|---|---|---|---|
| 1. பிராணன் | உசுவாச, நிசுவாசம் | விசிட்டன் | இருதயம் |
| 2. அபானன் | மல,மூத்திரம் கழித்தல் | விசுவகர்த்தா | குதம் |
| 3. சமானன் | அன்னரசத்தை உடல் முழுவதும் பகுத்துக் கொடுத்தல் | ஐயன் | நாபி |
| 4. உதானன் | வாந்தி செய்வித்தல் மரண சமயத்தில் உயிரைப் பிரிதல் | அஜன் | கண்டம் |
| 5. வியானன் | உடலைநிறுத்துவித்தல் | விசுவயோனி | சர்வாங்கமும் |

| கர்மேந்திரிய பஞ்சகம் | வியாபாரம் (தொழில்) | அதிதேவதை | ஸ்தானம் (இருப்பிடம்) |
|---|---|---|---|
| 1. வாக்கு | பேசுதல் | அக்னி | வாய் |
| 2. பாணி (கைகள்) | கொடுத்தல், வாங்குதல் | இந்திரன் | கை |
| 3. பாதம் | நடத்தல் | வாமனன் சூரியன் | கால் |
| 4. பாயுறு (குதம்) | மலம், சலம் விடுதல் | யமன் | குதம் |
| 5. உபத்தம் பிறப்பு உறுப்பு | சுகம் அனுபவித்தல் | பிரஜாபதி | ஆண், பெண் குறி |

★★★

## 32.

*இவ்வுடல் மருவும் சீவன் இலங்குதை சதன்என் றாவன்*
*இவ்வுடல் மருவும் ஈசன் இரணிய கர்ப்பன் ஆவன்*
*இவ்வுடல் இரண்டு பேர்க்கும் இலிங்கசூக் குமச ரீரம்*
*இவ்வுடல் கோசம் மூன்றாம் இதுகனா அவத்தை ஆமே.*

*வியஷ்டி சூட்சும சரீரத்தில் பொருந்திய ஜீவன் தைஜசன். சமஷ்டி சூட்சும சரீரத்தில் பொருந்திய ஈசுவரன் இரண்ய கர்ப்பன். தத்துவ வடிவமான இச்சரீரம் ஜீவன். ஈசுவரன் இருவருக்கும் இலிங்க தேகம் என்னும் சூட்சும சரீரமாகும். இதில் பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம் என்று மூன்று கோசங்கள் உள்ளன. இது சொப்பன அவஸ்தை (கனவுநிலை) ஆகும்.*

*தன்மாத்திரைகள் சூட்சுமமானவைகள். அவற்றின் தடிப்பு சூட்சும சரீரம்.*

*கர்மேந்திரியங்கள் + பிராணன் = பிராணமய கோசம்.*

*ஞானேந்திரியங்கள் + மனம் = மனோமய கோசம்.*

*ஞானேந்திரியங்கள் + புத்தி = விஞ்ஞானமய கோசம்.*

*இவைகள் பிராணன், மனம், புத்தியை மறைப்பதால் கோசங்கள் எனப்படுகின்றன.*

தைஜசன் = பிராதிபாசிக ஜீவன், சொப்பன கற்பிதன். சூரியன் முதலிய ஒளி பொருள்கள் இல்லாமலும் விளங்குபவன்.

இரண்ய கர்ப்பன் = மகா பிராணன், சூத்திரான்மா. பூத உற்பத்திக்குக் காரணமான உடம்பை உடையவன்.

★★★

## 33.

**சூக்கும சடம்இம் மட்டும் சொல்லினோம் இப்பால் தூலம்**
**ஆக்கும்ஆ ரோபம் தானும் அடைவினின் மொழியக் கேளாய்**
**தாக்கும்இவ் வுயிர்க்குத் தூல தனுவும்போ கமும்உண் டாகக்**
**காக்கும்அவ் வீசன் பஞ்சீ கரணங்கள் செய்தான் தானே.**

இதுவரையில் சூட்சும சரீரம் பற்றிச் சொன்னோம். இனி தூல பிரபஞ்சம், சூல தேகங்கள் தோன்றுகின்ற கற்பனையைக் கேட்பாயாக. சூட்சும சரீரத்தோடு கூடிய ஜீவர்களுக்கு அவரவர் கர்மங்களுக்குத் தக்கவாறு தூல சரீரங்களும் அவைகளுக்குத் தேவையான போகமும் உண்டாகும் பொருட்டு, உயிர்களை இரட்சிக்கும் ஈசுவரன் விட்சேப சக்தியிலிருந்து தோன்றிய சூட்சும பூத தன்மாத்திரைகளை பஞ்சீகரணம் செய்தான்.

பஞ்சீகரணம் = ஐம்பூதங்களையும் முறையாகப் பிரித்து தக்க அளவில் ஒன்றோடு ஒன்றை இணைத்தல்.

சூட்சும பூத தன்மாத்திரைகளின் கலப்பினால் நம்முடைய தூல உடலும், இப்பிரபஞ்சமும் உருவாகின்றன.

★★★

## 34.

**ஐந்துபூத மும்பத்து ஆக்கி அவைபாதி நந்நான்கு ஆக்கி**
**நந்துதம் பாதிவிட்டு நான்கொடு நான்கும் கூட்ட**
**வந்தன தூலபூதம் மகாபூதம் இவற்றி னின்றும்**
**தந்தன நான்காம் தூல தனுஅண்ட புவன போகம்.**

தமோ குணத்தில் தோன்றிய விட்சேப சக்தியிலிருந்து உருவாகிய சூட்சும பஞ்சபூதங்கள் ஒவ்வொன்றையும் பாதி பாதியாகச் செய்து (பத்தாக்கி) ஒவ்வொரு பாதியை விட்டுவிட்டு, மறுபாதிகள் ஒவ்வொன்றையும் நான்கு நான்கு பகுதிகளாகச் செய்து, தன் அம்சமான பாதியை விட்டு மற்ற நான்கோடு நான்கையும் சேர்க்க தூலபூதங்கள் உண்டாயின.

*அந்த தூல பூதங்களிலிருந்து சராயுஜம், அண்டஜம், சுவேதஜம், உற்பீஜம் என்னும் நால்வகை தூல சரீரங்களும்; அண்டங்களும் புவனங்களும், போகங்களும் உண்டாயின.*

*(தனு = தூல உடல்கள். அண்டம் = பஞ்சபூத சமஸ்டி. புவனம் = அண்டத்திலுள்ள கயிலாயம், வைகுண்டம், சொர்க்கம் முதலிய ஸ்தானங்கள்)*

*போகம் = சுகம், துக்கம் போன்ற அனுபவங்கள்.*

| ஆகாசம் 1/2 | |
|---|---|
| 1/8 வாயு | 1/8 அக்னி |
| 1/8 நீர் | 1/8 நிலம் |

| வாயு 1/2 | |
|---|---|
| 1/8 ஆகாசம் | 1/8 அக்னி |
| 1/8 நீர் | 1/8 நிலம் |

| அக்னி 1/2 | |
|---|---|
| 1/8 ஆகாசம் | 1/8 வாயு |
| 1/8 நீர் | 1/8 நிலம் |

| நீர் 1/2 | |
|---|---|
| 1/8 ஆகாசம் | 1/8 வாயு |
| 1/8 அக்னி | 1/8 நிலம் |

| நிலம் 1/2 | |
|---|---|
| 1/8 ஆகாசம் | 1/8 வாயு |
| 1/8 அக்னி | 1/8 நீர் |

அறிவியல் என்பது நேரில் பார்ப்பதையும், அனுமானத்தையும் அடிப்படையாகக் கொண்டது. நமது சாஸ்திரங்கள் அவைகளை முக்கிய பிரமாணங்களாக எடுத்துக் கொள்வதில்லை. ரிஷிகளின் வாக்கைத்தான் நாம் பிரமாணங்களாக எடுத்துக் கொள்கிறோம். இவைகளை பிரத்யட்சமாகவோ அனுமானமாகவோ தெரிந்துகொள்ள முடியாது என்பதை நாம் முதலில் தெரிந்துகொள்ள வேண்டும். தெரிந்த ஒரு விஷயத்தில் (உலகம்) இருக்கும் தெரியாத அம்சத்தைப் (ஆத்மா) பற்றிச் சொல்வது வேதம். மாயா சகித நிமித்த காரணனாகிய ஈசுவரனின் பிரதிபிம்ப அம்சம்தான் பஞ்சீகரணம் செய்கிறது. உயிருள்ள, அறிவுள்ள, உணர்ச்சியுள்ள ஒரு தத்துவம்தான் ஜடப்பொருளை இயக்க முடியும்.

★★★

## 35.

**தூலமே மருவும் சீவன் சொல்லிய விசுவன் ஆகும்**
**தூலமே மருவும் ஈசன் சொலும்விராட் புருடன் ஆகும்**
**தூலமே அன்ன கோசம் துன்னும்சாக் கிரஅு வத்தை**
**தூலகற் பனைஈ தென்று தொகுத்தது மனத்திற் கொள்வாய்.**

வியஷ்டி தூலதேகத்தில் அபிமானிக்கிற ஜீவன் விசுவன் எனப்படுகிறான். சமஷ்டி தூலதேகங்களில் அபிமானிக்கிற ஈசுவரன் விராட்புருஷன் எனப்படுகிறான். இருவருக்கும் தூலதேகம் அன்னமய கோசம் எனப்படும். அது அன்னத்தினால் உண்டாவதால் அன்னமய கோசம் எனப்படுகிறது. இது அகக்கரணமும், புறக்கரணமும் சம்பூர்ணமாக வியவகரிக்கும் சாக்கிர அவஸ்தையாகும். இதுவரை தூல பிரபஞ்ச அத்தியாசம் கூறப்பட்டது. இதை மனதில் கொள்வாயாக. (காரண சரீரம் சுழுத்தி அவஸ்தையும், சூக்கும சரீரம் சொப்பன அவஸ்தையும் தூல சரீரம் சாக்கிர அவஸ்தையும் நிகழுமிடமாகும். விசுவன் = தேக, இந்திரியங்களில் வியாபித்திருப்பவன். விராட்புருஷன் = சராசர வடிவப் பிரபஞ்சத்தை அங்கமாகவுடையவன்)

★★★

## 36.

*சீரிய ஈச னார்க்கும் சீவர்க்கும் உபாதி ஒன்றேல்*

*ஆரிய குருவே பேதம் அறிவதெப் படிஎன் றக்கால்*

*காரிய உபாதி சீவன் காரண உபாதி ஈசன்*

*வீரியம் மிகுச மட்டி வியட்டியால் பேத மாமே.*

குருநாதா! சிறப்புமிக்க ஈசனுக்கும், ஜீவனுக்கும் தூல, சூக்கும, சரீர வடிவ உபாதி ஒன்றே என்றால் அவர்களிடையே வேற்றுமையை அறிவது எங்ஙனம்? குருவே! என்று வினவினால் காரண (சமஷ்டி) உபாதி உடையவன் ஈசுவரன். காரிய (வியஷ்டி) உபாதி உடையவன் ஜீவன். ஈசனுக்கு உபாதியாயுள்ள மாயை காரண உபாதி என்றும்; ஜீவனுக்கு உபாதியாக உள்ள அவித்தையை காரிய உபாதி என்றும் கூறுவார்கள்.

★★★

## 37.

*மரங்கள்போல் வியட்டி பேதம் வனம்எனல் சமட்டிபேதம்*

*சரங்கள்தா வரங்கள் பேதத் தனியுடல் வியட்டி என்பார்*

*பரம்பிய எல்லாம் கூட்டிப் பார்ப்பதே சமட்டி என்பார்*

*இரங்கிய பலசீ வர்க்கும் ஈசர்க்கும் பேதம் ஈதே.*

ஒரு வனத்திலுள்ள மரங்களில் இது ஒரு மரம்; இது ஒரு மரம் என்று தனித்தனியாகப் பார்ப்பது போன்றது வியஷ்டி பேதம். எல்லா மரங்களையும் சேர்த்து வனம் என்று கூறுவது போன்றது சமஷ்டி பேதம். எல்லா ஜீவர்களின் (சர அசர) தனித்தனி சரீரங்களை வியஷ்டி என்று சொல்வார்கள். தூலதேகங்கள் அனைத்தையும் சேர்த்துக் காண்பதை (பிரபஞ்சம்) சமஷ்டி என்பார்கள். ஜீவர்களுக்கும், ஈசுவரனுக்கும் இதுதான் வேற்றுமை.

*(சரம் = மனிதர், விலங்குகள், நகர்வன. அசரம் = மரங்கள், மலைகள், நகராதவை)*

★★★

## 38.

*கற்பனை வந்த வாறு காட்டினோம் காண்ப எல்லாம்*
*சொற்பனம் போலும் என்றே துணிந்தவன் ஞானி ஆவான்*
*செற்புதை மழைக்கா லம்போய்த் தெளிந்த ஆகாசம் போலும்*
*அற்புத முத்தி சேரும் அபவாத வழியும் கேளாய்.*

அத்தியாரோபமான (கற்பனை) சிருஷ்டி உண்டான முறையை அறிந்தோம் இவ்வுலகத்தில், காண்பான் காட்சி காணப்படும் பொருள் என்னும் எல்லாவற்றையும், கனவுபோலக் கருதி சந்தேகமறத் தெளிந்தவன் ஞானியாவான். மேகம் நிறைந்திருந்த மழைக்காலம் நீங்கிச் சரத் காலத்தில் தெளிந்த ஆகாயம் போல சர்வதுக்க நிவர்த்தியும், பரமானந்த பிராப்தியுமான மோட்சமடைவதற்குரிய அபவாத வழியினை நீ இனிக் கேட்பாயாக.

## 39.

*அரவன்று கயிறென் றாற்போல் ஆளன்று தறிஎன் றாற்போல்*
*குரவன்சொல் உபதேசத்தால் கூறும்நூல் ஒளியைக் கொண்டு*
*புரம் அன்று புவனம் அன்று பூதங்கள் அன்று ஞானத்*
*திரம்என்னும் பிரமம் என்று தெளிவதே அபவா தம்காண்.*

கயிற்றைப் பாம்பாகக் கண்டவன், இது பாம்பன்று கயிறுதான் என்று தெளிவதுபோலும்; மரக்கட்டையை மனிதன் என்று நினைத்தவன் உண்மையைப் புரிந்து இது மனிதன் அல்ல மரக்கட்டை என்று தெளிவது போலும்; குருவினுடைய உபதேசத்தாலும் வேத தத்துவ நூல் விசாரணையாலும் இவ்வாத்மாவானது தூல சூக்கும காரண தேகமல்ல, புவனங்கள் அல்ல, பஞ்சபூதங்களும் அல்ல, அவைகளுக்கு அதிஷ்டானமாக விளங்கும் சாஸ்வத சின்மாத்ரவடிவ பிரம்மமே என்று சந்தேகமின்றி தெளிவு அடைவதுதான் அபவாதமாகும்.

## 40.

*படமும்நூ லும்போல் செய்த பணியும்பொன் னும்போல் பார்க்கின்*
*கடமும்மண் ணும்போல் ஒன்றாம் காரிய கார ணங்கள்*
*உடல்முதல் சுபாவம் ஈறா ஒன்றில்ஒன் றுதித்த ஆறே*
*அடைவினில் ஒடுக்கிக் காண்ப தபவாத உபாயம் ஆமே.*

காரியமாகிய இப்பிரபஞ்சத்தையும், இதற்குக் காரணமான பிரம்ம சொரூபத்தையும் சுருதி, யுக்தி, அனுபவ வாயிலாக ஆராய்ந்து

பார்க்கின்றபொழுது அவை, ஆடையும் அதற்குக் காரணமான நூலும் போலவும்; நகையும், அதற்குக் காரணமான தங்கமும் போலவும்; குடமும் அதற்குக் காரணமான களிமண்ணும் போலவும் பார்ப்பதற்குப் பேதமாகவும்; உண்மையில் வேற்றுமையில்லாத காரியமும் காரணமுமாக ஒன்றாகவே காணப்படுகின்றன. தூலதேகம் முதல் பிரகிருதி பரியந்தம் ஒன்றில் ஒன்று உண்டான பிரகாரம் முறையாக ஆராய்ந்து சுத்த பிரம்மத்தைத் தவிர வேறு ஒன்றும் இல்லை என்று தெளிவது அபவாதத்தை அடையும் வழியாகும். (நம்மிலிருந்து உருவாகின்ற விருத்தியை ஒடுக்கி நிலை நிறுத்தும் பொழுது பிரம்ம சொரூபம் ஆகிறோம்).

★★★

## 41.

தூடண தமத்தில் வந்த தோற்றமாம் சத்தி செய்யும்
ஏடணை விகாரம் சொன்னீர் இரண்டுசத் திகள்என் றீரே
மூடலாம் சத்தி செய்யும் மோகமும் சொல்லும் ஐயா
கேடறக் குருவே என்னக் கிருபையோ டருள்செய் வாரே.

தீமைகளை அகற்றிய குருநாதா! தாங்கள் இதுவரை வெறுக்கத் தக்க தமோ குணத்தில் உண்டான விட்சேப சத்தி உண்டாக்கும் விருப்பத்திற்கு இடமான பிரபஞ்சம் பற்றி சொன்னீர். தமோ குணத்தில் தோன்றிய விட்சேப சக்தி, ஆவரண சக்தி என்று இரண்டு சக்திகள் சொன்னீரே, அந்த ஆவரண சக்தி செய்யும் மயக்கத்தையும் கூறி அருளல் வேண்டும் என்று சீடன் விண்ணப்பித்தான். கருணையோடு குரு கூறத் தொடங்கினார்.

★★★

## 42.

தான்நிகர் தனக்காம் ஈசன் தனையும்தாம் கண்ட
ஞானிகள் தமையும் அன்றி நாஸ்திந பாதி என்னும்
ஊனிடை உயிர்கள் உள்ளத்து உணர்விழி குருடு ஆம் வண்ணம்
வான்நிலம் திசைகள் மூடும் மழைநிசி இருள்போல் மூடும்.

அன்பனே! தனக்குத்தானே சமானமாகிய ஈசனையும், தங்களைத் தாங்களே பிரம்மம் என்று கண்டுணர்ந்த ஞானிகளையும் ஆவரண

சக்தி மறைக்காது. தூல தேகத்தில் வாழும் ஜீவர்களையெல்லாம் பிரம்மம் என்பது இல்லை இருந்தால் வெளியே தோன்றுமே என்று அவர்களுடைய உள்ளத்தில் பிரம்ம சொரூபத்தை உணரமுடியாமல் குருடு ஆக்கும் வண்ணம் விண், மண், திக்குகளை கண்களுக்குத் தெரியாமல் மூடுகின்ற கார்காலத்து இரவின் இருளைப் போல ஆவரண சக்தி மறைக்கும்.

★★★

## 43.

**பூன்றம்ஆம் பிரமத் துக்கும் புறத்துள விகாரங் கட்கும்**
**ஆன்றகூ டத்த னுக்கும் அகத்துள விகாரங் கட்கும்**
**தோன்றிய பேதம் சற்றும் தோன்றாமல் மறைத்து மூடும்**
**ஊன்றிய பவவி யாதி உண்டாக்கும் உபாதி ஈதே.**

பூரணமான பிரம்ம சொரூபத்துக்கும், புறத்தில் உள்ள ஈசன் முதலிய வேறுபாடுகளுக்கும், அறிவுருவான கூடஸ்தனுக்கும், அகத்திலுள்ள ஜீவன் முதலிய வேறுபாடுகளுக்கும் உண்டான சித் ஜட பேதங்களைச் சிறிதுகூட தோன்றாமல் ஆவரண சக்தி மறைத்து விடுகிறது. அதனால் பிறவிப்பிணியை உண்டாக்கும் உபாதியாக இந்த ஆவரண சக்தி விளங்குகிறது.

★★★

## 44.

**ஆதாரம் மறைந்து போனால் ஆரோபம் எங்கே தோன்றும்**
**ஆதாரம் மறையதாகில் ஆரோபம் இலையே என்றால்**
**ஆதாரம் சமம்வி சேடம் ஆமென இரண்டு கூறாம்**
**ஆதாரம் சமமாம் எங்கும் ஆரோபம் விசேடம் ஆமே.**

சீடனே! ஆவரண சக்தியின் மறைப்பினால் ஆதாரமாகிய பிரம்ம சொரூபம் (பிம்பம்) மறைந்து போகுமானால் அதிலிருந்து தோன்றும் ஆரோபமாகிய இப்பிரபஞ்சம் (பிரதிபிம்பம்) எவ்வாறு தோன்றும்? ஆவரண சக்தியால் பிரம்ம சொரூபம் மறையாது என்றால் இப்பிரபஞ்சம் தோன்றுவதற்குக் காரணம் இல்லையே என்று நீ கேட்பாயாகில், ஆதாரத்தை சமம், விசேடம் என்று இரண்டு பிரிவுகளாக

பிரிக்கலாம். மூல ஆதாரத்தை சம ஆதாரம் என்றும், ஆரோபத்தை (கற்பனை) விசேட ஆதாரம் என்றும் கூறலாம். (ஆரோபம் - உடல், மனம், புத்தி) அஞ்ஞானத்திலும் ஞானத்திலும் எது இருக்கிறதோ அது சமம். (சம ஆதாரம் = அதிஷ்டானம்) அஞ்ஞான காலத்தில் இல்லாமல் ஞானகாலத்தில் தோன்றுவது விசேசம். அஞ்ஞான காலத்தில் இருந்து ஞானகாலத்தில் மறைவது ஆரோபம் (கற்பிதம்).

★★★

## 45.

*சகமதில் இதுவென் சுட்டாம் சமானந்தான் மறைந்தி டாது*
*மிகஇது கயிறாம் என்னும் விசேடந்தான் மறைந்து போகும்*
*அகம்எனும் சமானம் தன்னை அஞ்ஞானம் மறைத்திடாது*
*பகர்விசே டம்அதாம் சீவன் பரம் எனும் அதனைமூடும்.*

மங்கிய வெளிச்சத்தில் கயிற்றைப் பார்த்து 'இது' பாம்பு என்று சொல்லும்போது இது என்று சுட்டப்படுவதான சாமானிய வடிவம் மறையாது. கயிறு என்னும் விசேச வடிவம் மறைந்து விடுகிறது. அதுபோல கற்பித விசேச வடிவ ஜீவன், 'நான் இருக்கிறேன்' என்பதில் ஆவரணமானது நானென்னும் சாமானிய வடிவ ஆதாரத்தை மறைக்காது. நான் பூர்ணானந்த வடிவினன் (பிரம்மம்) என்னும் விசேச வடிவ ஆதாரத்தை மறைக்கின்றது. அவ்வாறு மறைப்பதனால் ஆவரண சக்தி பிறவிப் பிணிக்கு ஏதுவாகிறது.

★★★

## 46.

*கேவல நிலைதோன் றாமல் கெடுத்தது பஞ்ச கோசம்*
*சீவனும் சகத்தும் ஆகிச் செனித்தவிட் சேபம் அன்றோ*
*ஆவர ணம்தா னேபாழ் அனர்த்தம்என் றுரைத்த தேதோ*
*மேவரு குருவே என்று வினாவிடின் மகனே கேளாய்.*

அடைதற்கரிய ஆசாரியரே! முத்தி நிலை தெளிவாக விளங்காமல் மறைத்துக் கெடுத்தது பஞ்சகோசங்களும் அவற்றின் அபிமானியான சிதாபாசனாகவும், இப்பிரபஞ்சமாகவும் உருவெடுத்த விட்சேப சக்தி அல்லவா? அப்படி இருக்க தாங்கள் ஆவரண சக்தியை பாழ் எனவும்,

அனர்த்தம் எனவும் வெறுத்துச் சொல்லிய காரணம் என்ன? என்று கேட்ட மாணாக்கனுக்கு குருவானவர் அருமை மகனே! நீ கேட்பாயாக என்று பதில் கூறத் தொடங்கினார்.

★★★

## 47.

**தோற்றமாம் சக்தி தானும் துன்பம்ஆம் பவம்ஆ னாலும்**
**ஆற்றலால் முத்தி சேர்வார்க் கனுகூலம் ஆகும் காண்நீ**
**ஊற்றம் ஆம் பகற்கா லம்போல் உபகாரம் நிசியால் உண்டோ**
**மாற்றம்என் உரைப்பேன் மைந்தா மறைப்பது மிகப்பொல் லாதே.**

விக்ஷேப சக்தி துன்பமயமான பிறப்புக்குக் காரணமாக இருக்கிறது. ஆனாலும் தமது முயற்சியினால் சிரவணாதி சாதனைகள் செய்து முக்தி அடைய விரும்பும் விவேகிகளுக்கு குரு சாஸ்திரம் கூறும் உண்மைகளை கடைபிடிக்க அது மிகவும் உதவியாக இருக்கிறது. அறிவதற்கு உதவியாக இருக்கும் பகல்காலம் போல இரவுக்காலத்தில் பயன் கிடைக்காது. ஆகவே மகனே! முயற்சிக்குத் தடையாக இருந்து தடுத்து மறைக்கும் ஆவரண சக்திதான் பொல்லாதது ஆகும்.

★★★

## 48.

**சுழுத்தியில் பிரள யத்தில் தோற்றம்ஆம் சகங்கள் மாண்டும்**
**அழுத்திய பவம்போய் முத்தி அடைந்தவர் ஒருவர் உண்டோ**
**முழுத்தவிட் சேபம் எல்லாம் முத்தியில் கூட்டு கிற்கும்**
**கொழுத்தஆ வரணம் முத்தி கூடாமல் கெடுத்த கேடே.**

நாள்தோறும் உண்டாகும் நித்திய பிரளயம் எனப்படும் சுழுத்தி அவஸ்தையிலும், பிரம்மப் பிரளயத்திலும் விட்சேப சக்தியால் உண்டாக்கப்பட்ட இப்பிரபஞ்சம் இல்லாமல் போகிறது. அப்பொழுது துன்பமாகிய பிறப்பு நீங்கி முக்தி அடைந்தவர் ஒருவருமில்லை. ஆனால் முயற்சிக்கு உரிய விட்சேப சக்தி முக்தியில் சேர்க்கும். ஆனால் அறியாமை மிகுந்த ஆவரண சக்தி முக்தியில் சேராமல் தடுத்து விடும்.

★★★

## 49.

**சுத்தியில் வெள்ளி போலத் தோன்றிய தோற்றம் ஆன**
**சத்தியும் பொய்யே என்றால் சத்திசா தனமா வந்த**
**முத்தியும் பொய்யாம் என்னின் மோகநிந் திரைவி லங்கால்**
**நித்திரை தெளியு மாபோல் நிருவாண நிலைமெய் யாமே.**

சிப்பியில் தோன்றுகின்ற வெள்ளிப் போன்று பிரம்மத்திடம் தோன்றிய ஆரோப சக்தியும் மித்தை (பொய்) என்றால் அந்த விட்சேப சத்திரூபமான குரு சாஸ்திரம் முதலிய சாதனங்களால் உண்டான மோட்சமும் மித்தைதானே என்றால், தூக்கத்தில் பொய்வடிவான கனவில் கண்ட மிருகங்களால் தூக்கம் கலைந்து விழிப்பு வருவது போல விட்சேப சக்தியின் உதவியினால் குரு சாஸ்திரங்களால் அடைகின்ற முக்தி உண்மை ஆகும்.

★★★

## 50.

**இம்பரில் நஞ்சை நஞ்சால் இரும்பினை இரும்பால் எய்யும்**
**அம்பினை அம்பால் பற்றும் அழுக்கினை அழுக்கால் மாய்ப்பர்**
**வம்பியல் மாயை தன்னை மாயையால் மாய்ப்பர் பின்னை**
**தம்பமாம் அதுவும்கூடச் சவம்சுடு தடிபோல் போமே.**

இவ்வுலகில் விஷத்தை அதற்கு எதிரி சக்தியான வேறொரு விஷத்தினாலும்; இரும்பை அதற்கு எதிர் சக்தியான அரத்தினாலும், பகைவனுடைய அம்பினை அதற்கு எதிரான அம்பினாலும், ஆடைகளில் படிந்த அழுக்கை அதற்கு எதிரான உவர் மண்ணினாலும் கெடுத்து அழிப்பது போல, ஆத்ம விசாரமுடையவர்கள் அசுத்த மாயையை அதற்கு எதிர்நிலையான சுத்த மாயையைக் கொண்டு ஒழிப்பார்கள். பின்பு அந்த சுத்த மாயையையும், பிணத்தைச் சுடப் பயன்படுத்திய தடி, பிணம் சுட்டபின்பு அப்பிணத்தோடு அழிக்கப் படுவது போன்று அசுத்த மாயையோடு சேர்த்து சுத்த மாயையும் அழிந்து போகும்.

★★★

## 51.

இந்தமா யையினால் சீவர்க்கு ஏழுஅவத் தைகளுண் டாகும்
அந்தஏழ் அவத்தை தம்மை அடைவினின் மொழியக் கேளாய்
முந்தஅஞ் ஞானம் மூடல் முளைத்தல்கா ணாத ஞானம்
சந்ததம் கண்ட ஞானம் தழல்கெடல் குளிர்மை ஆதல்.

இந்த மாயையினால் ஜீவர்களுக்கு 1. அஞ்ஞானம் (அறியாமை), 2. ஆவரணம் (மறைப்பு), 3. விட்சேபம் (உண்டாகுதல்), 4. பரோட்ச ஞானம் (காணாத ஞானம்), 5. அபரோட்ச ஞானம் (பிரத்யட்ச அனுபவ ஞானம்), 6. துக்க நிவர்த்தி (தழல் கெடல்), 7. தடையற்ற ஆனந்தம் என்னும் ஏழு அவஸ்தைகள் உண்டாகும்.

★★★

## 52.

பிரமாம் தனைம றந்த பேதமை யேஅஞ் ஞானம்
பரன்இலை காணோம் என்று பகர்தல்ஆ வரணம் மூடல்
நரன்ஒரு கருத்தால் சீவன் நான்என முளைத்தல் தோற்றம்
குரவன்வாக் கியத்தால் தன்னைக் குறிக்கொளல் பரோட்ச ஞானம்.

1. பிரம்ம சொரூபமான தன்னை மறந்த அறியாமை அஞ்ஞானம்.
2. பிரம்மம் இல்லை இருந்தால் தெரியுமே என்பது ஆவரணம் (மூடல்)
3. நான் ஜீவன் என்று எண்ணுவது விட்சேபம்
4. குருவினுடைய உபதேசத்தால் பிரம்மத்தை நான் - காண்பவன், பிரம்மம் - காணப்படும் பொருள் என்று குறிப்பாகத் தெரிந்து கொள்வது பரோட்ச ஞானம்.

(பிரம்மம் இல்லை என்ற ஆவரணம் அழிந்துவிட்டது. குரு, சாஸ்திரம் பொய் சொல்லாது. ''நான் பிரம்மம் என்பதை நம்புகிறேன்'' என்பது காணாத ஞானம். இன்னும் சந்தேகம் இருக்கிறது).

★★★

## 53.

தத்துவ விசாரம் செய்து சகலசந் தேக மும்போய்
அத்துவி தம்தான் ஆதல் அபரோட்ச ஞானம் ஆகும்
கர்த்தனாம் சீவ பேதம் கழிவதே துக்கம் போதல்
முத்தனாய் எல்லாம் செய்து முடிந்தது ஆநந்தம் ஆமே.

5. நீயே பிரம்மம் என்னும் மகாவாக்கியத்தினால் தத்துவ விசாரஞ் செய்து சகலவிதமான சந்தேகங்களும் நீங்கி கூடஸ்த பிரம்மம். ஐக்கியமான (ஜீவ பிரம்ம ஐக்கியம்) அத்துவித ஸ்வரூபானந்தனாக விளங்குவது அபரோக்ஷ ஞானம்.

6. நான் கர்த்தா போக்தா என்னும் ஜீவத்துவம் நீங்குவதே துக்க நிவர்த்தியாகும்.

7. சகலதுன்பங்களிலிருந்தும் விடுபட்டவனாய், செய்ய வேண்டியவை அனைத்தையும் செய்துமுடித்து அடையவேண்டியவை அனைத்தும் அடைந்து விட்டேன் என்னும் திருப்தி தடையற்ற ஆனந்தம் ஆகும்.

★★★

## 54.

இதுநினக்கு அறியும் வண்ணம் இப்படி ஒருதிட் டாந்தம்
புதுமையாம் கதைகேள் பத்துப் புருடர்ஓர் ஆற்றை நீந்தி
உதகதீ ரத்தில் ஏறி ஒருவன்ஒன் பதுபேர் எண்ணி
அதனொடு தசமன் தான்என்று அறியாமல் மயங்கி நின்றான்.

இதுவரை கூறப்பட்ட ஜீவ அவஸ்தைகளை நீ அறியும்படியாக வியப்பான ஒரு கதை கூறுகிறேன். பத்துப்பேர் ஒரு நதியை நீந்திக் கடந்து அதன் மறுகரையில் ஏறினார்கள். அவர்களில் ஒருவன் தன்னை விட்டுவிட்டு ஏனைய ஒன்பது பேரை எண்ணி, அவ்வொன்பது பேரோடு பத்தாமவன் தான் என்று அறியாமல் மயங்கி நின்றான்.

★★★

## 55.

**அறியாத மயல்அஞ் ஞானம் அவன்இல்லை காணோம் என்றல்**
**பிறியாஆ வரணம் ஆகும் பீழைகொண்டு அழல்விட் சேபம்**
**நெறியாளன் தசமன் உண்டு நிற்கின்றான் என்ற சொல்லைக்**
**குறியாக எண்ணி நெஞ்சில் கொள்வது பரோட்ச ஞானம்.**

ஒன்பதுபேரை எண்ணி தன்னைப் பத்தாமவன் என்று அறியாத மயக்கம் அஞ்ஞானம் ஆகும். பத்தாமவன் இல்லை. இருந்தால் காண்பேனே,அவன் இங்கு காணோம் என்பது அறியாமை நீங்காத ஆவரணம். பத்தாமவன் ஆற்றில் இறந்துவிட்டான் என்று துக்கம் கொண்டு அழுது அரற்றுதல் விட்சேபம். வழியில் செல்லும் அறிஞன் பத்தாமவன் இறக்கவில்லை, இங்கு இருக்கிறான் என்று சொல்லியதை நம்பி ஆறுதல் அடைவது பரோட்ச ஞானம்.

★★★

## 56.

**புண்ணிய பதிகன் பின்னும் புருடர்ஒன் பதின்மர் தம்மை**
**எண்ணும்நீ தசமன் ஆவை என்னவே தன்னைக் காணல்**
**கண்ணினில் கண்ட ஞானம் கரைதல்போ வதுநோய் போதல்**
**திண்ணிய மனதில் ஐயம் தெளிதல்ஆ னந்தம் ஆமே.**

புண்ணியவானான வழிச்செல்வோன் பின்பு அவர்களைப் பார்த்து, ஒன்பது பேர்களை எண்ணின நீ பத்தாமவன் ஆவாய் என்று உணர்த்தவே தன்னைப் பத்தாமவன் என்று தெளிவாக அறிந்து கொண்டது அபரோட்ச ஞானமாகும். அதனால் வருத்தமும், சோகமும் நீங்கியது துக்க நிவர்த்தி ஆகும். சந்தேகம் நீங்கி மனம் உறுதியடைதல் தடையற்ற ஆனந்தமாகும்.

★★★

## 57.

**தசுபுமான் தனைக்கண் டாற்போல் சற்குரு மூர்த்தி யேஎன்**
**நிசவடி வினையான் காண நீர்காட்டல் வேண்டும் என்றான்**
**சுசிபெறும் இலட்சி யார்த்தம் துவம்பதம் தத்ப தங்கட்கு**
**அசிபத ஐக்கியம் செய்யும் அதுசெயும் உண்மை கேளாய்.**

'ஆசாரிய மூர்த்தியே! பத்தாமவன் தன்னைக் கண்டு ஆனந்தமடைந்தாற் போல சற்குருவே! நானும் எனது நிஜவடிவான பிரம்ம சொரூபத்தைக் கண்டு ஆனந்தமடையும்படி தேவரீர் காட்டி அருளவேண்டும்' என்று விண்ணப்பித்தான். குருவானவர் 'அன்பனே! சாம வேதத்தின் சாந்தோக்கிய உபநிடதத்தின் ஆறாவது பிரிவிலுள்ள 'தத்துவமசி' (நீ அதுவாக இருக்கிறாய்) என்னும் மகாவாக்கியமானது 'துவம்பத', 'தத்'பதங்களின் இலட்சியார்த்தங்களுக்கு 'அசிபத' பொருளான ஐக்கியத்தை விட்டுவிடாத இலட்சணையினால் போதிக்கின்றது. அது அவ்வாறு போதிக்கும் தத்துவ அர்த்தத்தைக் கூறுகின்றேன் கேட்பாயாக.

★★★

## 58.

**விண் ஒன்றை மகாவிண் என்றும் மேகவிண் என்றும் பாரில்**
**மண் ஒன்று கடவிண் என்றும் மருவிய சலவிண் என்றும்**
**எண்ணும்கற் பனைபோல் ஒன்றே எங்கும்ஆப் பிரமம் ஈசன்**
**நண்ணும்கூ டத்தன் சீவன் நான்குசை தந்யம் ஆமே.**

ஆகாயம் ஒன்றுதான். அது உபாதியினால் மகா ஆகாயம் என்றும் மேக ஆகாயம் என்றும், (மண்) குடத்தில் தோன்றும் குட ஆகாயம் என்றும், அதிலுள்ள நீரில் தோன்றும் நீர் ஆகாயம் என்றும் பிரித்து சொல்லப்படுகிறது. அது உண்மை அல்ல கற்பனை ஆகும். அதுபோல ஒரே பரம்பொருள் பிரம்மம், ஈசுவரன், கூடஸ்தன், ஜீவன் என்று நான்கு பிரிவாக கற்பிதமாகக் கூறப்படுகிறது. இந்நான்கும் உண்மையில் சைதன்யம் என்கிற பிரம்மமே ஆகும்.

★★★

## 59.

**பூச்சிய ஈசன்சீவன் புகல்பதம் இரண்டினுக்கும்**
**வாச்சியம் லட்சி யந்தான் மலம்இலாப் பிரமம் ஆன்மா**
**காய்ச்சிய பாலில் நெய்போல் கலந்தொன்றாம் கடைந்தெ டுக்கும்**
**ஆச்சியம் என்ன உன்னை அறிந்துநீ பிறிந்து கொள்ளே.**

அனைவராலும் வழிபடத்தக்க ஈசுவரனும், வழிபடும் ஜீவனும் மகாவாக்கியத்தில் சொல்லப்படும் 'தத்பத' 'துவம்பதங்கள்'.

இரண்டினுக்கும் வாச்சியார்த்தம் (சொல்லின் பொருள்) குற்றம் இல்லாத பிரம்மம், கூடஸ்தன் ஆகும். காய்ச்சிய பாலில் வெண்ணெய் கலந்து ஒன்றாய் இருப்பதுபோல அவைகளும் கலந்து ஒன்றாய் இருக்கின்றன. தயிரைக் கடைந்து பிரித்து எடுக்கப்படும் வெண்ணெய் போல விவேகத்தால் உன்னை அறிந்து நீ வாச்சியார்த்தத்திலிருந்து (உடல் நான் என்பதிலிருந்து) உன்னை வேறுபடுத்தி ஆத்மா என்று அறிந்துகொள்.

★★★

## 60.

***பிறிவதெப் படிஎன் றக்கால் பிணமாகும் உடல்நான் என்னும்***
***அறிவினைக் கொல்லல் வேண்டும் ஐம்பூத விகாரம் அன்றோ***
***வெறியதுஓர் துருத்தி மூக்கின் விடுவது போல்உன் மூக்கால்***
***எறிபிரா ணனும்நீ அல்லை இராசத குணவி காரம்.***

ஐயனே! அவ்வாறு பிரிந்திருக்கும் வழி எனக்கு விளங்க வில்லை. என்றால் அன்னத்தால் உண்டானதும், இறந்துபோகக் கூடியதுமான இவ்வுடல் பஞ்சபூத விகாரமாகும். இருத்தல், பிறத்தல், இறத்தல், மாறுதல், வளர்தல், தேய்தல் என்னும் ஆறு மாறுதல் களுக்கு உட்பட்ட இந்த உடலை நான் என்று எண்ணும் மயக்கத்தை அழிக்கவேண்டும். வெறும் தோல்துருத்தி தனது காற்றை விடுவது போல, உனது மூக்கினால் சுவாசிக்கும் பிராண வாயுவும், இரசோ குண விகாரம் என்று அறிந்து பிராணன் நான் என்னும் அறிவினை மாய்க்க வேண்டும்.

★★★

## 61.

***கரணம்ஆம் மனது புத்தி கர்த்தாவாம் அவைஆன் மாவோ***
***தரமுள இரண்டு கோசம் சத்துவ குணவி காரம்***
***வரம்அறு துயில்ஆ நந்த மயனையும் நான்என் னாதே***
***விரவிய தமஅஞ் ஞான விருத்தியின் விகாரம் ஆமே.***

கருவியாகிய மனமும், கர்த்தாவாகிய புத்தியும் நீ (ஆத்மா) அல்ல. சங்கற்பிக்கும் மனமும், நிச்சயிக்கும் புத்தியும் (மனோமய,

விஞ்ஞானமய கோசங்கள்) சத்வகுண காரியமாதலால் அவையும் நீ அல்ல. சுழுத்தியில் விளங்கும் தமோகுண அஞ்ஞான விருத்தியின் காரியமான ஆனந்தமய கோசமும் ஆத்மா அல்ல.

★★★

## 62.

சத்தொடு சித்து ஆநந்தம் சமம்திரம் சாட்சி ஏகம்
நித்தியம் வியாபி ஆன்மா நீஅது வாஅ றிந்து
பொத்தொடு சடம்துக் காதி பொருந்துபே தங்கள் ஆன
குத்திர பஞ்ச கோசக் குகைவிட்டு வெளியில் ஆவாய்.

அன்பனே! நீ சச்சிதாநந்தமாய், சமமாய், ஸ்திரமாய், சாட்சியாய், ஏகமாய், நித்யமாய், வியாபகமாய் விளங்கும் ஆத்மா என்று அறிந்துகொள். அனர்த்த ஜட துக்கம் முதலியவற்றை அடைகின்றதும், தம்முள் வேறுபாடுகள் உள்ளதுமான பஞ்சகோசமாகிய இந்த உடல் நான் அல்ல என்று அறிந்து அநாத்மாவான பஞ்சகோச குகையை விட்டு விலகி நிற்பாயாக. (ஞானத்தால் நீக்கமுடியாததும், மூன்று காலங்களிலும் இருப்பதும் 'சத்' ஆகும்).

★★★

## 63.

பஞ்சகோச சமும்விட் டப்பால் பார்க்கின்ற பொழுது பாழே
விஞ்சியது அதுஅல் லாமல் வேறொன்றும் தெரியக் காணேன்
அஞ்சன இருளை யோநான் அகம்என அநுப விப்பேன்
வஞ்சம்இல் குருவே என்ற மகன்மதி தெளியச் சொல்வார்.

உண்மையான ஆசாரியரே! ஐந்து கோசங்களால் ஆன மூன்று உடல்களையும், இது நானல்ல, இது நானல்ல என்று தாங்கள் அருளியபடியே நீக்கி அப்பால் பார்க்கின்றபொழுது சூனியம்தான் எஞ்சியுள்ளது. வேறு ஒன்றையும் நான் தெளிவாகக் காணவில்லை. அந்தக் காரிருள் போன்ற சூனியத்தையா ஆத்மா என்று அனுபவிக்க வேண்டும்? என்று கேட்ட தமது மகன் போன்ற சீடனுக்கு அறிவு தெளிவுறுமாறு குரு உபதேசிக்கத் தொடங்கினார்.

★★★

## 64.

**முன்புகல் தசமன் புத்தி மோகத்தால் எண்ணி எண்ணி**
**ஒன்பது பேரைக் கண்ட ஒருவன்ஆம் தனைக்கா ணாத**
**பின்பவன் இடையில் கண்ட பெரியபாழ் அவனோ பாராய்**
**அன்புள மகனே கண்ப தடங்கலும் காண்பான் நீயே.**

அன்புள்ள மகனே! முன்சொல்லிய கதையில் பத்தாமவன் தன்னுடைய புத்தி மயக்கத்தினால் ஒன்பது பேர்களை மட்டும் திரும்பத் திரும்ப எண்ணிப் பார்த்து, எண்ணியவனாகிய பத்தாமவனான தன்னைக் காணவில்லை என்று கண்ட நிலை சூனிய நிலை ஆகுமா? ஆகாது. அதுபோல காண்பவனாகிய உன்னையும், காணப்படும் பொருள் களையும், காட்சி ஆகிய மூன்று நிலைகளையும் காணும் சித்துப் பொருளான நீயே ஆத்மா ஆவாய்.

★★★

## 65.

**தூலசூக் குமஅஞ் ஞானம் தோன்றும்மூன் றவத்தை தாமும்**
**காலம்ஓர் மூன்றும் சன்மக் கடல்எழும் கல்லோ லங்கள்**
**போலவே வந்து வந்து போனஎத் தனைஎன் பேன்நான்**
**ஆல்அமர் கடவுள் ஆணை அவைக்குஎலாம் சாட்சி நீயே.**

மகனே! தூல சூட்சும காரண சரீரத் திரையங்களும், அவற்றைச் சார்ந்து உண்டாகிற சாக்கிர, சொப்பன, சுழுத்தி அவஸ்தா திரையங் களும், விஸ்வன், தைஜசன், பிராக்ஞன் என்ற மூன்று அபிமானிகளும், கழிந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய மூன்று காலங்களும் பிறவியாகிய பெருங்கடலில் எழுகின்ற பேரலைகளைப் போலவே உண்டாகி உண்டாகி அழிந்தன. அவ்வாறு தோன்றி மறைந்த பிறவிகள் எவ்வளவு என்று வரையறுத்துக் கூறமுடியாது. எனவே கல்லாலின் நிழலில் எழுந்தருளியுள்ள தட்சிணாமூர்த்தியின் மேல் சத்தியமாகச் சொல்கிறேன் அப்பிறவிகள் அனைத்துக்கும் ஆத்மாவாகிய நீயே சாட்சியாய் இருக்கிறாய்.

★★★

## 66.

***எல்லாம்கண்டு அறியும் என்னை ஏதுகொண்டுஅறிவேன் என்று***
***சொல்லாதே சுயமாய் சோதிச் சுடருக்குச் சுடர்வே றுண்டோ***
***பல்லார்முன் தசமன் தன்னைப் பார்ப்பதும் தனைக்கொண் டேதான்***
***அல்லாமல் பதினொன் றானும் அவனிடத் துண்டோ பாராய்.***

எல்லாவற்றையும் பார்க்கின்ற என்னை எதைக்கொண்டு அறிவேன்? என்று கேட்கிறாய். சுயஞ்ஜோதியான சூரியன், நட்சத்திரங்கள், தீபம் ஆகியவற்றின் பிரகாசத்தை அறிந்துகொள்ள வேறு பிரகாசம் தேவையா? இல்லையே. மேலே சொன்ன கதையில் பத்தாமவன் தன்னைக் கண்டது, தன்னைக் கொண்டுதானே. அதற்கு மாறாக பதினொன்றாமவன் ஒருவன் அவனிடத்தில் இருக்கிறானா? இல்லையே. அதுபோலவே உன்னை நீ அறிந்துகொள்வதற்கு வேறு ஒரு பிரகாசம் வேண்டுவதில்லை என்பதை நீ நன்றாக ஆராய்ந்து அறிவாயாக.

★★★

## 67.

***அறிவுக்கும் அறிவு செய்யும் அறிவுவேறு உண்டுஎன்று எண்ணும்***
***அறிவற்ற குதர்க்க மூடர்க்கு அனவஸ்தை பலமாய்த் தீரும்***
***அறிபடும் பொருள்நீ அல்லை அறிபடாப் பொருள்நீ அல்லை***
***அறிபொருள் ஆகும் உன்னை அநுபவித்து அறிவாய் நீயே.***

அறிவு வடிவமான உன்னைக் காண்பதற்கு வேறொரு ஞானம் வேண்டும் என்று கூறுவது மூடத்தனம் ஆகும். ஏனென்றால் அந்த ஞானத்தைக் காண இன்னுமொரு ஞானம் வேண்டும் என்று இது முடிவுபெறாமல் வரம்பின்றி போய்க் கொண்டேயிருக்கும், அனவஸ்தா தோஷமாகிவிடும். அறிபடு பொருளாகிய உலகமும் நீ அல்ல. அறிபடாப் பொருளாகிய மாயையும் நீ அல்ல. நீ இவ்விரண்டிற்கும் வேறாய் சுயம்பிரகாசமான அறிவு வடிவமாய் இருக்கிறாய். அப்படிப்பட்ட உன்னை நீயே உணர்ந்து, உன் உண்மை சொரூபத்தை அனுபவித்து அறியவேண்டும். (அனுபவம் = தன்னைப் பற்றிய அறிவு திடமாதல்).

★★★

## 68.

*மதுரம்ஆம் கட்டி சுட்ட மாப்பணி யாரம் எல்லாம்*
*மதுரம்ஆக் கியஅ தற்கு மதுரம்தான் சுபாவம் அன்றோ*
*அதுஇது எனும்ச டங்கள் அறிவாக அறிவைத் தந்தே*
*அதுஇது இரண்டும் ஆகா அகம்பொருள் அறிவாய் நீயே.*

வெல்லக்கட்டியை மாவில் சேர்த்து சுட்ட பலகாரங்களை யெல்லாம் அந்த வெல்லக்கட்டி இனிக்கச் செய்கிறது. அவ்வாறு இனிக்கச் செய்த அந்த வெல்லக்கட்டிக்கு இனிப்பு சுபாவம். அதுபோல காரணவடிவ மாயை, காரிய வடிவ உலகம் ஆகிய ஜடங்களை விளக்கிக் கொண்டிருக்கும் அறிவு வடிவமே நீயாகும். மாயை, உலகம் என்னும் இரண்டும் நீ அல்ல.அவற்றிற்கு வேறான அறிவாகிய நீயே 'அகம்' (நான்) என்ற பதத்தின் லட்சியார்த்தமாய் இருக்கின்றாய்.

★★★

## 69.

*இந்தநீ துவம்ப தத்தின் இலட்சியப் பொருளாம் என்றும்*
*பந்தம்இல் பிரம மேதற் பதந்தனில் இலட்சி யார்த்தம்*
*அந்தம்ஆம் சீவன்ஈசன் அவர்களே வாச்சி யார்த்தம்*
*சந்ததம் பேதம் ஆவார் தமக்கு அயிக் கியம்கூ டாதே.*

சரீரத்திரய விலட்சணமாய், பஞ்சகோசத்திற்கு அப்பாற்பட்டதாய் மூன்று அவஸ்தைகளுக்கு சாட்சியாய், அகம் பதத்தின் லட்சியார்த்த மாயுள்ள நீயே துவம்பத இலட்சியார்த்தமாவாய். ஒரு பொழுதும் பந்தமில்லாத பிரம்மமே தத்பத லட்சியார்த்தமாகும். துவம் பதத்துக்கு வாச்சியார்த்தம் ஜீவன். தத்பதத்தின் வாச்சியார்த்தம் ஈசுவரன். அடிப்படை தத்துவமான கூடஸ்த பிரம்மத்தை உணர்ந்தபின் ஜீவன், ஈசுவரன் என்பது பெயரளவில்தான் இருக்கும் அவர்களுக்குள் ஐக்கியம் ஏற்படாது. இதை நன்றாக யூகித்து அறிந்து கொள்வாயாக.

★★★

## 70.

பேதம்ஆ னதுவும் கேளாய் பெயராலும் இடங்க ளாலும்
ஓதரும் உபாதி யாலும் உடலாலும் உணர்வி னாலும்
பாதலம் விசும்பு போலப் பலதூரம் அகன்று நிற்பர்
ஆதலால் இவர்க்கெந் நாளும் ஐக்கியமென் பதுகூ டாதே.

ஜீவ ஈசுவரர்களுக்குண்டான பேதத்தைக் கேட்பாயாக. ஜீவன் ஈசுவரன் என்னும் பெயர்களாலும்; பிண்டம், அண்டம் என்னும் இடங்களாலும்; காரிய மாயை, காரண மாயை என்னும் உபாதிகளாலும்; வியஷ்டி, சமஷ்டி என்னும் உடல்களாலும்; அல்ப சக்தி, சர்வ சக்தி என்னும் உணர்வினாலும், ஜீவ ஈசுவரர்களுக்கு பேதமுண்டாயிற்று. அதனால் அவர்கள் பாதாளம், விண்ணுலகம் போல வெகுதூரம் வேறுபட்டுள்ளனர். இத்தன்மைகள் உள்ள இவர்களுக்கு எப்பொழுதும் ஐக்கியம் ஏற்படாது. (ஆனால், பிரம்மத்துக்கும் கூடஸ்தனுக்கும் ஐக்கியம் உண்டு).

★★★

## 71.

வடநூல்வல் லவர்கள் சொல்லும் வாக்கியப் பொருள்சே ராமல்
இடராகின் பொருளாம் வண்ணம் இலக்கண உரையால் கொள்வார்
திடமான அதுவும் மூன்றாச் செப்புவார் விட்ட தென்றும்
விடல்இலா தென்றும் விட்டு விடாதது என்றும்பே ராமே.

இலக்கண நூல்களையும், தர்க்க நூல்களையும் நன்குணர்ந்த வடமொழி நூலாசிரியர்கள் சுருதி, ஸ்மிருதி சாஸ்திரங்களில் சொல்லுகின்ற வாசகப் பொருள் பொருந்தவில்லை என்றால், அவ்வாசகப் பொருள் சரியான பொருள்தரும் வண்ணம் இலக்கணை என்னும் உரையால் பொருள் கொள்வார்கள். மிகவும் சக்திவாய்ந்த அவ்விலக்கணையை விட்ட இலக்கணை (ஜகல் லக்ஷணம்), விடாத இலக்கணை (அஜகல் லக்ஷணம்) விட்டும் விடாத இலக்கணை (ஜஹல் அஜஹல் லக்ஷணம்) என்று மூன்றுவிதமாகச் சொல்வார்கள் (எங்கு வாச்சியார்த்தம் (வாசகப் பொருள்) முரண்படுகிறதோ அங்குதான் இலட்சியார்த்தம் கொள்ள வேண்டும்)

★★★

## 72.

**கங்கையில் கோஷம் என்றும் கறுப்புச்சேப் போடு தென்றும்**
**தங்கிய சோயம் தேவ தத்தன்என் றும்சொல் வார்கள்**
**இங்குஉதா ரணங்கள் ஆக்கி இந்தமூன்று உரைக ளாலே**
**துங்கநூல் விரோதம் ஆன சொல்எலாம் பொருளாம் தானே.**

கங்கையில் இடைச்சேரி இருக்கிறது (விட்ட இலக்கணை) என்றும்; கறுப்பும் சிவப்பும் ஓடுகின்றன (விடாத இலக்கணை) என்றும்; நிற்கின்ற இவனே அவனான தேவதத்தன் (விட்டும் விடாத இலக்கணை) என்றும் கூறுவார்கள். இம்மூன்று வகைகளில் பெருமை பொருந்திய நூல்களில் பொருள் பொருந்தாமல் வேறுபடுகின்ற வாக்கியங்களுக்கெல்லாம் சரியான பொருள் கூறுவார்கள்.

கங்கையில் கோசம் = கங்கையிலிருந்து சப்தம் வராது. கரையிலுள்ள ஊரிலிருந்துதான் சப்தம் வரும். இதில் கங்கையை விட்டு, கரையிலுள்ள இடைச்சேரியை எடுத்துக் கொள்கிறோம். அதுபோல மூன்று சரீரங்களையும் விட்டு அவைகளுக்கு அதிஷ்டானமாகிய கூடஸ்த சைதன்யத்தை (துவம்) கட்டுவார்கள். இது விட்ட இலக்கணை ஆகும். (வாக்கியார்த்தப் பொருளை அடியோடு விட்டுவிட்டு வாக்கியார்த்தத்தின் சம்பந்தமாகிய வேறு பொருளை உணர்த்துவது)

கறுப்பு சிவப்பு ஓடுது = கருமையான பசுவும், செம்மையான குதிரையும் செல்லுகின்றன. இங்கு நிறங்களை விடாமல் பசுவையும், குதிரையையும் பொருள் கொள்கிறோம். கூடஸ்த சைதன்யத்தை விடாமல் பிரமத்தை (தத்பதத்தை) தரிசித்தல். இது விடாத இலக்கணை ஆகும். (வாக்கியார்த்தத்தை விடாமலேயே அதனோடு சம்பந்தப் பட்டிருக்கும் பொருளின் அர்த்தத்தை கிரகிப்பது).

★★★

## 73.

**பன்னிய சோயம் என்னும் பதங்களின் வாச்சி யார்த்தம்**
**அன்னிய தேசம் காலம் அவன்இவன் என்ப எல்லாம்**
**சொன்னஇவ் விரோதம் விட்டுத் தொடர் இலக்கியம்வி டாமல்**
**உன்னிடில் தேவ தத்தன் ஒருவனை வெளியாக் காட்டும்.**

முன்சொன்ன அவனே இவனென்னும் (சோயந்தேவதத்தன்) பதங்களுக்கு வாச்சியார்த்தமானது அந்தக் காலத்தில் அந்த ஊரில்

இருந்த தேவதத்தனே இவன் என்பதில் வேறான தேசமும், காலமும்; அவன் இவன் என்பனவாகச் சொல்லப்பட்ட விரோதமாயுள்ள அனைத்தையும் விடுத்து, இப்பொழுது இந்த ஊரில் இருக்கும் தேவதத்தன் என்று இலட்சியார்த்தத்தை விடாமல் சிந்தித்தால் தேவதத்தன் என்னும் ஒருவனையே பிரத்யட்சமாகக் காட்டும் இது விட்டுவிடாத இலக்கணை ஆகும் (வாச்சியார்த்தத்தில் அர்த்தம் செய்து கொள்வதற்கு விரோதமாகத் தோன்றுகிற பாகத்தை விட்டுவிட்டு, விரோதமில்லாத மற்ற பாகத்தைப் பொருளாகக் கொள்வது)

★★★

## 74.

***தத்துவம் எனும்ப தங்கள் பிரமமாய்ச் சாட்சி ஆன***
***வத்துவை விடாமல் பேத வாச்சியார்த் தத்தை விட்டு***
***நித்தமும் அதுநீ ஆகும் நீஅது ஆகும் என்னும்***
***அத்தமும் அகண்டம் என்றே அசிபத ஐக்கியம் காட்டும்.***

'தத்துவமசி' என்னும் மகாவாக்கியத்தில் 'தத்' பத இலட்சியார்த்தமான பிரம்மத்தையும்; 'துவம்' பத இலட்சியார்த்தமான கூடஸ்தனையும் விடாமல், தத்பத வாச்சியார்த்தமான ஈசுவரனுக்கும் துவம்பத வாச்சியார்த்தமான ஜீவனுக்கும் உள்ள வேற்றுமைகளை (மாயை, அவித்தை) பார்க்கும்போது எக்காலமும் 'அது நீயாகும்', 'நீ அதுவாகும்' என்னும் வாக்கியங்களுக்கு அசிபதத்தின் மூலம் ஐக்கியப்படுத்திக் காட்டும் பொருள் பிரம்மம் ஆகும். ஈசுவரன், ஜீவன் என்னும் வாச்சியார்த்தங்களை (பேதங்களை) நீக்கினால் பிரம்மமும் ஆத்மாவும் ஒன்று என்பதைக் காட்டும்.

★★★

## 75.

***கடநீரில் மேக நீரில் கண்டவான் இரண்டும் பொய்யே***
***குடவானும் பெரிய வானும் கூடிஒன்று ஆம்எப் போதும்***
***இடம்ஆன பிரமம் சாட்சி இரண்டும்எப் போதும் ஏகம்***
***திடமாக சுவாநு பூதி சிவோகம்என் றிருந்தி டாயே.***

குடத்தின் நீரில் தோன்றும் ஆகாசமும், மேக நீரில் தோன்றுகின்ற பிரதிபிம்ப ஆகாயம் இரண்டும் மித்யாவாகும். கட ஆகாயமும்,

மகா ஆகாயமும் எப்போதும் ஒரே ஆகாயம்தான். புத்தியில் பிரதிபிம்பித்துள்ள ஜீவனும், மாயையில் பிரதிபிம்பித்துள்ள ஈசுவரனும் உபாதியினால் கற்பிதமாயிருத்தலின் மித்தையாகும். பிரம்ம சொரூபம், கூடஸ்தன் (சாட்சி) ஆகிய இரண்டு சைதன்யமும் எப்பொழுதும் ஒன்றுதான். ஒன்றென்னும் அனுபவம் சந்தேக விபரீதமின்றி திடம்பெற சிவோஹம் (நானே சிவம்) என்று நிதித்யாசனம் செய்து சுவானுபூதியில் பிறழாதிருக்கக் கடவாய். இதுவே உன்னால் என்றும் அப்பியசிக்கத்தக்கதாகும்.

★★★

## 76.

*தஞ்சமாம் குருவும் சொன்ன தத்துவ வழிதப் பாமல்*
*பஞ்சகோசமும் கடந்து பாழையும் தள்ளி உள்ளில்*
*கொஞ்சம்ஆம் இருப்பும் விட்டுக் கூடத்தன் பிரமம் என்னும்*
*நெஞ்சமும் நழுவி ஒன்றாய் நின்றபூ ரணத்தைக் கண்டான்.*

தனக்கு உறுதுணையான குருநாதர் கூறிய தத்பதம், துவம்பதம் வழிகளை முறையாக சிந்தித்து அனுசரித்து, பஞ்சகோசங்கள் ஒவ்வொன்றையும் இது நான் அல்ல, இது நான் அல்ல என்று தள்ளி, அதனால் தோன்றிய சூன்ய நிலையையும் தள்ளி, அதனால் உருவாகிய இருப்பு நிலையையும் தள்ளி, கூடஸ்தன், பிரம்மம் என்ற இரண்டு நினைவுகளையும் நீக்கி, அத்வைதமாய் உள்ள பரிபூரண சொரூபத்தை (பிரம்மத்தை) தரிசித்தான்.

★★★

## 77.

*அநுபவஆ நந்த வெள்ளத் தழுந்தியே அகண்டம் ஆகித்*
*தனுகர ணங்கள் ஆகி சகலமும் இறந்து சித்தாய்*
*மனதுபூ ரணமாய்த் தேகம் ஆனசற் குருவும் காண*
*நனவினில் சுழுத்தி ஆகி நன்மகன் சுபாவம் ஆனான்.*

பிரம்மத்தைப் பற்றி தெளிவாக அறிந்து பிரம்மவடிவாக விளங்கிய சீடன் (ஜீவநிலையிலிருந்தவன்) பிரம்மானந்த வெள்ளத்தில் மூழ்கி, ஈச நிலையாகிய தேக, இந்திரிய அந்தக்கரணம் முதலிய நாமரூப வடிவ உபாதிகள் எல்லாம் நீங்கப் பெற்று (அகண்டாகாரமாகி)

மனது பூரணமாகி (நனவில் சுழுத்தி) திருவருளே திருமேனியாக வுடைய சற்குரு காணுமாறு சத்சித் ஆனந்தமயமான பிரம்ம சொரூபம் (சுபாவ வடிவம்) ஆனான்.

★★★

## 78.

*அளிமகன் நெடும்போது இவ்வாறு ஆனபின் மனது மெள்ள*
*வெளியில்வந் திடஉ ணர்ந்தான் விமலதே சிகனைக் கண்டான்*
*துளிவிழி சொரியப் பாதம் தொழுதுவீழ்ந் தெழுந்து சூழ்ந்தான்*
*குளிர்முக சுவாமி கேட்கக் கும்பிட்டு நின்று சொல்வான்.*

அந்த உத்தமச் சீடன் பிரம்ம சொரூப நிலையில் வெகுநேரம் இருந்து, பின்னர் பிராரப்த கர்மத்தால் அவனது மனமானது மெள்ள மெள்ள இவ்வுலகுக்கு வந்ததை உணர்ந்தான். தமது நிர்மலமான குருவை தரிசித்துக் கண்கள் ஆனந்தக் கண்ணீர் சொரிய அவரது பாத கமலங்களில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி எழுந்து வலம் வந்தான். பிரம்மானந்தம் விளங்குகின்ற முகத்தையுடைய குருநாதர் கேட்கும் வகையில் தலைமீது கைகளைக் கூப்பி துதித்துக் கொண்டு தன்னுடைய மகிழ்வு நிலையைக் கூறலானான்.

★★★

## 79.

*ஐயனே எனதுள் ளேநின் றனந்தசன் மங்கள் ஆண்ட*
*மெய்யனே உபதேசிக்க வெளிவந்த குருவே போற்றி*
*உய்யவே முத்தி நல்கும் உதவிக்கோர் உதவி நாயேன்*
*செய்யுமா றொன்றும் காணேன் திருவடி போற்றி போற்றி.*

ஐயனே! எனது உள்ளத்தில் எழுந்தருளி, அநேக பிறவிகளில் தொடர்ந்து நின்று, என்னுடைய மல விட்சேப தோஷங்களை ஒழித்து, என்னை ஆண்டு அருளிய குருநாதரே! உம்மைப் போற்றி வணங்குகிறேன். அடியேன் ஈடேறும் பொருட்டு தத்துவ ஞானம் வாயிலாக ஜீவன் முக்தி தந்தருளிய உதவிக்கு கைம்மாறு செய்யும் வழி ஒன்றும் காணேன். ஆகையால் உமது திருவடிகளை மீண்டும் மீண்டும் வணங்குகிறேன்.

★★★

## 80.

சிட்டன்இவ் வாறு கூறத் தேசிகர் மகிழ்ந்து நோக்கிக்
கிட்டவா எனஇ ருத்திக் கிருபையோ டருளிச் செய்வார்
துட்டம்ஆம் தடைகள் மூன்றும் தொடராமல் சொரூப ஞான
நிட்டனாய் இருக்கின் ஈதே நீசெயும் உதவி ஆமே.

போற்றித் துதித்த சீடனை குரு மகிழ்ச்சிப் பொங்க நோக்கி அருகில் வா என்று அழைத்து அருகே இருக்கச் செய்து, பொல்லாத தீய தன்மைகள் உடைய தடைகள் மூன்று உள்ளன. அவை உன்னை அண்டவிடாமல், பிரம்ம சொரூபத்திலேயே நிலைநிற்கும் ஞான நிஷ்டனாய் இருப்பதுவே நீ எனக்குச் செய்யும் பிரதி உதவியாகும் என்று கருணையோடு கூறினார்.

★★★

## 81.

நீநான் என்று இரண்டில் லாமல் நிறைந்தபூ ரணமாய் எங்கும்
நான் ஆகத் தெளிந்த ஞானம் நழுவுமோ குருவே என்றான்
தான் ஆகும் பிரம சொரூபம் சற்குரு நூலால் தோன்றும்
ஆனாலும் தடைகள் உண்டேல் அநுபவம் உறைத்தி டாதே.

சற்குருவே! தத்பத லட்சியார்த்தமான நீ (பிரம்மம்) துவம் பத லட்சியார்த்தமான நான் (கூடஸ்தன்) என்னும் இரண்டும் விகற்பமின்றி அத்வைதமாய் பூரணமாய் எங்கும் நானாக அறிந்து அனுபவித்துத் தெளிந்த சின்மயமான பிரம்ம சொரூபம் என்னை விட்டு நழுவிடுமோ? என்று சீடன் வினவினான். அன்பனே! சுபாவமாக தன்மயமாயுள்ள பிரம்ம சொரூபமானது சற்குரு உபதேசத்தினாலும்; வேதாந்த சாஸ்திர விசாரத்தாலும் தோன்றும். ஆனாலும் தடைகள் உண்டானால் அவ்வனுபவம் ஸ்திரப்படாது.

★★★

## 82.

தடைஎவை எனில்அஞ் ஞான சந்தேக விபரீ தங்கள்
படர்செயும் இந்த மூன்றும் பலசன்மப் பழக்கத் தாலே
உடன்உடன் வரும்வந் தக்கால் உயர்ஞானம் கெடும்இ வற்றை
திடமுடன் கெடுப்பாய் கேட்டல் சிந்தித்தல் தெளித லாலே.

அத்தடைகள் எவை என்றால் அஞ்ஞானம் சந்தேகம், விபரீதம் என்பனவாகும். துன்பங்கள் செய்வதையே இயல்பாக உள்ள இம்மூன்று தடைகளும் முற்பிறவிகளின் பழக்கத்தினால் அடிக்கடி வந்து கொண்டிருக்கும். அதனால் உயர்வான ஞானம் மறைபடும். சிரவண மனன நிதித்தியாசனத்தால் அதை கெடுக்க வேண்டும்.

★★★

## 83.

**அக்கினி கட்டுப் பட்டால் அற்பமும் சுடமாட் டாது**
**மக்கின ஞானத் தாலே வந்தபந் தமும்வே வாது**
**சிக்கெனப் பழகிக் கேட்டல் சிந்தித்தல் தெளித லாலே**
**விக்கின மடம்சந் தேகம் விபரீதம் போக்கு வாயே.**

மணிமந்திர ஔஷதங்களால் நெருப்பானது கட்டுப்பட்டால் அது கொஞ்சமும் சுடாது. அதைப்போல அஞ்ஞானம், சந்தேகம், விபரீதம் ஆகிய தடைகளால் தத்வஞானம் மறைக்கப்பட்டால் அநாதியாகத் தொடர்ந்து வருகின்ற பஞ்சகிலேச வடிவ பந்தங்கள் ஒழியாது. அதனால் தொடர்ந்து பழக்கஞ்செய்து சிரவணத்தால் அஞ்ஞானத்தையும்; மனனத்தினால் சந்தேகத்தையும்; சுயஅனுபவத் தெளிவினால் விபரீதத்தையும் (திரிசயம்) நீக்குவாயாக. (பஞ்சகிலேசங்கள் = 1) விசாரிக்குமிடத்து தனக்கென சொரூபமில்லாதொழிவது = அவித்தை, 2) பேதபுத்தி = ஆன்மாக்களில் அஸ்மிதை, 3) இராகம் = பேராசை = 4) துவேசம் = வெகுளி, 5) அபிநிவேசம் - மரணபயம்.)

★★★

## 84.

**பிரமபா வனையை மூடிப் பேதம்காட் டுவதஞ் ஞானம்**
**குரவன்வாக் கியம்நம் பாமல் குழம்புவ தாம்சந் தேகம்**
**திரம்அறு சகம்மெய் என்றும் தேகம்நான் என்றும் உள்ளே**
**விரவிய மோகம் தானே விபரீதம் என்பர் மேலோர்.**

அகம்பிரம்மம் என்னும் பாவனையை மறைத்து நான் பிரம்மம் அல்ல என்று காட்டுவது அஞ்ஞானம். குருநாதருடைய உபதேச வாக்கியத்தில் நம்பிக்கை ஏற்படாமல் மனதில் குழப்பத்தை உண்டாக்குவது சந்தேகம். நிலையில்லாத இவ்வுலகத்தை நித்திய

மென்றும்; அநாத்மா ஆகிய இந்த உடலை நித்தியமான ஆத்மா என்றும் மனதில் எண்ணும் மயக்கம் (மோகம்) விபரீதம் என்றும் மேலோர் கூறுவார்கள்.

★★★

## 85.

**தத்துவ அநுபோ கம்தான் சாதித்தல் கேட்டல் என்பார்**
**ஒத்துள பொருள்ஊ கத்தால் உசாவல்சிந் தித்தல் என்பார்**
**சித்தம் ஏகாந்தம் ஆன தெரிசனம் தெளிதல் என்பார்**
**நித்தம்இப் படிச்செய் தக்கால் நிருவாணம் பெறுவாய் நீயே.**

மகாவாக்கிய அர்த்தமான பிரம்மோபதேசத்தைக் குருமுகமாகப் பெறுவதை 'கேட்டல்' என்பார்கள். ஜீவ பிரம்ம ஐக்கியத்தை விசாரித்து அறிவதை 'சிந்தித்தல்' என்று சொல்வார்கள். இவ்வாறு சிந்தித்த மனமானது எண்ணங்கள் அற்று பிரம்மானந்தத்தில் மூழ்கி யிருத்தல் நித்தியாசனம் என்று கூறுவார்கள். எப்போதும் இம்மூன்று நிலைகளையும் இவ்வண்ணம் அப்பியாசம் செய்து வருவாயானால் தடைகள் எல்லாம் நீங்கி நிச்சயம் நீ முக்தி அடைவாய்.

★★★

## 86.

**எத்தனை நாள்ஞா தாவும் ஞானமும் இருக்கும் உன்பால்**
**அத்தனை நாளும் வேண்டும் அப்பால்ஓர் செயலும் வேண்டா**
**நித்தமும் வெளிபோல் பற்றா ஞேயம்மாத் திரமாய்ச் சீவன்**
**முத்தர்ஆ னவர்வி தேக முக்திபெற் றிருப்பார் என்றும்.**

எவ்வளவு காலம் காண்பானும் காட்சியும் உன்னிடம் இருக்குமோ, அவ்வளவு காலம்வரை உன்னிடம் கேட்டல் முதலிய மூன்று செயல்களும் இருக்கவேண்டும். எப்போது காண்பானும் காட்சியும் இல்லாது காணப்படும் பொருளாகிய பிரம்ம சொரூபம் ஆவாயோ அப்போது அச்செயல்கள் தேவையற்றதாகி விடும். எப்பொழுதும் காட்சி அளித்துக்கொண்டு எதையும் பற்றாதிருக்கின்ற ஆகாயத்தைப் போல பிரம்ம சொரூபமாக இருப்பவன் ஜீவன் முக்தன் ஆவான். அந்நிலையில் பிராரப்த கர்மங்கள் தீர்ந்தவுடன் விதேக முக்தி அடைவார்கள்.

## 87.

ஞானம் ஆர் சீவன்முத்தர் நால்வகை ஆவர் கேளாய்
வான்நிகர் பிரம வித்து வரன்வரி யான்வ ரிட்டன்
ஆனவர் நாமம் ஆகும் அவர்களில் பிரம வித்தின்
தானமும் மற்றை மூவர் தாரதம் மியமும் சொல்வேன்.

மகனே! பிரம்ம சொரூப ஞானத்தை அடைந்த ஜீவன் முக்தர் நான்கு வகைப்படுவார்கள். அவர்கள் வானத்துக்கொப்பாக எக்கர்மமும் பற்றாத பிரமவித்து, பிரமவரன், பிரமவரியான், பிரமவரிட்டன் எனப்படுவார்கள். அவர்களுள் பிரமவித்தின் நிலையையும் ஏனைய மூவருடைய உண்மையான இயல்புகளையும் கவனமாகக் கேட்பாயாக!

★★★

## 88.

தீரராய்ப் பிரம வித்தாய்த் தெளிந்தவர் தெளியும் முன்னம்
வாரமாய் இருந்த தங்கள் வருணம்ஆச் சிரமம் சொன்ன
பாரகா ரியம்ஆ னாலும் பலர்க்குப கார்ம் ஆக
நேரதாச் செய்வர் தீர்ந்த நிலைவிடார் சீவன் முத்தர்.

மனவுறுதியுடையவராய், மனக்கலக்கத்தினின்றும் தெளிந்தவர்கள் பிரம்ம ஞானிகளாகிய ஜீவன் முக்தர்கள். அவர்கள் ஜீவன் முக்தி அடைவதற்கு முன்னர் தங்களுக்கு உரிமையாயிருந்த வர்ணாச்சிரம கிரியைகள் மிகப்பெரியவாக இருந்தாலும்; அவற்றை சாஸ்திரோக்தமாய் பலருக்கும் உதவியாக இருக்கவேண்டி நேரிய வழியில் செம்மையாகச் செய்வார்கள். அவ்வாறு செய்யும்போதும் பிரம்ம சொரூப நிலை விடாமல் அதில் உறுதியாக நிலைத்து நிற்பார்கள். (பிரம்மவித்து இல்லறத்தார் போலவே எல்லா கர்மங்களையும் செய்வார்கள்)

★★★

## 89.

காமம்ஆ திகள்வந் தாலும் கணத்தில்போம் மனத்தில் பற்றார்
தாமரை இலைத்தண் ணீர்போல் சகத்தொடும் கூடி வாழ்வார்
பாமரர் எனக்காண் பிப்பார் பண்டிதத் திறமை காட்டார்
ஊமரும் ஆவார் உள்ளத்து உவகையாம் சீவன் முத்தர்.

இவ்வகை சீவன்முக்தர்களுக்கு காமம் முதலிய உட்பகைகள் பிராரப்தகர்மவசத்தால், ஏகதேசமாய் அந்தக்கரணத்தில் தோன்றினாலும், தோன்றிய அக்கணமே நீங்கிவிடும். அவைகளை மனதில் வைக்க மாட்டார்கள். தாமரை இலை தண்ணீரில் மிதந்தாலும் தண்ணீர் அவ்விலையில் ஒட்டாததுபோல உலகத்தாருடன் சேர்ந்து வாழ்ந்தாலும் அவர்களுடன் ஒட்டமாட்டார்கள்; ஒன்றும் அறியாத அஞ்ஞானிகளைப் போல வாழ்வார்கள். தங்களுடைய அறிவுத் திறத்தைக் காட்ட மாட்டார்கள், மௌனமாக இருப்பார்கள்; உள்ளத்தில் உயர்வான பிரம்ம சொரூப மகிழ்ச்சிப் பூரித்தவராக இருப்பார்கள்.

★★★

## 90.

**பேதகன் மத்தால் வந்த பிராரத்தம் நாநா ஆகும்**
**ஆதலால் விவகா ரங்கள் அவரவர்க்கு ஆவ ஆகும்**
**மாதவம் செயினும் செய்வார் வாணிபம் செயினும் செய்வார்**
**பூதலம் புறப்பார் ஐயம் புகுந்துண்பார் சீவன் முத்தர்.**

அவரவர் இயல்புப்படி செய்த கர்மத்தின் பலனான சஞ்சிதகர்மத்திலுண்டான பிராரப்த கர்மம் பலவிதமாக இருக்கும். ஆதலால் அப்பிராரப்த கர்மத்துக்கு ஏற்றபடி உலக விவகாரங்களைச் செய்வார்கள். ஒருவருக்கு இருப்பதுபோல் மற்றொருவருக்கு இருக்காது. மகா தவத்தைச் செய்தாலும் செய்வார்கள். வியாபாரம் செய்தாலும் செய்வார்கள், பூமியை ஆண்டாலும் ஆள்வார்கள். பிச்சை எடுத்து உணவு உண்டாலும் உண்பார்கள். (பிரம்ம வித்தான ஜீவன் முக்தர்கள் எத்தொழிலைச் செய்தாலும் அது பிராரப்த கர்மம் ஆகும். விவகாரத்தில்தான் பேதம் காணப்படும். ஞானத்திலும், மோட்சத்திலும் பேதம் ஏற்படாது).

★★★

## 91.

**சென்றது கருதார் நாளைச் சேர்வது நினையார் கண்முன்**
**நின்றது புசிப்பார் வெய்யில் நிலவாய்விண் விழுது வீழ்ந்து**
**பொன்றின சவம் வாழ்ந் தாலும் புதுமையா ஒன்றும் பாரார்**
**நன்றுதீது என்னார் சாட்சி நடுவான சீவன் முத்தர்.**

சீவன் முக்தர்கள் முன்பு வந்து நீங்கியவற்றைப் பற்றி எண்ணிப் பார்க்க மாட்டார்கள். நாளை எது வந்து தம்மைச் சாரும் என்றும் நினைக்க மாட்டார்கள். நிகழ்காலத்தில் பிராரப்த வசத்தால் தங்களுக்கு வந்து கிட்டிய உணவு, உடை, உறையுள் முதலியவற்றை அனுபவிப்பார்கள். சூரிய கிரணங்கள் சந்திர கிரணங்கள் போன்று குளிர்ந்து, நட்சத்திரங்கள் கீழே விழுந்தாலும் இறந்த பிரேதம் மீண்டும் பிழைத்தாலும் அதிசயமாக ஒன்றையும் பார்க்க மாட்டார்கள். இது நன்மையானது, இது தீமையானது என்றும் கருத மாட்டார்கள். எல்லாவற்றிற்கும் சாட்சி மாத்திரமாய் நிற்கும் நிலை அடைந்தவர்கள் சீவன் முக்தர்கள்.

★★★

## 92.

*பின்னைமூ வரில்இ ரண்டு பேர்களும் சமாதி யோகம்*
*தன்னைஉற் றிருப்பார் தேகசஞ்சார நிமித்தம் தானாய்*
*உன்னுவோன் வரன்வேற் றோரால் உணர்பவன் வரியான் ஆகும்*
*அன்னியர் தம்மால் தன்னால் அறியாதோன் வரிட்டன் ஆமே.*

நால்வகை சீவன் முக்தர்களில் மற்ற மூன்று பேர்களில் பிரமவரன் பிரமவரியான் என்னும் இரண்டுவகை சீவன் முக்தர்களும் வெளிவிவகாரங்களை விட்டுவிட்டு ஏகாந்தமாய் சமாதி யோகம் செய்வதில் பொருந்தி இருப்பார்கள். உயிர் வாழ்தல் பொருட்டுத் தானாய் உணர்வு பெறுபவன் பிரமவரன். எப்போதும் சமாதியில் இருந்துகொண்டு சீடன் முதலியோரால் உணவு பெறுபவன் பிரமவரியான். பிறர் உணர்த்தினாலும், உணர்வு பெறாமலும், தானாகவும் உணர்வு பெறாமலும் இருப்பவன் பிரமவரிட்டன் ஆகும்.

★★★

## 93.

*அரிதாகும் இவர்கள் இவ்வாறு அநேகர்ஆ னாலும் முத்தி*
*சரியாகும் பாடுபட்ட சமாதிக்குப் பலன் ஏதென்றால்*
*பெரிதான திருஷ்ட துக்கம் பிரமவித்து அநுப விப்பன்*
*வரியானும் வரனும் மற்றை வரிட்டனும் சுகமாய் வாழ்வார்.*

மிகவும் அரிதான சீவன் முக்தி அடைந்த பிரமவித்து, வரன், வரியான், வரிஷ்டன் என்னும் இவர்கள் கர்மவசத்தால் பல பிரிவுகளில் இருந்தாலும்; அவர்கள் அடைந்த ஞானத்தில் தாரதம்மியம் இல்லை. ஆதலால் ஜீவன் முக்தி எல்லோருக்கும் சரிசமமானது. இதுவரை பாடுபட்டு ஜீவன்முக்தர் அடைந்த சமாதி நிலைக்குக் கிடைக்கும் பலன் ஏதென்றால், பிரமவித்து, சீடருக்கு உபதேசம் செய்தல், ஞான சாஸ்திரமியற்றுதல், உலகுக்கு உபகாரமாக உபந்யாசம் செய்தல் போன்ற நிஷ்காமிய கர்மங்களைச்செய்வதால்துக்கத்தை அனுபவிப்பான். வரனும், வரியானும், வரிஷ்டனும் லௌகீக விவகாரங்கள் செய்யாததால் சத்சித் ஆனந்தமயமான பிரம்ம சொரூப ஆனந்தத்தில் வாழ்வார்கள்.

★★★

## 94.

**பிரமஞா னிகளும் கர்மப் பேதையர் போலே வாழ்ந்தால்**
**திரமுறும் அஞ்ஞா னம்போய்ச் செனியாத வழி ஏது என்றால்**
**பரவும் ஆகாசம் ஒன்றில் பற்றாது மற்றை நான்கும்**
**விரவின தோடும் கூடும் விதம்இரு வோரும் ஆவார்.**

பிரம ஞானிகளும் உலக மக்களைப் போலவே லௌகீக கர்மங்கள் செய்துகொண்டு வாழ்ந்தால், அஞ்ஞானம் நீங்கி இனிப் பிறவாத நிலை எப்படி அமையும் என்றால், எங்கும் வியாபித்திருக்கும் ஆகாயமானது, ஒன்றோடொன்று சம்பந்தமுள்ள மற்ற நான்கு பூதங்களுடன்சம்பந்தப்பட்டிருந்தாலும்அவற்றுடன்பற்றாமல் இருக்கும். அதுபோல பிரம ஞானிகள் உலக மக்களோடு சேர்ந்து வாழ்ந்தாலும் எதிலும் எவ்விதப் பற்றுமில்லாமல் வாழ்வார்கள். அதனால் அவர் களுக்கு பிறவிக்கு ஏதுவான கர்மபலன் சம்பவிக்காது. அஞ்ஞானிகள் கர்மபலனில் பற்றுடையவர்கள் ஆதலால் அவர்களுக்குப் பிறவி வரும்.

★★★

## 95.

**சீவன்முத் தரைச்சே வித்தோர் சிவன்அயன் நெடுமால் ஆன**
**மூவரும் மகிழ நோன்பு முழுவதும் செய்து சன்ம**
**பாவனம் ஆனார் என்று பழமுறை முழங்கும் இப்பால்**
**மேவரும் சீவன் முத்தர் விதேகமுத் தியும் நீ கேளாய்.**

இத்தகைய சீவன் முக்தர்களைத் தரிசித்து சேவை செய்தவர்கள், சிவன், பிரமன், திருமால் ஆகிய மும்மூர்த்திகளும் மகிழ்வு எய்த எல்லா விரதங்களையும், தவங்களையும் செய்து முடித்து பரிசுத்தமானவர்கள் என்று வேதங்கள் எல்லாம் கூறுகின்றன. இனி அடைதற்கரிய மகிமையுடைய சீவன் முக்தர்களது விதே முக்தியையும் கவனமாகக் கேட்பாயாக.

★★★

## 96.

**பஞ்சினை ஊழித் தீப்போல் பலசன்ம விவித வித்தாம்**
**சஞ்சிதம் எல்லாம் ஞானத் தழல்சுட்டு வெண்ணீ றாக்கும்**
**கிஞ்சித்து ஆகாமி யம்தான் கிட்டாமல் விட்டுப் போகும்**
**விஞ்சின பிராரத் தத்தின் வினை அநு பவித்துத் தீரும்.**

பஞ்சினை ஊழித்தீ மிக எளிதாக சாம்பலாக்குவதுபோல பல பிறவிகளுக்குக் காரணவித்தாகிய சஞ்சித கர்மங்களையெல்லாம் பிரம ஞானாக்கினி எரித்து வெண்மையான சாம்பலாக்கிவிடும். (அஞ்ஞானத்தின் ஆவரண சத்தி அழியும்போது அதிலுள்ள சஞ்சித கர்மமும் அழிந்துவிடும். ஞானிக்கு கர்த்துருத்வ புத்தி இல்லாததால் ஆகாமிய கர்மம் அவனுக்கு ஏற்படாது. எஞ்சி இருக்கும் பிராரத்த கர்மத்தை இச்சை, அனிச்சை, பரஇச்சை என மூன்று விதங்களில் அநுபவிக்கத் தீர்ந்துவிடும். (ஞானியின் பார்வையில் வினையும் இல்லை; வினைப்பயனும் இல்லை).

★★★

## 97.

**பொறுமையால் பிராரத் தத்தைப் புசிக்கும்நாள் செய்யும்கர்மம்**
**மறுமையில் தொடர்ந்தி டாமல் மாண்டுபோம் வழிஏதென்றால்**
**சிறியவர் இகழ்ந்து ஞானி செய்தபா வத்தைக் கொள்வார்**
**அறிவுளோர் அறிந்து பூசித்து அறம்எலாம் கைக்கொள் வாரே.**

ஞானிகள் பிராரப்த கர்மத்தை பொறுமையாக அனுபவிக்கும் காலத்தில் செய்கின்ற கர்மவினைகள் அடுத்த பிறவிக்குக் காரண மாகாமல் அழிந்துபோகின்ற வழி ஏதென்றால், அறிவிலிகள் ஞானிகளை இகழ்ந்து ஞானிகளின் பாவத்தைப் பெற்றுக் கொள்கிறார்கள்.

விவேகிகள் ஞானிகளின் பெருமையை அறிந்து அவர்களைப் போற்றி பூசித்து ஞானிகள் செய்த புண்ணிய பலனை எல்லாம் பெற்றுக் கொள்கிறார்கள். அதனால் சீவன் முக்தரது ஆகாமிய கர்மம் மறுமைக்குத் தொடராமல் நசித்து விடுகிறது.

## 98.

**அரியமெய்ஞ் ஞானத்தீயால் அவித்தையாம் உடல்நீ றாகும்**
**பெரியதூ லமும்கா லத்தால் பிணம்ஆகி விழும்அந் நேரம்**
**உரியசூக் கும சரீரம் உலைஇரும் புண்ட நீர் போல்**
**துரியமாய் விபுவாய் நின்ற சொரூபத்தில் இறந்து போமே.**

ஜீவன் முக்தரது தத்வ ஞானாக்கினியால் (தன்னைப் பற்றிய ஞானம்) அவித்தையால் உண்டான காரண சரீரம் அழிந்துவிடும். தூல உடல் பிராரப்த கர்ம முடிவில் பிணமாகிவிடும். அப்பொழுது சாதனத்துக்குரியதான சூக்கும சரீரம் கொல்லன் உலையில் காய்ந்த இரும்பு உண்ட நீர்போல துரியமாகவும், வியாபகமாகவுமுள்ள ஆன்ம சொரூபத்தில் லயமாகிவிடும். (மரண காலத்தில் சூக்கும சரீரம் வெளியில் செல்பவர்க்குத்தான் மறுபிறவி உண்டு).

★★★

## 99.

**கடம்எனும் உபாதி போனால் ககனம்ஒன் றானாற் போல**
**உடல்எனும் உபாதி போன உத்தரம் சீவன் முத்தர்**
**அடிமுடி நடுவும் இன்றி அகம்புறம் இன்றி நின்ற**
**படிதிகழ் விதேக முத்திப் பதம் அடைந் திருப்பர் என்றும்.**

குடம் என்ற உபாதி நீங்கினால் அப்பொழுதே அதனுள்ளே தோன்றிய குட ஆகாயமும், குடநீரில் தோன்றிய ஜல ஆகாயமும், எங்கும் வியாபித்திருக்கின்ற ஆகாயம் ஆவதைப் போன்று காரண, சூக்கும, தூல தேகமென்கிற உபாதி நீங்கியவுடனே சீவன் முத்தரானவர்கள் ஆரம்பநிலை, நடுவுநிலை, முடிவு நிலை, அகநிலை, புறநிலை என்ற எதுவுமில்லாமல் எப்போதும் தான் இருந்தபடியே விளங்குகின்ற விதேக முக்திப்பதத்தை அடைந்திருப்பார்கள். (உபாதியில் வேறுபாடு உண்டு. உண்மையில் இல்லை).

★★★

## 100.

*சொல்லிய மகனே எங்கும் சூழ்வெளி இருக்க மண்ணை*
*கெல்லிய பின்பு தோன்றும் கிணற்றின் ஆ காசம்போலே*
*ஒல்லையாம் பிரம நூலால் உற்றது போலே தோன்றும்*
*எல்லையில் நாம்எப் போதும் ஏகம்என்று இருந்து வாழ்வாய்.*

இதுவரை எனது உபதேசத்தால் சிந்தித்த அனுபவங்களை ஐயந்திர அவ்வப்போது வினவி வந்த மகனே! எங்கும் நிறைந் திருக்கின்ற ஆகாயம் அப்படியே இருக்க பூமியைத் தோண்டியபின்பு உண்டானது போலத் தோன்றுகின்ற கிணற்று ஆகாசம் போல அநாதியாய் விளங்குகின்ற பிரம்மஸ்வரூபமானது, குரு உபதேசத்தாலும், சாஸ்திர விசாரங்களாலும் தோன்றியதுபோலத் தோன்றுகிறது. இது உண்மை அல்ல. முடிவற்ற கூடஸ்த (நீ) பிரம சொரூபமாகிய (நான்) ஆகிய நாம் எப்போதும் ஏகவடிவமே என்று அறிந்து அதிலிருந்து வழுவாமல் வாழ்வாயாக.

★★★

## 101.

*கானல்நீர் கிளிஞ்சில் வெள்ளி கந்தர்ப்ப நகர்க னாவூர்*
*வானமை கயிற்றிற் பாம்பு மலடிசேய் முயலின் கோடு*
*பீனம்ஆம் தறிபு மானில் பிரபஞ்சம் எல்லாம் பொய்யே*
*ஞானம்மெய் மகனே உன்னை நம்ஆணை மறந்தி டாயே.*

இந்தப் பிரபஞ்சம் அதன் உபாதான காரணமான அஞ்ஞானமாகிய அனைத்தும் கானல் நீர், சிப்பியில் தோன்றும் வெள்ளி, கந்தர்ப்ப நகரம், சொப்பன உலகம், ஆகாய நீலம், கயிற்றில் தோன்றும் பாம்பு, மலடியின் மகன், முயலின் கொம்பு, மரக்கட்டையில் காணும் மனிதன் என்பவற்றைப் போன்று மித்தையாகும். பிரம்ம சொரூபஞானமே உண்மையாகும் என்பதை அறிந்து, எனது அருமை மகனே நம் மேல் ஆணை மெய்யாகிய உன்னை நீ மறந்துவிடாதே. அதன் நிலையில் நிற்பாயாக. (நீ நீயாக இரு).

**தத்துவ விளக்கப் படலம் நிறைவுற்றது.**

★★★

# 2. சந்தேகம் தெளிதல் படலம்

சந்தேகத்தை நீக்குதல் மூலம் தெளிவுபெறுதல் (சம்சய நிவர்த்தி).

அஞ்ஞானத்தில் இருப்பவன் சந்தேகப்படுவான், துக்கமடைவான். சந்தேகம் என்பது ஒரு பேய். அது அறியாமை என்னும் இருட்டில் தெரியும். ஞானம் என்னும் சூரியன் உதித்தால் இல்லாமல் போய்விடும். ஒரு பொருளைப்பற்றி ஒன்றுக்கு மேற்பட்ட கருத்துகள் இருந்தால் இதுவா? அதுவா? என்று சந்தேகம் உண்டாகும்.

ஒன்றை நம்பவேண்டும் அல்லது நம்பாமலிருக்க வேண்டும். சந்தேகம் கூடவே கூடாது. சந்தேகம் என்பது ஒரு பெரிய வியாதி. நம்பினால் அறிவு ஏற்பட வாய்ப்பு உண்டு. சந்தேகத்தால் அறியாமை போகாது, அறிவும் கிடைக்காது. அகங்காரத்தாலும் சந்தேகம் ஏற்பட வாய்ப்பு உண்டு. சாஸ்திரத்தில் ஏற்படும் சந்தேகம் பிரமாண சமுசயம். சாஸ்திர விஷயத்தில் உண்டாகும் சந்தேகம் பிரமேய சமுசயம் எனப்படும்.

சந்தேகப்படுபவன் 'பிரமாதா' எனப்படுவான். சந்தேகப்படும் விஷயம் பிரமேயம் எனப்படும். விஷயமும் விஷயத்துக்கான சாதனமும் பிரமேயம்.

1.

நரர்குழி பறித்து மெள்ள நாட்டிய நெடிய கம்பம்
உரம்உறக் குத்திக் குத்தி உறைப்பிக்கும் உபாயம் போல
பரமசிற் சொரூபம் தன்னில் பற்றிய மனோவி ருத்தி
திரநிலை பெறச்சந் தேகம் தெளிதலை மொழி கின்றேனே.

உலகில் மக்கள் குழிதோண்டி அதில் நடப்பட்ட உயரமான கம்பமானது அசைவில்லாமல் ஸ்திரமாக நிற்கும் பொருட்டு

கற்களையும் மண்ணையும் போட்டு கடப்பாரையால் குத்திக் குத்திக் கெட்டித்து அதைப் பலப்படுத்துவதுபோல, பிரம்ம சொரூபத்தில் பொருந்திய சித்த விருத்தியானது, அந்தக்கரணத்தில் சலனமின்றி நிலைநிற்றல் பொருட்டு சந்தேகந் தெளிதலைக் கூறுகிறேன்.

தானல்லாத விஷயங்களை (அநாத்மா) நீக்கித் தானாகிய பிரம்மத்தில் கலந்த மனம், அந்த பிரம்ம வியாபகமான பூரண விருத்தியில் சஞ்சரிக்கும்போது, எல்லாமே பிரம்ம சொரூபம் என்னும் சாக்ஷாத்காரானுபவம் தடையின்றி விளங்கவேண்டுமென்பதற்காகத் தடையாயுள்ளவைகளைக் களைய சந்தேகந் தெளிதலைக் கூறுகிறார். இது தூணா கநந (கம்பம் புதைத்தல்) நியாயம் எனப்படும். (மனது புத்தியில் ஸ்திரமாக இருக்க வேண்டும். உணர்ச்சிகள் எப்போதும் அறிவுக்குக் கட்டுப்பட்டிருக்க வேண்டும்.)

★★★

## 2.

**நற்கருத்து உடையோன் ஆகி ஞானவான் ஆகிநின்றோன்**
**மர்க்கட நியாயம் போல மகாபூத விகாரம் தொட்டு**
**நிற்குண விதேக முத்தி நிலைபரி யந்தம் சொன்ன**
**சற்குரு வினைவி டாமல் சந்ததம் அநுச ரித்தான்.**

அகிம்சை, பரோபகாரம், சத்யம், விவேகம் முதலான சத்வகுணம் மிக்கவனும், ஜீவ பிரம்ம ஐக்கிய ஞானமுடையவனு மாகிய சீடன் குரங்குக் குட்டியைப் போல பஞ்சபூதங்களின் காரியமான தூலதேகம் முதற்கொண்டு சத்வகுணமும் இறந்த (திரிகுண ரகிதமான) விதேக கைவல்யம் அடையும்வரை உபதேசித்தருளிய சற்குருவினை விட்டு நீங்காமல் எப்பொழுதும் தொடர்ந்து நின்றான். (மர்க்கட நியாயம் = குரங்கின் குட்டி தன் தாய்க்குரங்கு எங்கே தாவினும் தான் அதனை விடாது பற்றிப் பிடித்துக் கொண்டிருப்பது).

★★★

## 3.

**சந்ததம் புருடன் தன்னைச் சாயைபோல் விடாமல் அன்பாம்**
**மைந்தனை நோக்கிச் சாட்சி மாத்திர மாய்நின் றாயோ**
**சிந்தையில் ஐயம் எல்லாம் தீர்ந்ததவோ தெளிவி னுள்ளே**
**அந்தரம் கலந்த துண்டோ அநுபவம் உரைசெய் வாயே.**

மனிதனை எப்பொழுதும் விட்டு நீங்காத நிழல்போல, ஒரு கணமும் நீங்காமல் தன்னிடத்து அன்புள்ள சீடனைச் சற்குருவானவர் அன்போடு பார்த்து, ''மகனே! நீ காண்பான், (ஞாதா;) காணப்படு பொருள் (அஞ்ஞானம் நீங்கி அறியப்பட்ட பொருள் (ஞான வடிவமாக) சாட்சி மாத்திரமாக (தன்மயம்) இருக்கின்றாயா? உன் மனத்திலுள்ள விபரீத பாவனைகள் எல்லாம் நீங்கிவிட்டனவா? உனது புத்தியில் ஜீவ ஈசுவர ஜகத் பேதபுத்தி கலந்ததுண்டா? இவைகளைப் பற்றிய உனது அநுபவத்தைக் கூறுவாயாக'' என்றார்.

★★★

## 4.

**எனஉரைத் தருளும் ஆசான் இருபதம் வணங்கி எந்தாய்**
**சனனவன் காட்டில் மோகத் தமத்தெழு பேதப் பேய்கள்**
**உனதருள் உதய வெற்பில் உபதேச அருக்கன் தோன்றி**
**மனவிழி தெரிய ஞான வான்கதிர் பரந்தால் உண்டோ.**

இவ்வாறு வினவிய குருநாதருடைய கமல பாதங்களை வணங்கி, எனது ஐயனே! சம்சாரமாகிய வலிய காட்டில், அஞ்ஞான இருளில் இருந்து எழுந்து நிற்கும் பேதத்தை உணர்த்தும் பேய்கள், உம்முடைய அருளாகிய உதயகிரியில் இருந்து பிரம்ம உபதேசமாகிய சூரியன் உதயமாகி அகக்கண் விளங்கும்படி ஞானம் என்னும் பெருமைமிக்க கதிர்களைப் பரவச் செய்தமையால் அவை இல்லாது ஒழிந்தன.

★★★

## 5.

**மந்திர மூர்த்தி தன்னால் மாற்றிய பேய்போ னாலும்**
**எந்திரம் எழுதிக் கட்டி இனிவரா வகைசெய் வார்போல்**
**முந்திஉன் உபதே சத்தால் மோகம்போ னாலும் ஐயா**
**புந்திநின்று உரைக்க இன்னம் புகலும்விண் ணப்பம் உண்டே.**

''குருமூர்த்தியே! மந்திரவாதியால் நீக்கப்பட்ட பேயானது நீங்கினாலும், மந்திர சக்கரம் எழுதி அவ்வுடலில் கட்டி இனி வராதவண்ணம் செய்பவர்களைப் போல, முன்னரே தேவரீர் அருளிய பிரம்மோபதேசத்தால் அஞ்ஞானம் நீங்கினாலும், என்னுடைய அறிவு ஆத்மாநுபவத்தில் பிறழாது நிலைபெறும் பொருட்டு மேலும்

அடியேன் கேட்கும் விண்ணப்பமுள்ளது'' என்று கூறினான். (சமாதியில் தடையில்லை என்றாலும் சகசத்தில் அவைகளை நீக்கிக் கொள்வதற் காகக் கேட்கிறான்).

★★★

## 6.

**ஆகமப் பிரமா ணத்தால் அறிஎன்றும் வாக்குக் கெட்டாது**
**ஏகமாம் பிரமம் என்றும் இதயத்தால் உணர்வாய் என்றும்**
**சோகம்ஆம் மனத்திற்கு எட்டாச் சுயஞ்சோதி என்றும் சொன்னீர்**
**மோகம் ஆம் இரண்டு சங்கை முளைத்தன பறித்தி டீரே.**

தேவரீர்! முன்னர் ''நீயே பிரம்மம்'' என்றும், வேதமுடிவான மகாவாக்கிய பிரமாணத்தால் உனது நிஜ சொரூப பிரம்மத்தை அறிந்துகொள் எனவும்; அகண்ட ஏகரசமான பிரம்மமானது வேதவாக்கியத்துக்கு எட்டமாட்டாது எனவும், சுயம்பிரகாச பிரம்மத்தை உனது மனதினால் அறிந்துகொள் எனவும்; சோக மோகத்துடன் கூடிய மனதுக்கு அது எட்டாத சுயஞ்ஜோதி எனவும் உபதேசித்தருளினீர்கள். அதனால் அடியேனுக்கு பிரம்மம் வேத பிரமாணத்துக்கு விஷயமாகுமா? ஆகாதா? மனதுக்கு எட்டுமா? எட்டாதா? என்னும் சந்தேகங்கள் தோன்றியுள்ளன. அவற்றை நீக்கி அருளுமாறு வேண்டினான். (பிரம்மம் புரிந்தால்தான் இப்பாடலுக்கு பொருள் புரியும்).

★★★

## 7.

**மற்றைமுப் பிரமா ணத்தால் வத்துநிண் ணயங்கூ டாதே**
**உற்றதோர் விடயம் பூதம் உபயம் அன்று ஆத லாலே**
**குற்றம்ஆம் குணவிசேடம் கூடாமல் இருக்கை யாலே**
**இற்றது வாக்குக்கு எட்டாது என்பதும் அறிவாய் நீயே.**

''பரப்பிரம்மம், பஞ்சேந்திரிய விஷயமான சப்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தம் ஆகிய ஐந்தும்; பிரிதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பஞ்சபூதங்களும்; உபமானம் உபமேயம் ஆகிய எதுவுமல்ல. பிரம்மம் ஒரு பொருள் அல்ல. அதனால் பிரத்யட்ச பிரமாணத்தால் அதை அறியமுடியாது. ஏற்கனவே அதைப் பார்த்ததில்லை அதனால் அதை அநுமானத்தாலும் அறியமுடியாது. அதை உலகப் பொருள்களோடு

ஒப்பிட முடியாததால் உபமானத்தாலும் அறியமுடியாது. அதற்கு குணம் குறிகள் இல்லாததால் வாக்கால் சொல்ல முடியாது. அதனால் அது வாக்குக்கு விஷயமாகாது என்பதை நீ நன்கு அறிந்து கொள்வாயாக'' (இனம், குணம், செயல், விசேசம், சம்பந்தம் இல்லாதது பிரம்மம்).

★★★

## 8.

**வாக்கியம் தனக்கெட் டாது வத்துஎன்று உரைத்த வேதம்**
**வாக்கிய விருத்தி யால்அவ் வத்துவைக் காட்டிற் றன்றோ**
**வாக்கியங் களிலே மானம் ஆவதேது என்றாய் ஆகில்**
**வாக்கியம் இரண்டும் மெய்யே மறைகள்பொய் யாது கேளாய்.**

பிரம்மம் வாக்குக்கு எட்டாதது என்று கூறிய வேதம் மகாவாக்கிய விசாரத்தால் அப்பிரம்மத்தைக் காட்டியது 'தத்'பத 'துவம்'பத லட்சணா விருத்தியால் அல்லவா? இவ்விரண்டு வகை வாக்கியங்களுள் எதைப் பிரமாணமாகக் கொள்வது என்று சந்தேகப்படுவாயாகில் இரண்டு வாக்கியங்களும் உண்மைதான். வேதங்கள் அசத்தியம் கூறாது; அதனை நீ கேட்பாயாக.

★★★

## 9.

**தன்பதி அல்லாப் பேர்கள் தமைஅல்லன் அல்லன் என்றாள்**
**அன்பனைக் கேட்ட நேரம் அவள்வெட்கி மௌனம் ஆனாள்**
**என்பது போல நீக்கி இதன்றிதன்று எனச்சே டித்த**
**பின்பரப் பிரமம் தன்னைப் பேசாமல் காட்டும் வேதம்.**

சில ஆடவர்களுடன் கூடியிருந்த ஒருத்தியின் கணவனை அறியாத மற்றொருத்தி உன் கணவன் இவனா? இவனா? என்று அக்குழுவிலுள்ளோரை ஒவ்வொருவராகச் சுட்டிக் கேட்டுவர, அந்த மனைவியானவள் தன் கணவன் அல்லாதவர்களை இவன் இல்லை இவன் இல்லை என்று கூறி வந்தவள் அவளது கணவனைச் சுட்டிக் காட்டிக் கேட்டபொழுது அவள் நாணமுற்று மௌனமானாள் என்னும் இந்த நியாயம் போல. பிரம்மம் அல்லாத சடங்களை இது பிரம்மம் அன்று, இது பிரம்மம் அன்று என்று ஒவ்வொன்றாக நீக்கி பின்னர் அவ்வாறு நீக்கமுடியாத சேதன ரூபமாகிய பரப்பிரம்மத்தை

மௌனமாக வேதம் காட்டும் (நமது கண்களால் நமது கண்களைப் பார்க்க முடியாது. ஆனால் அவைகளால்தான் மற்றவற்றைப் பார்க்கிறோம். அதுபோல பிரம்மத்தால்தான் எல்லாவற்றையும் காண்கிறோம். அது நிசேத ரூபமாகக் காட்டுகிறது).

★★★

## 10.

**முந்திய சங்கை தீர மொழிந்ததை அறிந்து கொள்வாய்**
**பிந்திய சங்கைதீரப் பேசும்உத் தரம்நீ கேளாய்**
**இந்திரியங் களுக்கு ராசன் இதயமாம் அதின்எண் ணங்கள்**
**புந்தியும் மனமும் என்றே புறத்தகத்து உலாவி ஆடும்.**

பிரம்மம் ஆகம பிரமாணத்துக்கு எட்டுமா? எட்டாதா? என்ற முதல் சந்தேகம் தீர நாம் கூறிய விடையை மனதில் கொள்வாயாக. அது மனதுக்கு விஷயமாகுமா? விஷயமாகாதா? என்ற ஐயத்துக்கு விளக்கத்தை இப்போது கேட்பாயாக. இந்திரியங்களுக்கெல்லாம் அரசன் அந்தக்கரணம் ஆகும். அந்தக்கரணத்தின் விருத்திகள் புத்தியும் மனமும். அவைகள் தேகத்துக்கு உள்ளும் புறமும் சஞ்சரித்து உலாவும்.

★★★

## 11.

**உன்முகம் போல்கண் ணாடிக்கு உள்ஒரு முகம்கண் டாற்போல்**
**சின்மய வடிவின் சாயை சித்துப் போல் புத்தி தோன்றும்**
**நின்மனோ விருத்தி அந்த நிழல்வழி யாய்உ லாவும்**
**தன்மநன் மகனே இத்தைத் தான்அன்றோ ஞானம் என்பார்.**

தர்மவடிவாகிய சத்புத்ரா! உன்னுடைய முகம்போல உனக்கு எதிரேயுள்ள கண்ணாடிக்குள்ளே ஒரு முகம் பிரதிபலிப்பதுபோல சித்ரூபமான கூடஸ்தனுடைய நிழலானது மற்றொரு சேதனம்போலப் புத்திவடிவ அந்தக்கரணத்தில் பிரதிபிம்பிக்கும். உனது மனோ விருத்தியானது அந்த சித்தின் நிழலை அநுசரித்து வெளியில் சஞ்சரிக்கும். இந்த விருத்தியை ஞானம் என்று பெரியோர் கூறுவார்கள்.

★★★

## 12.

**உருக்கிய தராநீர் நாநா உருவங்கள் ஆனாற் போல**
**விருத்திகள் கடப டாதி விடயமாய்ப் பரிண மிக்கும்**
**அரும்பல விடயம் எல்லாம் ஆபாசன் தோற்று விக்கும்**
**இருட்டினில் விளக்கும் கண்ணும் இல்லாமல் பொருள்கா ணாதே.**

குடுவையில் வைத்து உருக்கிய தராநீரானது அச்சுக் கருவிகளில் வார்த்தபோது, அவ்வச்சுக் கருவிகளுக்கு ஏற்ப பல உருவங்கள் ஆவதைப் போல, அந்தக்கரண விருத்திகள் இந்திரியங்கள் மூலமாக வெளிப்பட்டு தமது விடயங்களுக்கு சமானமாய் குடம், படம் முதலான பொருள்களாக பரிணாமம் அடைகின்றன. அந்தக்குடம், படம் முதலிய விஷயங்களையெல்லாம் சிதாபாசன் பிரகாசிக்கச் செய்கிறான். இருளில் உள்ள பொருள்களைக் காண வெளிச்சமும் கண்ணும் வேண்டும். அதைப்போல் உலக விஷயங்களைக் காண மனோவிருத்தியும் சிதாபாசனும் வேண்டும்.

★★★

## 13.

**எரிகின்ற விளக்கால் கண்ணால் இருட்பொருள் காணல் வேண்டும்**
**தெரிகின்ற பரிதி காணச் சென்றிடில் கண்ணே போதும்**
**விரிகின்ற சகத்தைக் காண விருத்தியும் பலமும் வேண்டும்**
**புரிகின்ற விருத்தி ஒன்றே போதும் மெய்ப் பொருள்காண் போர்க்கே.**

இருட்டிலுள்ள பொருள்களைப் பார்க்க விளக்கொளியும், கண்ணொளியும் வேண்டும். அவற்றுள் ஒன்று இல்லை என்றாலும் பார்க்க முடியாது. ஆனால் சூரியனைப் பார்க்க கண்ணொளி ஒன்றே போதும்; விளக்கு அவசியமில்லை. அதுபோல இந்த உலகத்தைக் காண மனோவிருத்தியும் சிதாபாசனும் வேண்டும், பிரம்மத்தை அறிய நான் சச்சிதானந்த பிரம்மம் என்ற மனோவிருத்தி ஒன்றே போதும். (விஷய ஞானத்தை அறிய விருத்தி ஞானமும், சிதாபாசனும் வேண்டும். ஆத்மாவை தரிசிப்பதற்கு விருத்தி ஞானம் ஒன்றே போதும்).

★★★

## 14.

*விருத்தியும் பலமும் கூடும் விகாரமே மனம்என் பார்கள்*
*கருத்தெழு விருத்தி வேண்டும் கணக்கினால் மனத்திற்கு எட்டும்*
*வருத்திய பலம் ஆம் இந்த மனத்திற்கெட் டாது கண்டாய்*
*அருத்தம்இப் படிஎன் றையம் அகன்றுநீ தெளிந்தி டாயே.*

எண்ணமும் சிதாபாசனும் (பலமும்) சேரும் பரிமாணம் மனம் எனப்படும். பிரம்மமானது சற்குரு, வேதாந்த சாஸ்திரம் கூறும் 'நான் பிரம்மம்' என்னும் பிரம்மாஹார விருத்திக்கு விஷயமாகும். ஆனால் 'யான்' 'எனது' என்னும் ஜீவபோதத்துடன் (சிதாபாசன்) கூடிய மனதுக்கு விஷயமாகாது. மனதுக்கு எட்டும், எட்டாது என்று நான் கூறியதற்கு இதுதான் பொருள் என்று அறிந்து உனது ஐயத்தை அகற்றித் தெளிவு பெறுவாயாக.

*(பிரம்மம் உலகப் பொருள்களைப் போல மனதுக்கு எட்டாது. சாஸ்திர குரு உபதேசிக்கும் ஆகம பிரமாணத்தால் எட்டும்)*

★★★

## 15.

*வஞ்சகம்இல் பரமார்த்த குருவே சொன்ன*
*வழிகள் அறிந் தேன் இனிஓர் வசனம் கேளீர்*
*சஞ்சலம் அற்று அகண்டபூ ரணமாய்ச் சித்தம்*
*ததாகாரம் ஆவதன்றோ சமாதி யோகம்*
*உஞ்சலை ஒத்து அலைவதுதன் சுபாவம் ஆகி*
*ஒருகணத்தில் பலஉலகாய் உதிக்கும் இந்த*
*நெஞ்சகம்வத் துவில்அசையா நிவாததீப*
*நிலை அடைவது எப்படியோ நீர்சொல் வீரே.*

வஞ்சக குணமற்ற யதார்த்த குருமூர்த்தியே! தேவரீர் உபதேசித்தருளிய மார்க்கங்களை நன்கு தெரிந்து கொண்டேன். இன்னுமொரு விண்ணப்பம் கேட்டருளல் வேண்டும். மனமானது சப்தாதி விஷயங்களில் செல்லாமல் சலனமின்றி அகண்ட பரிபூரண ஸ்வரூபமாய்த் தன்மயமாவதல்லவா சமாதி யோகம் என்னும் சித்த நிரோதம். அவ்வாறில்லாமல் ஊஞ்சலைப்போல சஞ்சலப்படுவது தனதியல்பாய், க்ஷணப்பொழுதில் நாநா உலகமாய் தோன்றுகின்ற எனது இந்த மனமானது

பிரம்மத்தில் சலனமின்றி காற்றில்லாத இடத்தில் வைக்கப்பட்ட விளக்கைப்போல நிலைபெறுவ தெவ்வண்ணம்? அதனை தேவரீர் கூறியருளல் வேண்டும்.

★★★

## 16.

*கருதுமனோ குணம்மூன்றாம் மூன்றில் ஒன்று*
*கதித் தெழுந்தால் மற்றிரண்டும் கரந்து நிற்கும்*
*தருமம்மிகும் சத்துவம்மேல் ஆன போது*
*சன்மார்க்கம் ஆனதெய்வ சம்பத்து உண்டாம்*
*மருவுரசோ குணம் ஆகில் உலகதேக*
*வாதனையாம் சாத்திரவா தனையும் ஆகும்*
*அருமகனே தமோகுணம்மேல் ஆன போதில்*
*அசுர சம்பத்து உண்டாகும் அறிந்து கொள்ளே.*

புத்திர சிகாமணியே! விஷயங்களை நினைக்கின்ற மனம் சத்வம், ராஜசம், தாமசம் என்னும் முக்குண மயமானது. இம்மூன்று குணங்களுள் ஒருகுணம் அதிகரிக்கும்பொழுது, மற்ற இரண்டு குணங்களும் அடங்கி இருக்கும். சத்கர்மத்துக்கு ஏதுவாகிய சத்வகுணம் மேலிட்டிருக்கும்பொழுது சன்மார்க்கமாகிய தெய்வ சம்பத்து உண்டாகும். ரஜோகுணம் மேலிடும்பொழுது உலகில் சிறப்படைய வேண்டும் என்னும் லோக வாசனை, உடல் நலமாக இருக்க வேண்டும் என்னும் தேக வாசனை, சகல சாஸ்திரங்களையும் கற்க வேண்டும் என்னும் சாஸ்திர வாசனை ஆகிய மூன்று வாசனைகள் (எண்ணங்கள்) உண்டாகும். தமோ குணம் மேலிடும்பொழுது துர்குணங்களான அசுர சம்பத்து உண்டாகும். இதனை நீ கவனமாக அறிந்து கொள்வாயாக.

★★★

## 17.

*மனதுசத் துவசொ ரூபம் மற்றிரண்டும்*
*வந்துகலந் தனஅவற்றை மாற்றி னால்போம்*
*தனதுசன்மார்க் கத்தைவிடாது இருந்த போது*
*தமோ குணமும் ரசோகுணமும் சமிக்கும் பின்னை*

*கனபரிணா மம்சலனம் போம்போ னக்கால்*
*களங்கமற்று நின்றஆ காசம் போலும்*
*நின துளம்அப் படிஆம்அப் பிரமத்து ஒன்றாய்*
*நிருவிகற்ப சமாதியிலே நிற்கும் தானே.*

மனது சத்வகுண வடிவமானது. மற்ற இரஜோ, தமோ குணங்கள் இரண்டும் இடையில் வந்து சேர்ந்தவை. அவற்றை நீக்கினால் நீங்கிப் போகும். மனம் தனது இயற்கை இயல்பான சத்வகுணத்தில் தோன்றும் தெய்வ சம்பத்தை விடாது அநுஷ்டித்து வந்தால் சலனத்துக்கு ஏதுவான ரஜோ குணமும், விஷய வடிவமான தமோ குணமும் நீங்கிவிடும். அதனால் மனது ஓயாது சஞ்சலப்படுவதும் விஷய வாசனைகளில் உழல்வதும் ஒழிந்து போகும். அவை போனபின் மனம் நிர்மலமான ஆகாயத்தைப் போல சஞ்சலமற்று தெளிந்து விளங்கும். அப்போது சத்வமனம் பிரம்ம சொரூபத்தில் ஒன்றி நிருவிகற்ப சமாதியில் நிற்கும்.

★★★

## 18.

*களங்கமற்ற கண்ணாடி தன்முன் வேறுஓர்*
*களங்கமற்ற கண்ணாடி காட்டும் போது*
*விளங்கிய தன் மயமாகி அபேதம் ஆகி*
*விகற்பமின்றி நிருவிகற்பம் ஆனாற்போல*
*அளந்தறியப் படாவிபுவாய்ச் சத்தாய்ச் சித்துஆய்*
*ஆநந்தம் ஆம்பிரமத்து ஐக்யம் ஆன*
*உளம்தெளிந்த படிஇருந்தால் உலகம் எங்கே*
*உலைவுஎங்கே என்றுசங்கை ஒழித்தி டாயே.*

நிர்மலமாய் ஒரு கண்ணாடி முன் மற்றொரு களங்கமற்ற கண்ணாடியைக் காண்பித்தால் அது களங்கமற்ற கண்ணாடியின் மயமாய் யாதொரு வேறுபாடும் இல்லாமல் இருக்கும். அதுபோல அளவிட்டறிய முடியாத வியாபகமாகிய சச்சிதானந்த பிரம்ம ஸ்வரூபத்தில் ஒன்றிய மனமானது பிரம்மத்தில் ஐக்கியமாகி பிரம்ம மாகவே தெளிவுற்று இருக்கும். அதனிடத்தில் உலகம் பரிணமிக்காது; சலனங்கள் தோன்றாது என்பதை நிச்சயித்து உன் ஐயத்தை அழித்து விடுவாயாக (சத்துவ குணம் ஓங்கியிருக்கும் மனதில் உண்மைப் பொருள் தெளிவாக விளங்கும்).

## 19.

ஏகம் ஆய் மனம் இறந்தால் சீவன் முத்தர்
இருக்கும் மட்டும் பிராரத்தம் எதனால் உண்பார்
போகம்ஆ னதுபுசித்துத் தொலைப்ப தன்றோ
புசிப்ப தென்றால் மனம்தானும் போன தன்றே
சோகம்ஆம் மனம்இறந்தால் போகம் இல்லை
தோன்றும் எனின் முத்தர்என்று சொலக்கூ டாதே
மோகம்ஆம் இதுதெளியக் குருவே நன்றா
மொழிந்தருள்வாய் தெளிந்ததன்றோ முத்தி தானே.

பரம ஆசாரியரே! பிரம்ம சொரூபமாகி மனம் நசித்துவிட்டால் ஜீவன் முக்தர்கள் உடல் உள்ளவும் பிராரப்த கர்ம போகங்களை எதனால் அநுபவிப்பார்கள். கர்மத்தை அனுபவித்துத்தானே நீக்கமுடியும்? போக சாதனமான மனம் நசித்துவிடுமாயின் போக அனுபவம் எப்படித் தோன்றும்? மனம் தோன்றுமாயின் அவர்களை ஜீவன்முக்தர் என்று கூறமுடியாதே? மயக்கத்துக்கு இடமான இந்த சந்தேகம் தெளியுமாறு விளக்கி அருள வேண்டுகிறேன்.

(மனம் நான் அல்ல என்று தெரிந்து கொண்டதால் அது இருந்தாலும் இல்லை என்றுதான் பொருள்)

★★★

## 20.

மனநாசம் சொரூபமென்றும் அரூபம் என்றும்
வகுத்துரைப்பார் இருவகையா வரும்இ வற்றில்
வினவாத சீவன்முத்தர் இடத்தில் ஒன்றும்
விதேகமுத்தர் இடத்தில்ஒன்றும் மேவும் கண்டாய்
தனதான சத்துவமாய் மனம்சே டித்துத்
தமசுரச சுகள்நசித்தல் சொரூப நாசம்
அனகாசத் துவம்தானும் இலிங்க தேகம்
அடங்கும்போது அடங்குதலே அரூப நாசம்.

எனது அருமை மகனே! மனோநாசத்தை உருவ நாசம், அருவ நாசம் என்று இரண்டுவகையாக அறிவுடையோர் வகுத்துக் கூறுவார்கள். அசம்பாவனை, சம்சய பாவனை, விபரீத பாவனைகளெல்லாம் தீர்ந்த

நிலையிலுள்ள ஜீவன் முக்தர்களிடம் உருவ நாசம் உண்டாகும். மனம் தனது இயற்கை இயல்பான சத்வகுணமாய் விசேசித்து நிற்கும் பொழுது தமோ, ரஜோ குணங்கள் நசித்துவிடும். அது மனதின் உருவ நாசம் எனப்படும். சூக்கும சரீரம் நசிக்கும்பொழுது (விதேக முத்தி) சத்வகுணமும் நசிப்பது அருவ நாசம் எனப்படும்.

★★★

## 21.

சுத்தமாம் சத்துவமே உண்மை ஆகும்
துகள்இருள்போ னால்மனம்என் சொல்லும் போம்போம்
வர்த்தமா னத்தில்வந்த உணவை உண்பார்
வருவதும்போ வதும்நினைந்து மகிழார் வாடார்
கர்த்தராம் அகந்தையைவிட் டகர்த்தர் ஆகிக்
கரணவிருத் திகள் அவத்தை காண்பார் ஆகி
முத்தராய் இருக்கலும்ஆம் புசிப்பும் கூடும்
முட்டிலைஎன் றறிந்துசங்கை மோசிப் பாயே.

களங்கமற்ற சத்வ குணத்தின் காரியமான மனத்திற்கு சத்வகுணமே யதார்த்த வடிவமாக இருப்பதால் ரஜோ தமோ குணங்கள் நீங்கிவிடும். அவ்வாறு நீங்கவே மனம் என்ற பெயரும் இல்லாமல் போகும். இவ்வாறு உருவ மனம் அழிந்து அருவ மனமுடைய ஜீவன் முத்தர்கள் பிராரப்த கர்மத்தால் நிகழ்காலத்தில் கிடைக்கும் உணவை உண்பார்கள். வருவதும், போவதும் ஆன விஷயங்களை எண்ணி மகிழ்ச்சியோ, துக்கமோ அடைய மாட்டார்கள். யான் எனது என்னும் கர்த்திருத்துவத்தை நீக்கி அகர்த்தராய், அந்தக்கரண விருத்திகளுக்கும், அவஸ்தா திரயங்களுக்கும் சாட்சியாய் இருப்பார்கள். அவர்கள் ஜீவன் முத்தர்களாகவோ, போகத்தை அனுபவிப்பவர் களாகவோ, 'குணங்கள் குணங்களில் பிரவேசிக்கின்றன'. 'இந்திரியங்கள் இந்திரியார்த்தங்களில் பிரவேசிக்கின்றன.' 'நான் கர்த்தா,' 'போக்தா அல்ல' என்று இருப்பார்கள். இதற்கு எவ்விதத் தடையுமில்லை என்பதை அறிந்து உனது சந்தேகத்தை நீக்கிக் கொள்வாயாக.

★★★

## 22.

விவகார வேளைஎலாம் சமாதி என்றால்
விகற்பமன்றோ மனம் அலைந்து விடாதோ விட்டால்
அவதானம் நழுவுமன்றோ என்றாய் ஆகில்
அதற்கொருதிட் டாந்தம்கேள் ஆசை கொண்டு
நவமாகப் பரபுருடன் தன்னைக் கூடி
நயந்தசுகம் அனுபவித்த நாரி நெஞ்சம்
தவமான மனைத்தொழில்கள் செய்யும் போதும்
தழுவியது பவித்தசுகம் தனைவி டாதே.

மகனே! நிகழ்காலத்தில் நேரிட்ட செயல்களைச் செய்யும் போதெல்லாம் சமாதி என்று கூறினால் அந்த வியவகாரங்கள் அவர்களுக்கு விகர்ப்பம் ஆகாதா? விகற்பத்தினால் மனம் அலையுமே; மனம் சஞ்சலமடைந்தால் ஜீவ பிரம்ம ஐக்கியம் நழுவிப் போகு மல்லவா? என்று நீ கேட்பாயாகில் அதற்கு ஒரு திருஷ்டாந்தம் கூறுகிறேன். காமம் மிகுந்த ஒரு பெண் பரபுருடனுடன் கூடி சுகம் அநுபவித்த பின்பு, தன்னுடைய வேலைகளைச் செய்யும்போது சோர நாயகனுடன் அநுபவித்த சுகத்தை மறக்க மாட்டாள். அதுபோல ஜீவன் முத்தரது மனமும் வியவகார வேளையிலும் ஜீவ பிரம்ம ஐக்கிய பாவனையை (திடஞானம்) மறக்காமலிருக்கும். ஜீவன் முத்தருக்கு விவயகாரத்தினால் எந்த ஒரு கெடுதியும் நேராது. (ஆழ்மனம் பிரம்ம ஞானத்தில் உறுதியாக இருக்கும். மேல்மனம் உலக வியவகாரங்களில் உலவும். பிரம்ம ஞானம் எப்பொழுதும் இருக்கும். எண்ணங்கள் எப்பொழுதும் இருக்காது, தேவையான போது நினைவுக்கு வந்துபோகும்.

★★★

## 23.

தேகத்தன் அலன்ஆகி அகர்த்தன் ஆகிச்
சீவனின்றிப் பிரமமாய்த் தெளிந்த முத்தன்
போகத்தை உண்பன் என்றால் கருத்தா ஆமே
பூரணமாம் அகர்த்தனுக்குப் போகம் உண்டோ

சோகத்தை அறுத்தருளும் குருவே இந்தத்
துகள் அறுக்க வேண்டும்என்று சொன்னாய் ஆகில்
மாகர்த்தன் மாபோகி மாத்தி யாகி
வகைமூன்றாய் அவர்இருக்கும் மகிமை கேளாய்.

சோக மோகத்தைக் கெடுத்து இன்பத்தை அருளும் ஆசாரியரே! உடல் சம்பந்தமான அபிமானங்கள் அற்று அகர்த்தாவாய் ஜீவபாவம் ஒழிந்து கூடஸ்த பிரம்ம ஐக்கியமாகத் தன்னை அறிந்திருக்கும் ஜீவன் முக்தன் விஷய போகங்களை அநுபவிப்பான் என்று கூறினால் அவன் கர்த்தாவாகி விடுவானல்லவா? பிரம்மமே தானாக பரிபூரணமான அகர்த்தாவாகிய ஜீவன் முத்தருக்கு பிராரப்த கர்ம போகம் எப்படிச் சம்பவிக்கும்? என்று கேட்பாயாகில் ஜீவன் முத்தர் மாகர்த்தன், மாபோகி, மாத்தியாகி என்று மூவகையினர் ஆவர். அவர்களுடைய மகிமைகளைக் கூறுகிறேன்.

★★★

## 24.

செய்கையும்செய் விக்கையும்அற் றிருக்கும் காந்தச்
சிலைமலை முன் இரும்புகள்சேட் டிக்கு மாபோல்
செய்கையும்செய் விக்கையும்அற் றிருக்கும் என்முன்
செடமான உலகம் எலாம் சேட்டை செய்யும்
மெய்கலந்த இந்திரிய விகார ரூப
விவகார விருத்திக்கும் விருத்தி தானா(ய்)
மெய்கலந்த சமாதிக்கும் சாட்சி யேநான்
வெயில்போல் என்று உறைத்தவனே விபுமா கர்த்தன்.

ஒன்றைச் செய்தலும் பிறிதொன்றைச் செய்வித்தலுமில்லாத காந்தமலையின் முன்னால் இரும்புத்துண்டுகள் அசைவதுபோல தொழில் செய்தலும், செய்வித்தலும் இல்லாத எனக்கு முன்னால் ஜடப்பிரபஞ்சங்கள் யாவும் தத்தம் தொழில்களைச் செய்கின்றன. உலகத்தின் செயலுக்கும் செயலின்மைக்கும் சூரியன் சாட்சி மாத்திரமாய் இருப்பதுபோல, சரீரத்தோடு கூடிய ஞானகர்மேந்திரி யங்களின் பேத வியவகாரங்களான மனோவிருத்திக்கும், அவ்விருத்திகள் அடங்கி தன்மயமான சமாதிக்கும் சாட்சி மாத்திரமே நான் என்று ஸ்திரமாக இருப்பவன் மாகர்த்தனாகும் (அகர்த்தா).

★★★

## 25.

அறுசுவையின் குணம்குற்றம் அசுத்தம் சுத்தம்
அபத்தியம்பத் தியம்என ஊன் ஆய்ந்தி டாமல்
பொறுமையுடன் கிட்டினதைக் காட்டுத் தீப்போல்
போகங்கள் புசிப்பவன்மா போகி ஆகும்
சிறிதுபெரி துகள்தனதுஅந் நியங்கள் நன்மை
தீமைகள்சே ரினும்படிகச் செயல்போல் சித்தம்
வெறிதுஇருக்கும் அவனேமாத் தியாகி ஆவன்
விரதம்இம்மூன் றுடையவரே வீடு உளோரே.

சாதனைக் காலத்தில் இதை உண்ணலாம், இதை உண்ணக் கூடாது. இன்னாரிடம் பெறலாம், இன்னாரிடம் பெறக்கூடாது என்று தீவிரமாக இருந்தவன் ஞானம் பெற்ற பின்பு, அநுஷ்டானங்களை விட்டுவிட்டு, வாழ்க்கைக்குத் தேவை என்ற அளவுக்குமேல் அவைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கமாட்டான். அறுசுவை உணவுகளுள், இது நல்லது; இது குற்றமுள்ளது, இது சுத்தமானது இது அசுத்தமானது, இது பத்திய உணவு; இது அபத்திய பதார்த்தம் என்று உணவை ஆராய்ந்து பார்க்காமல் சகிப்புடன், நேரிட்டவற்றை எரிக்கும் காட்டுத்தீப் போன்று கிடைத்த உணவுகளை அநுபவிப்பவன் மாபோகி எனப்படுவான். இது அரிய பொருள்; இது எளிய பொருள்; இது என்னுடையது; இது பிறருடையது; இது நல்வினை; இது தீவினை என்று எது தன்னை வந்தடைந்ததாயினும் அதனால் ஒருசிறிதும் மாறுபாடடையாது, தன்னை அடுத்த பொருள்களின் உருவத்தை அடையாத ஸ்படிகத்தின் தன்மையைப் போல் பற்றற்ற சித்த முடையவன் மாதியாகி ஆவான். இம்மூன்று விரதங்கள் உடையவர்களே ஜீவன் முத்தராவர்.

★★★

## 26.

மெய்யும் கொண்டு பிராரத் தம்தரும் விதிவழி நின்றிடவும்
உய்யும் கர்மிக ளுக்குஅநுகுணமா உறுதொழில் செய்திடவும்
செய்யும் செய்கை முடித்தவன் என்றுரை செப்புவது எப்படியோ
நையும் துன்பம் அகற்றிய குருவே நலமா அருள்வீரே.

பிறவித் துன்பம் அகற்றியருளிய குருநாதரே! உடலுடன் கூடி இருந்துகொண்டு பிராரப்த கர்மத்தால் நேரிடுகின்ற நியதி மார்க்கத்தில் வாழ்ந்துகொண்டு, தாங்கள் உய்ய வேண்டுமென்று விரும்பும் கரும காண்டிகளுக்கு அநுகூலமாக கரும உபதேசங்களைச் செய்து வருகின்ற ஞானியை கிருதகிருத்தியன் என்று எவ்வாறு கூறலாம் என்பதை தேவரீர் கூறியருள வேண்டுகிறேன்.

★★★

## 27.

***ஆடவர் செய்தொழில் மூவகைஆகும் அவித்தைவ சத்துறுநாள்***
***ஏடனை மமதை அகந்தையு ளார்க்கே இகபர விவகாரம்***
***வீடணு குவம்எனும் இச்சைஉ ளார்க்கே வித்தைப டிப்பதெலாம்***
***பாடல்மி கும்தொழி லாற்பலன் உண்டோ பரிபூ ரணமானால்.***

தத்துவஞானமடைவதற்கு முன்பு மக்கள் அவித்தை வசத்தில் பொருந்தியிருக்கும்போது போகத்தில் ஆசையும், தேகத்தில் நான் என்னும் அகங்காரமும், குடும்பத்தில் எனது என்னும் அபிமானமும், உடையவர்களாக இருப்பார்கள். தாங்கள் விரும்புவதைப் பெறவும், வேண்டாதவைகளை நீக்கவும் இகலோக போக சாதனங்களாகிய உழவு முதலிய தொழில்களையும், பரலோக சாதனைகளாகிய யாக, யக்ஞங்களையும் செய்வார்கள். புண்ணியத்தால் சித்த சுத்தி அடைந்து உலக சுகங்கள் அநித்தியம் என்பதை அறிந்து மோட்சமடைய விரும்பும் முமுட்சுகள் சிரவணாதி சாதனைகளைச் செய்வார்கள். அவர்கள் தத்துவ ஞானம் அடைந்து பிரம்மவடிவ பரிபூரண நிலை அடைந்துவிட்டால், அவர்களுக்கு இகலோக, பரலோக போக சாதனங்களாகிய உழவு, யக்ஞம் முதலியவைகளாலும்; மோட்ச சாதனமாகிய சிரவணாதிகளாலும் யாதொரு பயனும் இல்லை. அதனால் ஞானிகள் கிருத கிருத்தியர்கள்தான் என்பதை நீ யூகித்து உணரக்கடவாய். (ஞானி எதை விரும்பியும் ஒன்றைச் செய்வதில்லை, அவன் செயல் செய்து ஒன்றைப் பெறவேண்டியதும் இல்லை. செயல் செய்யாததால் ஒன்றை இழப்பதும் இல்லை. ஆகவே ஞானி கர்மம் செய்தாலும் செய்யாதவன் ஆகிறான்).

★★★

## 28.

**குரவர்சி காமணி யேகே ளீர்நீர் கூறின வழி ஒக்கும்**
**பரமுடன் இகமும்இ ழந்தவர் அன்றோ பழகுவர் மெய்ஞ்ஞானம்**
**விரவும் முயற்சியின் மீண்டவர் அதைஇனி வேண்டுவரோ வேண்டார்**
**சிரவண மனனா திகள்வேண் டாவோ சித்தம்உ றைத்திடவே.**

தேசிக சிரோரத்தினமே! ஜீவன் முத்தர் கிருத கிருத்தியர் என்று தாங்கள் அருளிச் செய்தது ஒப்பத்தக்கதாகும். இகலோக பரலோகங்களில் பற்றற்ற விவேகிகள் தானே தத்துவஞான அப்பியாசம் செய்வார்கள். அவர்கள் உலக வியவகாரத்தை விரும்ப மாட்டார்கள் என்பது உண்மைதான். ஆனாலும் சித்தமானது ஆன்மாவினிடத்துப் பிறழாது நிற்கும் பொருட்டு அவர்களுக்கு சிரவணாதிகள் வேண்டியதில்லையா?

★★★

## 29.

**கிளர்மக னேகேள் தத்துவம் அறியார் கேட்டல்செ யக்கடனே**
**தளர்வறு சிந்தித் தலின்முயல் வார்சிலர் சந்தே கங்களுளார்**
**தெளிதலின் நிற்பார் விபரீ தப்பேய் தீரா வாதனையோர்**
**வெளிஉரு வாய்அறி வாய்நிறை வாயினர் வேண்டுவ**
**தொன்றுண்டோ.**

அறிவுடை புத்திரனே! பரபிரம்மத்தை தமது நிஜவடிவ ஆத்மாவாக அறியாதவர்கள் சிரவணம் செய்ய வேண்டும். நீ பிரம்மம் என்று உபதேசித்த சற்குருவினது உபதேசத்தை நம்பாமல் நான் பிரம்மமா? அல்லவா? என்று ஐயப்படுபவர்கள் அதை நிவர்த்திக்க மனனம் செய்யவேண்டும். இந்த உலகம் உண்மை; உடல்தான் ஆத்மா என்ற விபரீத புத்தியுடையவர்கள் தெளிதல் பொருட்டு நிதித்யாசனம் செய்ய வேண்டும். அசம்பாவனை, சம்சய பாவனை, விபரீத பாவனை என்னும் மூன்றுமின்றிச் சச்சிதாநந்த பரிபூரண வடிவமாய் விளங்கும் ஜீவன் முக்தர்கள் சிரவண மனன நிதித்தியாசனங்களுள் விரும்பிச் செய்யத்தக்கது யாதொன்றுமில்லை என்பதை நீ அறிவாயாக.

★★★

## 30.

***ஐயா கேளீர் தத்துவ ஞானியும் அஞ்ஞா னிகள்போலச்***
***செய்யா நின்றேன் கண்டேன் உண்டேன் சென்றேன் எனலாமோ?***
***பொய்யாம் விபரீ தங்கள்அ வர்க்குப் போயின என்றீரே***
***மெய்யாம் பிரமவி சாரம்இ தன்றே வெளியா உரையீரே.***

தேசிக மூர்த்தியே! மெய்யுணர்வுடைய சீவன் முத்தருக்கு மித்யாவடிவமான அசம்பாவனை சம்சய பாவனை, விபரீத பாவனைகளாகிய பேத பாவனைகள் நீங்கிவிட்டன என்று முன்னர் அருளினீர்கள். அவர்கள் அஞ்ஞானிகளைப் போல நான் இதைச் செய்கிறேன், இதைப் பார்த்தேன், இதை உண்டேன், இவ்விடம் சென்றேன் என்று கூறலாமா? அவர்களுக்கு தத்துவ வடிவ பிரம்ம விசாரத்தின் பயன் இதல்லவே. அதை நன்றாகத் தெரியும்படி அருளிச் செய்தல் வேண்டும்.

★★★

## 31.

***ஓய்ந்தக னாவில் கண்டப ழங்கதை ஓதுவன் வாதனையால்***
***ஆய்ந்தறி வுற்றவன் அப்படிச் செப்புவன் ஆபா சனும் ஆகான்***
***மாய்ந்ததன் உடல்வேம் அளவும் விண்ணவன் மனுடன்எ னப்படுவான்***
***வீய்ந்தசி தாபா சன்போம் அளவும் விவகா ரம்தொடரும்.***

இந்திரியங்கள் செயல்படாத சொப்பனத்தில் ஒருவன் தான் கண்ட செய்திகளைப் பழக்க வாசனையால் விழிப்பில் கூறுவான். அதுபோலவே மகாவாக்கியத்தை ஆராய்ந்து தன்னை யார் என்று அறிந்த ஜீவன் முத்தனும் பூர்வவாசனையால் நான் செய்கிறேன், அதைக் கண்டேன், இதை உண்டேன், அங்கு சென்றேன் என்று வியவகரிப்பான். அவ்வாறு கூறினாலும் அவன் ஜீவ பாவமுடையவ னல்லன். வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதனால் தேவ தன்மை அடைந்த ஒருவன் இறந்து அவ்வுடல் சாம்பலாகும் வரையில் மனிதன் என்றுதான் பிறரால் சொல்லப்படுவான். அதுபோல தத்துவஞானி அஞ்ஞானம் நீங்கி தனது நிஜ வடிவமான பிரம்மமாகவே விளங்கும் ஜீவன் முத்தனும், தனக்கெனச் சொரூபமில்லாது ஒழிந்த சிதாபாசன் நீங்கும் அளவும் விதேகமுத்தி அடையும்வரை பிறரால் ஜீவன் என்றே

சொல்லப்படுவான். அதுவரையில் வியவகாரங்கள் தொடர்ந்து வரும். (பிரம்ம ஞானம் வந்தபின்பும் சரீர அனுபவம் இருக்கும். சரீரம் நான் அல்ல என்ற ஞானமும் இருக்கும்).

★★★

## 32.

**ஆனால் ஐயா குருவே காண்பது அசத்தியம் என்றாலும்**
**நானா விவகா ரம்துயர் அலவோ ஞானசு கம்தருமோ**
**போனால் அன்றோ நன்றாம் நிட்டை பொருந்திடல் வேண்டாவோ**
**தானாம் நிட்டை புரிந்தால் செய்கை தவிர்ந்தவன் எப்படியோ.**

குருநாதா! ஞானியிடம் வியவகாரம் விதேக முத்தி அடையும் வரை தொடர்ந்தால் காணப்படுவன யாவும் மித்தையானாலும் அவற்றைப் பற்றிய வியவகாரங்கள் ஞானிக்குத் துன்பம் தருமல்லவா? அது பிரம்மாநந்தம் தருமா? வியவகாரங்கள் ஒழிந்தால்தானே ஆநந்தம் வெளிப்படும். அதற்காக அவன் நிர்விகற்ப சமாதி செய்ய வேண்டு மல்லவா? சமாதி யோகம் செய்பவன் எப்படி கிருத கிருத்தியன் ஆவான்? இந்த ஐயத்தை நீக்கியருள வேண்டுகிறேன். (ஞானம் பெறுவதுதான் தாத்பரியம் செயல்புரிவதோ, புரியாததோ அல்ல).

★★★

## 33.

**தெரிதரு மகனே ஆரம் பத்தொடு தீரும் விவகாரம்**
**உரியதி யானமும் விவகா ரங்களும் உள்ளத்தொழில் அன்றோ**
**துரியப ரம்பொருள் ஆனவர் வேறொரு தொழில்செய் வதுமுண்டோ**
**அரியச மாதிகள் பழகுவ னேல்அவன் ஆருடனும் அன்றே.**

உண்மையை வினாவி அறியும் மகனே! ஞானியினுடைய வியவகாரம் அவனுடைய பிராரப்த கர்மத்துடன் தீர்ந்துவிடும். நான் செய்கிறேன், பார்க்கிறேன், சமாதியில் இருக்கிறேன் என்பவை எல்லாம் அந்தக்கரணத்தின் செயல்கள் ஆகும். அதனால் துரிய நிலை என்னும் சமாதி நிலையில் பரம்பொருளாக விளங்கும் ஜீவன் முத்தர்கள் தம்மில் தாமாக இருப்பதல்லாமல் வேறு ஒரு தொழிலும் செய்வதில்லை. ஒருவன் தன்னை ஞானி என்று கூறிக்கொண்டு

கர்த்திருத்வ புத்தியோடு யோக சாதனைகள் செய்தால் அவன் சாதகனே அல்லாமல் ஆரூடன் ஆகமாட்டான். இதை நீ நன்கு அறிந்து கொள்வாயாக. (ஆத்மா அசங்கம் என்று தெளிவாக உணர்ந்தவன் எது செய்தாலும் அவன் செய்யாதவனே ஆவான்).

★★★

## 34.

உத்தம குருவே ஆரூ டருமாய் ஒருதொழில் அற்றவருள்
சித்தம்அ டங்குதி யானா திகள்சிலர் செய்குவ தென்என்றால்
இத்தலம் மருவும் பிராரத் தப்பிரி வெப்படி அப்படியே
முத்தரும் வெகுவிதம் ஆகுவர் என்பது முன்னே சொன்னேனே.

உத்தம குருநாதா! கிருத கிருத்தியருள் ஒரு-சிலர் மன மடங்குவதற்கு ஏதுவான மூர்த்தி. தியானம், மந்திரஉச்சாடனம், நாமஜபம் முதலியவற்றை செய்வதேனென்று கேட்பாயாகில் அன்பனே! இவ்வுலகில் ஜீவன் முத்தர்களும் அஞ்ஞானிகளைப் போல பிராரப்த கர்மவினைக்கு ஏற்ற செயல்களைச் செய்வார்கள் என்று நான் முன்னரே கூறியுள்ளேன். (த.வி.90) அதனை நீ நினைவுக்குக் கொண்டுவந்து உணரக்கடவாய்.

★★★

## 35.

நல்லவ னேகேள் உலகுப காரம் ஞானிகள் விவகாரம்
அல்லது வேறொரு பெறுபேறும்இ(ல்)லை அதனால் பிணியும் இலை
வல்லசி ருட்டிமு தற்பல தொழிலால் வருபுண் ணியபாவம்
எல்லவ ருக்கும்அ நுக்கிர கம்செயும் ஈசன்அ டைந்திலனே.

நன்மகனே! ஞானிகள் உலக உபகாரத்தின் பொருட்டு தொழில் புரிகிறார்கள். அவைகளால் அவர்கள் அடையக்கூடிய இன்பமோ துன்பமோ எதுவுமில்லை. இஃது எங்ஙனமென்றால் உயிர்களின்மீது கொண்ட கருணையினால் ஈசுவரன் புரியும் ஐந்தொழில்களால் ஏற்படும் நல்வினை தீவினைகள் ஈசுவரனைச் சேர்வதில்லை என்பதுபோல.

★★★

## 36.

ஈசனுமாய் அரு வாய்உரு வாகிஎ ழுந்தரு ளும்குருவே
ஈசனும் ஞானியும் ஒப்பென் றீரே எப்படி ஒப்பென்றால்
ஈசனும் ஞானியும் மமதைஅ கந்தைஇ கந்தநி னால்ஒப்பாம்
ஈசனும் ஆம்பல சீவரும் ஆம்உல கெல்லாம் இவனாமே.

அருவமான அறிவுருவாய், ஈசனாயிருந்து மானுட வடிவமாய் எழுந்தருளியுள்ள தேசிகமூர்த்தியே! தேவரீர் ஈசனும் ஞானியும் சமானம் என்றீரே, அவ்விருவரும் தம்முள் எப்படி ஒப்பாவார் என்று கேட்பாயாகில், 'யான்' 'எனது' என்னும் அகங்கார மமகாரங்கள் இல்லாதிருப்பதால் ஈசனும் ஞானியும் ஒப்பாகிறார்கள். பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மமே ஆகிறான் என்னும் சுருதி வாக்கியப்படி பிரம்மமாயிருக்கின்ற ஞானி தன்னிடத்தில் கற்பிதமாயுள்ள ஈசுவரனாகவும், உயிர்களாகவும், உலகமாகவும் இருக்கிறான்.

★★★

## 37.

எல்லாச் சீவரும் இவன்ஆம் என்றீர் இவன்தான் முத்தியடைந்து
எல்லாச் சீவரும் முத்திபெ றாமல்இ ருப்பான் ஏனையா
எல்லாச் சீவரும் வெவ்வே றானால் இவன்எல் லாம்அலனே
எல்லாப் பொருளும் உரைத்தருள் குருவே இதைநீர் மொழியீரே.

சற்குரு மூர்த்தியே! ஞானியானவன் எல்லா உயிர்களுமாய் இருப்பான் என்று அருளிச் செய்தீர். அவ்வாறாயின் ஞானி முத்தி அடையும்போது எல்லா ஜீவர்களும் முத்தி அடையவேண்டுமல்லவா? அவ்வாறு அடைவதில்லையே? அவர்கள் ஞானியிடமிருந்து வேறுபட்டிருப்பார்களாயின் ஞானி ஜகஜ்ஜீவ பரனாக இருக்கிறான் என்பது எவ்வாறு பொருந்தும்? இதனை தேவரீர் விளக்கி அருள வேண்டுகிறேன்.

★★★

## 38.

அகம்எனும் ஆன்மா பூரணம் ஏகம்அ நேகவி தம்சீவர்
அகம்எனும் அந்தக் கரணோ பாதிகள் அளவிலை ஆதலினால்
சகம்முழு தும்குளிர் சந்திரன் ஏகம் சலசந் திரர்பலராம்
சகம்அதில் ஏரிகு ளம்சிறு குழிசால் சட்டிகுடம் பலவால்.

அன்பனே! 'நான்' என்று சொல்லும் ஆத்மாவானது பரிபூரணமான ஒன்றாகும். ஆனால் 'நான்' என்ற மனோ உபாதிகள் அநந்தமாக உள்ளன. அதனால் ஜீவகோடிகள் அநேகவிதமாக இருக்கிறார்கள். சந்திரன் ஒன்றாயிருந்தும் ஏரி, குளம், குட்டை,குடம், சட்டி, சால் என்னும் உபாதிகளால் பலவிதமான சந்திரர்களாகத் தோன்றுகிறது. அதுபோல ஆத்மா அந்தக்கரணங்களில் பிரதிபிம்பிப்பதால் பலவிதமான ஜீவர்களாகத் தோன்றுகிறது. (அதிஷ்டான திருஷ்டியில் ஏகம், அந்தக்கரண திருஷ்டியில் அநேகம்).

★★★

## 39.

சட்டிகு டங்களில் ஒன்றுந சித்திடின் அதனுள் சலசந்திரன்
ஒட்டுமு தற்சந் திரனொடு கூடும்ஒ ழிந்தவை கூடாவே
கட்டும்உ பாதிந சித்திடு சீவன் காரண ஆன்மாவில்
கிட்டும்அ யிக்கியம்உ பாதிகெ டாதவர் கேவலம் ஆகாரே.

சட்டி, குடம் போன்ற உபாதிகள் உடைந்தால் அதில் பிரதிபிம்பித்த சந்திரன் பிம்ப சந்திரனோடு ஐக்கியமாகி விடும். மற்ற பிரதிபிம்ப சந்திரன்கள் ஐக்கியமாகாது. அதுபோல அந்தக்கரணத்தி லுள்ள அஞ்ஞான உபாதிகள் தத்துவ ஞானத்தால் நாசமாகும்பொழுது அதில் பிரதிபிம்பித்துள்ள ஜீவன் தனது காரணமான பிம்ப வடிவ ஆத்மாவில் ஐக்கியமாகி விடுவான். அஞ்ஞான உபாதிகள் நாசமாகாத மற்றைய ஜீவர்கள் ஐக்கியமடைய மாட்டார்கள். இதை நன்கு அறிந்து கொள்வாயாக.

★★★

## 40.

இவன்அயன் மால்சிவன் ஆகிய ஈசரொ டெப்படி ஒப்பாவன்
சிவன் முதல் மூவரும் அகிலல்சி ருட்டி திதிநா சங்கள் செய்வார்
அவர்பிறர் மதிகளும் முக்கா லங்களும் அறிவார் விபு ஆவார்
தவம்மிகு குருவே இவனுக் கவையில்லர் சற்றும் காணேனே.

தவத்திற் சிறந்த குருநாதா! ஞானி ஆனவன் மும்மூர்த்திகளுடன் ஒப்பாவான் என்றால் அவர்கள் படைத்தல், காத்தல், அழித்தல் செய்கிறார்கள். மேலும் மற்றவர்களுடைய எண்ணங்களையும் முக்காலங்களையும் அறிகிறார்கள். எங்கும் வியாபகமாக இருக்கிறார்கள். ஞானிக்கு இவைகள் இல்லையே, ஞானி எப்படி மும்மூர்த்திகளுக்கு ஒப்பாவார்?

★★★

## 41.

தடத்து நீர்நிலாத் திரிஒளி உபயமும் தழுவும் ஊர்தனைக் காக்கும்
குடத்து நீர்விளக் கினில்ஒளி இரண்டும்ஓர் குடும்பம்மாத் திரம் காக்கும்
அடுத்த மைந்தனே ஞானியும் ஈசனும் அறிவினால் பிரிவில்லை
கெடுத்த மாயையின் குணங்களால் மேலென்றும் கீழென்றும் பிரிவாமே.

மகனே! ஏரியின் நீரும், நிலவின் ஒளியும் ஓர் ஊர் முழுவதையும் காக்கும். குடத்து நீரும், விளக்கொளியும் ஒரு குடும்பத்தினைக் காக்கும். தாகம் தீர்ப்பதிலும் ஒளி கொடுப்பதிலும் இரண்டிற்கும் பேதம் இல்லை. ஆயினும் பெரியது சிறியது என்னும் தாரதம்மியம் இருக்கிறது. அதுபோல ஈசனுக்கும் ஞானிக்கும் தத்துவ ஞானத்தில் பேதமில்லாவிடினும் மாயையின் தன்மைகளால் உயர்வென்றும், தாழ்வென்றும் பேதமுடையவர்களாகிறார்கள்.

★★★

## 42.

நரரின் மன்னனைச் சித்தரைப் போலவே நாரணன் முதலான
சுரர்கள் மாயைவல் லவர்அணி மாதிகள் ஒக்கமா தவம் மிக்கோர்
தரணி மாநுடர்க்கு அவைகள்இல் லாமையால் தாழ்வுளர் ஆனாலும்
பிரம பாவனை யால்இவர் அவர் எனும்பேதம் ஒன்றிலை பாராய்.

மக்களில் அரசன் அதிகாரத்தாலும், சித்த புருஷர்கள் மகிமையாலும், மேலானவர்களாக விளங்குகிறார்கள். அதுபோல திருமால் முதலிய தேவர்கள் மாயையில் வல்லவர்களாகவும், அணிமாதி அஷ்ட சித்திகள் கைவரப்பெற்ற தவத்தினராகவும் இருக்கிறார்கள். ஜீவன் முக்தருக்கு அத்தகைய வல்லமைகள் இல்லாமையால் திருமால் முதலிய தேவர்களுக்குத் தாழ்ந்தவர்களாயினும்; ஞானத்தில், ஞானிகள் தாழ்ந்தவர்கள் என்றும் தேவர்கள் உயர்ந்தவர்கள் என்றும் எவ்வித பேதமுமில்லை. இதனை நீ யூகித்து உணர்வாயாக.

அட்டமா சித்திகள்:- 1) அணிமா = மிகவும் நுண்ணிய அணுவாக இருத்தல், 2) மகிமா = பூமிமுதல் சிவம் ஈறாக 36 தத்துவங்களிலும் வியாபித்திருத்தல், 3) இலகிமா = பஞ்சுபோல லேசாக இருத்தல், 4) கரிமா = அணுவைப்போல் சிறியதாக இருந்தாலும் மலையைப் போல கனமாக இருத்தல், 5) பிராந்தி = பாதாளம் முதல் பிரமலோகம் வரை சஞ்சரிக்கும் தன்மை, 6) பிரகாமியம் = பரகாயப் பிரவேசம், விண்ணுலக சஞ்சாரம், விரும்பியதை விரும்பியவாறு இருந்த இடத்தில் இருந்தே அனுபவிக்கும் தன்மை, 7) ஈசத்துவம் = சிருஷ்டியாதி முத்தொழில் செய்தலும், நவகோள்களை தன் ஏவல்படி நடத்துதலும், 8) வசித்துவம் = உலக உயிர்கள் தேவர்கள் எல்லோரையும் தன் வசமாக்கிக் கொள்ளல்.

★★★

## 43.

**முத்தி நல்கிய சற்குரு வேபல முனிகளுக்கு அணிமாதி**
**சித்தி பூமியில் கண்டிருக்கவும், அந்தச் செல்வம்ஈ சனதென்றீர்**
**புத்தி ஒத்திட உரைத்தருள் என்றிடில் புகழும்ஈ சனைநோக்கிப்**
**பத்தி செய்திடும் தவத்தினால் யோகத்தால் பலித்ததென் றறிவாயே.**

முத்தி நல்கிய ஞான தேசிகரே! வியாசர் முதலிய பல முனிவர்கள் அஷ்டமாசித்தியைப் பெற்றிருந்தார்கள் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. அந்த அணிமாதி ஐசுவரியங்கள் ஈசுவரனுக்கு உரியது என்று கூறினீர்கள். அச்செல்வங்கள் முனிவர்களுக்கு எவ்வாறு கிடைத்தன வென்று கேட்பாயாகில் அன்பனே! அம்முனிவர்கள் மன மொழி மெய்யினால் பரமேஸ்வரனை நோக்கிச் செய்த தவத்தினாலும், அனுசரித்த சாந்திராயணாதி விரதங்களாலும், அஷ்டாங்க யோகத்தாலும் அடைந்தார்கள் என்று அறிந்து கொள்வாயாக. (பௌர்ணமியிலிருந்து

சந்திரன் தேயத்தேய உணவில் ஒவ்வொரு கவளமாகக் குறைத்து உண்டு அமாவாசையில் உபவாசம் இருந்து, பின்பு பௌர்ணமி வரை ஒவ்வொரு கவளமாய் சேர்த்து உண்பது சாந்திராயண விரதம். இது பாவநிவர்த்தியின் பொருட்டு செய்யப்படும் பிராயச்சித்தம் ஆகும்).

★★★

## 44.

**சிவசொ ரூபமாம் தேசிக மூர்த்தியே சித்திமுத் தியிரண்டும்**
**தவமுளோர் அடைகுவர் எனில் அவர்கள் போல் சகலரும் அடைவாரே**
**அவர்கள் பூர்வம் சித்தியும் ஞானமும் அடைந்ததும் கண்டோமே**
**இவர்கள் ஞானிகள் என்றிடின் சித்திகள் இவர்க்கிலா வகை ஏதோ.**

சிவசொரூபமாக விளங்கும் தேசிக மூர்த்தியே! தவமுடையவர் சித்தி முத்தி என்னும் இரண்டையும் பெறுவார்கள் என்று சுருதி கூறுகிறது. அந்தத் தவமுடையவரைப்போல இக்காலத்திலுள்ள தவசிகள் அவ்விரண்டையும் அடையவேண்டுமல்லவா? இக்காலத்திலுள்ள ஞானிகளிடம் அணிமாதி சித்திகள் இல்லாதிருக்கும் காரணம் யாது என்பதைக் கூறி அருளல் வேண்டும்.

★★★

## 45.

**காமி யத்தவம் காமியம் ஒன்றையும் கருதிடாத் தவம்என்றும்**
**பூமி யில்தவம் இருவகை சித்தியும் போதமும் தரும்மைந்தா**
**ஆம்இ வற்றில்ஒன் றியற்றினார் ஒன்றையே அடைகுவர் இதுநீர்வை**
**யாமு ரைத்த அவ்விரண்டையும் இயற்றினார் அன்றுள பெரியோரே.**

மகனே! உலகத்தில் தவமானது காமியத்தவம் (பலனுக்காகச் செய்வது), நிஷ்காமியத் தவம் (ஈசுவரார்ப்பணமாகச் செய்வது) என இரண்டு வகைகள் உள்ளன. அவைகளுள் காமியத்தவம் அணிமாதி முதலான அஷ்டமா சித்திகளைக் கொடுக்கும். நிஷ்காமியத் தவம் மோட்சத்தைக் கொடுக்கும். இவ்வித தவங்களுள் ஒரு தவத்தைச் செய்தவர் ஒரு பயனைத்தான் அடைவார். அவ்விரண்டு தவங்களையும் அக்காலத்தில் இருந்த வியாசர் முதலிய மகாத்மாக்கள் செய்தார்கள். அதனால் அவர்கள் சித்தி முத்தி என்னும் இரண்டையும் பெற்றிருந்தார்கள்.

## 46.

*அனக மைந்தனே முத்திஞா னத்தையே அடைந்தனர் அல்லாமல்*
*செனகன் மாபலி பகீரதன் முதலினோர் சித்திகள் படித்தாரோ*
*இனிய சித்தியே விரும்பினார் சிலர் சிலர் இரண்டையும்*
*முயன்றார்அம்*
*முனிவர் சித்திகள் விநோதம்மாத் திரம்தரும் முத்தியைத் தாராவே.*

பாவமற்றவனே! ஜனகர், மாபலி, பகீரதன் முதலிய பெரியோர்கள் சமையலுக்குத் தீபோல மோட்சத்திற்கு நேர் சாதனமாயுள்ள தத்துவ ஞானத்தை அடைந்தார்களே அல்லாமல், அணிமாதி சித்திகளை அப்பியாசம் செய்யவில்லை. அவர்களை ஞானியர் என்று கூற முடியுமா? சில முனிவர்கள் அணிமாதி சித்திகளை விரும்பித் தவம் செய்தனர். சில முனிவர்கள் சித்தி முத்தி இரண்டையும் விரும்பித் தவம் செய்தனர். அணிமாதி சித்திகள் வானிலே பறத்தல், மண்ணிலே நுழைதல் முதலிய விளையாட்டை மாத்திரம் தருமே அல்லாமல் மோட்சத்தைக் கொடுக்காது.

★★★

## 47.

*யோக ஞானமே முத்தியைத் தரும்எனில் ஒழிந்தசித் திகள்வேண்டி*
*மோக மாய்உடல் வருந்தினார் சிலசில முத்தர்கள் ஏனென்றால்*
*போக மாய்வரும் பிராரத்த கர்மங்கள் புசித்தன்றோ நசித்தேகும்*
*ஆகையால் அந்தச் சித்திகள் பிராரத்தம் ஆகும்என் றறிவாயே.*

அன்புருவான குருநாதா! அத்துவித ஞானமே முத்தியைக் கொடுக்குமாயின், அது நீங்கிய அணிமாதி சித்திகளை விரும்பி சிலர் உடல் வருத்தியது ஏனென்றால் அநுபோகமாய் வருகின்ற பிராரத்த கர்மங்களை அனுபவித்துத்தான் தீர்க்கவேண்டும். ஆதலால் அவர்கள் அடைந்த அச்சித்திகள் அவர்களது பிராரத்த கர்ம பயனாகும் என்று அறியக் கடவாய்.

★★★

## 48.

இலக்கம் ஆயிரம் சுருதியால் ஊகத்தால் என்மனம் அசையாமல்
பெலக்க வேண்டும்என் றருள்குரு வேஅகப் பிராந்திபோய்த்
தெளிவானேன்
துலக்கம் ஆனகண் ணாடியை அடிக்கடித் துலக்கினால் பழுதன்றே
அலக்கண் மாற்றிய தேவரீர் எனக்குரை அமிர்தங்கள் தெவிட்டாவே.

அளவற்ற சுருதி வாக்கியங்களாலும், யுக்திகளாலும் என்னுடைய மனம் சொரூபத்தின் கண் ஐயத்தினால் சலனப்படாது ஸ்திரமாக இருக்க வேண்டுமென்று நான் கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் விடை அருளும் குருமூர்த்தியே! தங்களது உபதேசத்தினால் எனது மனபிராந்திகள் எல்லாம் நீங்கித் தெளிவானேன். விளக்கமான கண்ணாடியை மேலும் மேலும் விளக்கினால் குற்றமல்லவே. எனது பவதுன்பத்தை நீக்கிய சுவாமிகளே வாக்கிய அமிர்தமாகிய தங்களுடைய தெவிட்டாத உபதேசத்தைக் கேட்க விரும்புகிறேன் அருள்புரியுங்கள்.

★★★

## 49.

கைத வங்களைச் சாத்திரம் சொல்லுமோ கருணையால் எனைஆளும்
ஐய னேகுரு வேஎவர் ஆகிலும் அநுபவித்தால் அன்றிச்
செய்த கர்மங்கள் விடா என்ற வசனமும் சென்மசஞ் சிதம்வேவத்
துய்ய ஞானத்தீச் சுடும்என்ற வசனமும் துணிவதெப் படிநானே.

கிருபையினால் அடியேனை ஆளா நின்ற குருநாதா! அசத்தியங் களை சாஸ்திரங்கள் உரைக்குமா? யாரானாலும் தாங்கள் செய்த கர்மபலனை அநுபவித்தால் அல்லாது நீங்காது என்ற வாக்கியமும் அநேக பிறவிகளுக்குக் காரணமான சஞ்சிதவினைகள் வெந்து நீறாகும்படி பரிசுத்தமான ஞானாக்கினியானது எரிக்கும் என்ற வாக்கியமும் ஆகிய இவ்விரண்டில் எது உண்மை என்று அடியேன் தெளிவடைவது எவ்வாறு என்று கூறி அருளல் வேண்டும்.

★★★

## 50.

*சீவ பேதங்கள் அளவிலை மைந்தனே செய்கையும் அளவில்லை*
*ஆவ ஆம் அவர் அவர்அதி காரங்கள் அறிந்துபக்குவம் நோக்கிப்*
*பூஅு லர்ந்துபின் பலங்கள்காட் டுவனபோல் பூருவம் சித்தாந்தம்*
*காவல் வேதங்கள் இரண்டையும் வசனிக்கும் காண்டம்*
*மூவகையாலே.*

மகனே! ஜீவத்துவ உபாதிகளான அவித்தை, அந்தக்கரணங்கள் அளவின்மையின் ஜீவர்களுடைய வேறுபாடுகளும் அளவில்லை, அவர்கள் செய்யும் செயல்களும் அளவில்லை. ஆதலால் அவரவர் களுக்கு ஆவன ஆகும். ஆதலால் அவர்களது அதிகாரி பேதம், பக்குவம், பருவம் பார்த்து மலரானது மலர்ந்து பின்பு பலனைக் கொடுப்பதுபோல நம்மை கருணையுடன் காக்கின்ற சுருதிகள் கர்ம காண்டம், உபாசனா காண்டம், ஞான காண்டம் என்று மூன்று பகுப்பினால் பூருவபட்ச வாக்கியம், சித்தாந்த வாக்கியம் என்று இரண்டு வகையாகச் சொல்லும்.

★★★

## 51.

*ஆன பாவிகள் அடைவன நரகங்கள் அவசியம் ஆனாலும்*
*தான மந்திர விரதஓ மங்களால் தவிரும் என்பது பொய்யோ*
*ஈன மாம்பல சன்மசஞ் சிதவினை எத்தனை ஆனாலும்*
*ஞானம் ஆம்கனல் சுடும்என்ற மறைமொழி நம்பினால் வீடுண்டே.*

கொடிய பாவிகள் நரகங்களை அடைவது உண்மை என்றாலும் தானங்கள், தவங்கள், மந்திரங்கள், விரதங்கள், ஜபங்கள் பாவங்கள் அழியும் என்பது அசத்தியமல்ல. இழிவாகிய பல பிறவிகளை உண்டாக்கும் சஞ்சித கர்மங்கள் எவ்வளவு சேர்ந்திருந்தாலும் ஞானாக்கினியானது எரித்துச் சாம்பலாக்கிவிடும் என்று கூறும் வேத வாக்கியத்தை நம்பி அதன் வழியில் வாழ்பவனுக்கு மோட்சம் கிடைக்கும். (அநுபவித்துத் தீர்க்க வேண்டும் என்ற பூர்வபட்சத்தை நீக்கி, அறிவினால் (ஞானத்தினால்) அவை கெடும் என்ற சித்தாந்தத்தைக் கொண்டு சாதனைகள் செய்தால் சஞ்சிதம் நீங்கிவிடும்).

★★★

## 52.

என்ம னம்திருக் கோயிலாத் தினம்குடி இருந்தருள் குருமூர்த்தி
சென்ம சஞ்சித வினைகள்வேர் அறுத்திடும் தேவரீர் மெய்ஞ்ஞானம்
தன்மயம் தரு மகிமையை விபுதர் ஆம் சமர்த்தரும் அறியாமல்
கன்மம் ஆம்குழி யினில்விழுந் தழிகின்ற காரணம் உரையீரே.

என்னுடைய மனக்கோயிலில் எழுந்தருளியுள்ள குருநாதா! தாங்கள் போதிக்கும் உண்மை ஞானமானது பல பிறவிகளுக்குக் காரணமான சஞ்சித கர்மங்களின் மூலமாகிய அறியாமையை அழித்து விடும். சமஸ்தமும் தன் சொரூபமாகும்படி செய்யும் மெய்ஞ்ஞானத்தின் பெருமையை அறிவாளிகளான பண்டிதர்களும் உலக மக்களும் உணராமல் கர்ம படுகுழியில் வீழ்ந்து ஏன் துன்பப்படுகிறார்கள்?

★★★

## 53.

அழிவி லாததற் பதந்தனை மைந்தனே அகமுகத் தவர்சேர்வர்
வழிந டப்பவர் பராமுகம் ஆயினால் மலர்ந்தகண் இருந்தாலும்
குழியில் வீழ்வர்காண் அப்படி வெளிமுகம் கொண்டுகா மிகள் ஆனோர்
பழித ரும்பிற விக்கடல் அழுந்துவர் பரகதி அடையாரே.

ஞானபுத்திரா! பகிர்முக நாட்டமில்லாது அந்தர்முக நாட்டமுடைய திடசித்தம் உடையவர்கள்தான் அழியாத நிரதிசயாநந்த பிரம்மத்தை அடைவார்கள். வழிநடப்பவர்கள் கவனக் குறைவாக பாராமுகமாகச் சென்றால், பார்வையுடையவர்களாக இருந்தாலும் பள்ளத்தில் வீழ்ந்து இடர்ப்படுவார்கள். அதுபோல வெளிப் பார்வையையே (உலக சுகம்) தமக்குப் பயனாகக் கொண்டு தொழில் புரிபவர்களான காமிகள் எவ்வளவு அறிவாளிகளாக இருந்தாலும் பிறவிக்கடலுள் சுழலுவார்கள், மோட்சமடைய மாட்டார்கள்.

★★★

## 54.

சிறந்த நன்மையும் தீமையும் ஈசனார் செய்விக்கும் செயல்அன்றோ
பிறந்த சீவர்கள் என்செய்வர் அவர்கள்மேல் பிழைசொல்லும் வழிஏதோ
துறந்த தேசிக மூர்த்தியே என்றிடில் சுருதிநூல் பொருள்மார்க்கம்
மறந்த மூடர்கள் வசனிக்கும் பிராந்திகாண் மைந்தனே அதுகேளாய்.

சகல பற்றுகளையும் விட்ட குருநாதா! ஜீவர்கள் செய்யும் நல்வினையும் தீவினையும் சூத்திரதாரியான ஈசன் செய்விக்கும் செயலல்லவா? அங்ஙனமிருக்க சூத்திரப்பாவை போன்று சுதந்திரமற்று அவன் பிறப்பித்தவாறு பிறந்த ஜீவர்கள் மீது குற்றம் சுமத்துவதற்குக் காரணம் என்ன? என்று கேட்பாயாகில், அது வேத சாஸ்திரங்கள் கூறும் பொருளின் பொருளை ஆராய்ந்து அறியாத மூடர்கள் கூறும் மயக்க வாக்கியமாகும். சரியான பொருளைக் கேட்பாயாக.

★★★

## 55.

***திகழ்ந்த ஈசனார் சிருட்டியும் சீவனார் சிருட்டியும் வெவ்வேறே***
***சகமத னில்பொது ஈசனார் சிருட்டிகள் சராசரப் பொருள் எல்லாம்***
***அகந்தை ஆம்அபி மானங்கள் கோபங்கள் ஆசைகள் இவைஎலாம்***
***இகழ்ந்த சீவனார் சிருட்டிகள் ஆகும்காண் ஈசனார் செயல் அன்றே.***

இவ்வுலகில் ஈசுவர சிருட்டி, ஜீவ சிருட்டி என்று இரண்டு வகை சிருட்டிகள் உள்ளன. என்றும் யாவர்க்கும் பொதுவாக இருக்கும் சர அசர பொருள்கள் யாவும் ஈசுவர சிருட்டியாகும். உடலிலும், உலகத்திலும் 'நான்', 'எனது' என்னும் அபிமானங்களும் ஆசை, கோபம், கடும்பற்று, பொறாமை, மானம் என்பன போன்ற மனோ கற்பனைகள் எல்லாம் இழிவான ஜீவ சிருட்டி ஆகும். எல்லார்க்கும் பொதுவாக இல்லாமல் ஒவ்வொருவருக்கும் சிறப்பாக (தனித்தனியே) உள்ள இவைகள் ஈசுவர சிருட்டி ஆகாது.

★★★

## 56.

***மூவர் ஆம்பரன் சிருட்டிகள் உயிர்க்கெலாம் முத்திசா தனம்ஆகும்***
***சீவ னார்செயும் சிருட்டிகள் தங்களைச் செனிப்பிக்கும் பிணிஆகும்***
***தாவ ராதிகள் நசித்திடில் ஒருவருக்கும் சனனங்கள் நசியாவாம்***
***கோபம் ஆதிகள் நசித்திடில் பந்தம்ஆம் கொடும்பிற விகள் போமே.***

மும்மூர்த்தி வடிவமாயுள்ள ஈசுவரனது சிருஷ்டிகள் எல்லா ஜீவர்களுக்கும் மோட்ச சாதனமாக இருக்கிறது. ஜீவ கற்பிதமான சிருஷ்டிகள்இருவினைவடிவமாய்அவர்களுக்குப் பலவகைபிறவிகளைக் கொடுக்கும் பந்தங்களாக இருக்கின்றன. ஈசுவர சிருஷ்டியான மரம்

முதலிய பஞ்சபூத பௌதிக வடிவங்கள் அழிந்தால் எந்த ஒரு உயிருக்கும் பிறப்பு நீங்காது. ஜீவ சிருஷ்டியான காமக் குரோதாதி துவேசங்கள் அழிந்தால் பந்தத்தைக் கொடுக்கும் பிறப்பு இல்லாமல் போகும்.

★★★

## 57.

*ஈசர் காரியம் பிரளயத்து ஒழியவும் எவர்பவம் ஒழிந்தார்கள்*
*தேச காலதே காதிகள் இருக்கவும் சிவகா ரியமோகம்*
*நாசம் ஆக்கிய விவேகத்தின் உயிரொடு ஞானமுத் தர்களானார்*
*பாச மோகங்கள் பசுக்களின் செயல் அன்றிப் பசுபதி செயல்அன்றே.*

ஈசுவர சிருஷ்டியான பஞ்சபூத பௌதிகங்கள் பிரளய காலத்தில் அழியும்பொழுது பிறவி நீங்கியவர்கள் ஒருவருமில்லை. உலகம், உடல், காலம் முதலிய ஈசுவர சிருஷ்டி இருக்கும்பொழுதே சிலர், குரு சாஸ்திர உதவியால் ஜீவ சிருஷ்டியான காம குரோதாதி மோகத்தை நாசம் செய்து விவேகத்தினால் ஜீவன் முக்தர்களாகி இருக்கிறார்கள். ஆதலால் பந்தத்திற்குக் காரணமான காம வெகுளி மயக்கங்கள் ஜீவ சிருஷ்டியே அல்லாமல் ஈசுவர சிருஷ்டி ஆகாது.

★★★

## 58.

*அச்சு வத்தம் என்று ஒருமரம் அதில்இரண்டு அரும்பறவைகள் வாழும்*
*நச்சும் அங்கொரு பறவைஅம் மரக்கனி நன்றுநன்று எனத்தின்னும்*
*மெச்சும் அங்கொரு பறவைதின் னாதென வியங்கியப் பொருளாக*
*வைச்சு மாமறை சிவனை ஈசனை வகுத்தவாறு அறிவாயே.*

ஓர் அரசமரத்தில் (உடம்பில்) இரண்டு பறவைகள் வாழ்கின்றன. அவற்றுள் ஒரு பறவை (ஜீவன்) அம்மரத்தின் பழங்களை இது நல்லது இது நல்லது என்று தின்னும், மற்றொரு பறவை (ஈசன்) ஒன்றையும் தின்னாது என்று பறவைகளைக் குறிப்புப் பொருளாக வைத்து முண்டக உபநிடதம் ஜீவனையும் ஈசுவரனையும் வகுத்துக் கூறுகிறது. இதை நீ விசாரித்து அறிந்து கொள்வாயாக.

★★★

## 59.

*இந்தச் சீவனால் வரும்அறு பகைஎலாம் இவன்செயல் என்னாமல்*
*அந்தத் தேவனால் வரும்என்ற மூடர்கள் அதோகதி அடைவார்கள்*
*இந்தச் சீவனால் வரும்அறு பகைஎலாம் இவன்செயல் அல்லாமல்*
*அந்தத் தேவனால் அன்றெனும் விவேகிகள் அமலவீடு அடைவாரே.*

இந்த ஜீவனால் உண்டாகிற காமம் முதலிய ஆறு பகைகளும் இவன் செயலால் உண்டாகிறது என்பதை அறியாமல் அந்த ஈசுவரனால் உண்டாகிறது என்று எண்ணும் மூடர்கள் நரகத்தை அடைவார்கள். இந்த ஜீவனால் உண்டாகும் ஆறு பகைகளும் ஜீவ சிருஷ்டியே அல்லாமல் அந்த ஈசுவரனால் உண்டானவை அல்ல என்று உணரும் விவேகிகள் நிர்மலமான மோட்சமடைவார்கள்.

★★★

## 60.

*நலம்மெய் ஐயனே எல்லவர்க் கும்தெய்வ நாயகன்பொது ஆனால்*
*சிலரை வாழ்வித்தல் சிலரொடு கோபித்தல் செய்வதேன் என்றாயேல்*
*குலவு மக்களைத் தந்தைபோல் சிட்டரைக் குளிர்ந்துதுட்*
*டரைக்காய்வன்*
*கலைகள் நல்வழி வரச்செய்யும் தண்டமும் கருணைஎன்று அறிவாயே.*

சதானந்த வடிவ குருமூர்த்தியே! பட்சபாதமின்றி அனைவருக்கும் பொதுவாக இருக்கவேண்டிய ஈசுவரன் சிலருக்கு புத்தி, முத்தியைக் கொடுத்து வாழச் செய்வதும்; சிலருக்கு கஷ்ட நஷ்டங்களைக் கொடுத்து துன்புறுத்துவதும் ஏன்? என்று கேட்பாயாகில், மைந்தனே! தம்மக்களின் நற்குணங்களைக் கண்டு பாராட்டுதலும்; குற்றத்தைக் கண்டு கோபித்தலும் செய்கின்ற பிதாவைப் போன்று, ஈசுவரன் நல்லவர்களை ரட்சித்து, தீயவர்களை தரித்திரம், பிணி முதலிய துன்பங்களால் தண்டிக்கிறான். இது ஈசுவரன் செய்யும் பட்சபாதம் அல்ல. சாஸ்திரங்கள் கூறும் நல்வழிக்கு வந்து அவர்கள் உய்யவேண்டும் என்று ஈசுவரன் செய்யும் கருணை என்பதை நீ அறியக் கடவாய்.

★★★

## 61.

**மனைவி லங்கறு மைந்தனே கற்பக மரம்கனல் புனல்மூன்றும்**
**தனை அடைந்தவர் வறுமையும் சீதமும் தாகமும் தவிர்த்தாளும்**
**அனைய ஈசனும் அடைந்தவர்க்கு அருள்செய்வன் அகன்றவர்க்கு அருள்செய்யான்**
**இனைய குற்றங்கள் எவர்குற்றம் ஆகும்என்று எண்ணிநீ அறிவாயே.**

பந்தபாசமற்ற மகனே! கற்பக மரம், நெருப்பு, நீர் இம்மூன்றும் பட்சபாதமில்லாமல் தம்மை அடைந்தவர்களுடைய தரித்திரம், குளிர், தாகம் இவற்றை நீக்கி அவர்களைக் காப்பாற்றும். அத்தன்மையுடைய ஈசனும் தன்னை அடைந்தவர்களுக்குக் கிருபை செய்கிறான். அடையாதவர்களுக்கு அருள் செய்வதில்லை. இக்குற்றங்கள் யாருடையவை என்பதை நீயே ஆராய்ந்து அறிந்து கொள்வாயாக.

★★★

## 62.

**ஒன்று கேள்மக னேபுமான் முயற்சியால் உறைத்து மாநுடர்க்கு ஈசன்**
**நன்று செய்யவே காட்டிய நூல்வழி நடந்துநல் லவர்பின்னே**
**சென்று துட்டவா தனைவிட்டு விவேகராய்ச் செனித்த மாயையைத்தள்ளி**
**நின்று ஞானத்தை அடைந்தவர் பவங்கள்போம் நிச்சயம் இதுதானே.**

மகனே! ஈசுவரன் மக்களுக்கு நன்மை செய்வதற்காக அருளிச் செய்த சாஸ்திர வழியில் முறையாக முயற்சி செய்து, பெரியோர்களைப் பின்பற்றி நடந்து, காமம் வெகுளி கடும்பற்று பொறாமை ஆணவம் போன்ற அசுத்த வாசனைகளை நீக்கி, ஆத்மா அநாத்மா விசாரஞ் செய்து கற்பனையாக உதித்த மாயையை நீக்கி, அநித்திய பொருள்களிலிருந்து நீங்கி தத்துவ ஞானமடைந்து தனது நிஜவடிவில் நின்றவர்களுக்கு இனி பிறப்பு இல்லை. இது சாஸ்திரங்களின் நிச்சயம் ஆகும்.

★★★

## 63.

**இந்த ஞானந்தான் வருவதெப் படிஎனில் இடைவிடா**
**விசாரத்தால்**

**வந்த டைந்திடும் விசாரந்தான் ஏதெனில் மனாதியாம் சரீரத்தில்**

**இந்த நான்எவன் சித்தெது சடம்எது இரண்டும்ஒன் றாகக்கூடும்**

**பந்தம் ஏதுவீ டேதென உசாவுதல் பகர் விசா ரமதாகும்.**

பிரம்ம ஞானம் உதிப்பது எவ்வண்ணம் என்று கேட்பாயாகில் அது இடைவிடாது விசுவாசத்தோடு செய்யும் ஆத்ம விசாரணையால் வரும். மனம் முதலிய அந்தக்கரணங்களுடன் இவ்வுடலில் இருக்கும் நான் யார்? சித் என்பது எது? ஜடம் என்பதெது? சித் ஜடம் இரண்டும் ஒன்றாகக் கூடுவதற்கு ஏதுவான பந்தம் ஏது? மோட்சமென்பது என்ன? என்று இவைகளை இடைவிடாமல் விசாரித்து அறிவதே விசாரணை ஆகும்.

★★★

## 64.

**போன சன்மங்கள் தமில் அநுட்டித்தநல் புண்ணிய பரிபாகம்**

**ஞானம் ஆக்குமே விசாரம் ஏன்என்றிடில் நாம் உரைத்திடக் கேளாய்**

**ஆன புண்ணியம் ஈசுவரார்ப் பணம் செயின் அசுசிபோம் சுசிஆகும்**

**மான தம்பினை விசாரித்து ஞானத்தை மருவும்என் றறிவாயே.**

ஒருவன் முன்பிறவிகளில் செய்த நற்கர்ம பலன்கள் அவனுக்குத் தத்துவ ஞானத்தை உண்டாக்குமல்லவா? அவன் ஏன் ஆத்மா அநாத்மா விசாரம் செய்யவேண்டுமென்று கேட்பாயாகில், மக்கள் தத்தம் வர்ணாச்சிரமங்கட்குரிய நற்கர்மங்களை பலனை விரும்பாமல் ஈசுவர அர்ப்பணமாகச் செய்தால் அவர்களுடைய அந்தக் கரணத்திலுள்ள அசுத்தங்கள் நீங்கி சித்தம் சுத்தியாகும். சுத்தமான மனதில் ஆத்மா அநாத்மா விசாரஞ் செய்தால் தத்துவ ஞானம் உண்டாகும். நீ இதை யூகித்து அறிந்து கொள்வாயாக. (புண்ணிய கர்மங்கள் மனத் தூய்மையைத்தான் தரும். நேராக ஞானத்தைத் தராது).

★★★

## 65.

பத்தி யும்வயி ராக்கிய மும்பர லோகமும் அணிமாதி
சித்தி யும்தவ நிட்டையும் யோகமும் தியானமும் சாரூப
முத்தி யும்தரும் விசித்திர கருமங்கள் மோகம்மாத் திரம்தள்ளும்
புத்தி தந்திடல் அருமையோ விசாரம் ஏன் புண்ணிய குருமூர்த்தி.

தர்மஸ்வரூபமான குருநாதா! ஈஸ்வர பக்தி, வைராக்கியம், சுவர்க்காதி போகங்கள், அணிமாதி அஷ்டமா சித்திகள், தவம், சமாதி, இயமாதி அஷ்டாங்க யோகங்கள், சகுண நிர்குண தியானங்கள், சாரூப பதமுத்தி ஆகியவற்றைக் கொடுக்கின்ற சக்தியையுடைய நற்கர்மங் களானவை தன்னை பிரம்மமென்றறியாமையாகிய மோகத்தை மட்டும் கெடுக்கும்; ஞானத்தைக் கொடுப்பது அரியதா? விசாரணை ஏன் செய்யவேண்டும்? கூறியருள வேண்டும் ஐயனே!

★★★

## 66.

வேடம் மாறிய பேர்களை அறியவே வேண்டினால் மகனேகேள்
கூடம் ஆம்அவர் சுபாவங்கள் சீலங்கள் குறிகள் ஆய்ந்தறியாமல்
ஓடி யும்குதித் தும்தலை கீழ்நின்றும் உயர்ந்தகம் பத்தேறி
ஆடி யும்பல கருமங்கள் செய்யினும் அவர்உண்மை தெரியாதே.

சற்புத்திரனே! மாறுவேடங்கொண்டவர்களைஅறிய விரும்பினால் வேடம் மாறியுள்ள அவர்களுடைய குணங்களையும், ஒழுக்கங் களையும் அடையாளங்களையும் ஆராய்ந்து இவர் இன்னார் என்று அறியவேண்டும். அவ்வாறு அறியாமல் ஓடியும், குதித்தும், தலைகீழாக நின்றும், உயர்ந்த கம்பத்தில் ஏறி ஆடியும், இன்னும் இவைபோன்று பல கர்மங்களைச் செய்தாலும் அவர்களுடைய உண்மை வடிவத்தை அறிய முடியாது.

★★★

## 67.

இன்ன வாறந்தப் பிரமத்தை அறிவிக்கும் இலக்கணத் தால்வேதம்
சொன்ன ஞானமும் விசாரத்தால் வரும்அன்றிச் சுருதிநூல் படித்தாலும்
அன்ன தானங்கள் தவங்கள் மந்திரங்கள் ஆசாரங்கள் யாகங்கள்
என்ன செய்யினும் தன்னைத்தான் அறிகின்றது இவைகளால் வாராதே.

இதுபோல பிரம சொரூபத்தை அறிவிக்கும் சுருதி சொல்லிய இலக்கண வாயிலாக விசாரணை செய்தால்தான் ஆத்மஞானம் வரும். அவ்வாறின்றி வேத சாஸ்திரங்களை வாசித்தல், அன்னதானம் செய்தல், தவம் செய்தல், மந்திரங்களை உச்சரித்தல், ஆசாரங்களைக் கடைப்பிடித்தல், வேள்விகள் செய்தல் போன்று எந்தக் கருமங்களைச் செய்தாலும் ஆத்மாவாகிய தன்னை அறிந்துகொள்ள முடியாது.

★★★

## 68.

*துளங்கு தர்ப்பணம் அழுக்கறக்கைக் கொண்டு துலக்கினால்*
*போமன்றி*

*விளங்கு புத்தியால் உலகில்ஆர் துலக்கினார் விமலதே சிகமூர்த்தி*

*களங்கம் ஆகும்அஞ் ஞானமும் அப்படிக் கருமத்தால் கழுவாமல்*

*உளம்கு றித்தஞா னத்தினால் எப்படி ஒழியும்ஈ தருள்வீரே.*

நிர்மலமான குருமூர்த்தியே! கண்ணாடியிலுள்ள அழுக்கை நீக்க மாவு, செங்கல் பொடியைக் கொண்டு கையினால் விளக்கினால் போகுமே அன்றி அறிவினால் விளக்கியவர் எவருமில்லை. அது போலவே களங்க வடிவமான அஞ்ஞானத்தையும் நற்கர்மங்களால் நீக்காமல் மனத்தில் நிச்சயிக்கும் ஞானத்தினால் எவ்வாறு நீக்க முடியும்? இதனை கிருபை கூர்ந்து விளக்கி அருள்செய்ய வேண்டும்.

★★★

## 69.

*தர்ப்ப ணத்தினில் களிம்புவாஸ் தவமலம் சகசமா தலின்மைந்தா*

*கற்ப ளிங்கினில் கருநிறம் சகசமாக் கறுத்ததன்று ஆரோபம்*

*தர்ப்ப ணத்தில்அழுக்கற வேண்டினால் சாதனத் தொழில் வேண்டும்*

*கற்ப ளிங்கில்ஆ ரோபமே கறுப்பென்று கண்டிட மனம் போதும்.*

மகனே! கண்ணாடியில் ஏற்பட்ட களங்கம் வாஸ்தவமாய் உள்ள அழுக்கு. ஸ்படிகக் கல்லில் தோன்றும் கறுப்புநிறம் சுபாவம் அல்ல. மித்தையாகக் கற்பிக்கப்பட்டது. கண்ணாடியிலுள்ள அழுக்கைப் போக்க விரும்பினால் கருவிகளைக் கொண்டு போக்க வேண்டும். ஸ்படிகக் கல்லில் தோன்றும் கருநிறம் பொய்த்தோற்றம் என்று காண்பதற்கு மனமே போதும்; வேறு செயல் ஒன்றும் வேண்டுவதில்லை.

## 70.

இங்கும் அப்படிச் சச்சிதா நந்தத்தில் இடர்சடம் பொய் மூன்றும்
தங்கும் மாயையின் கற்பிதம் அன்றியே சகசவாஸ் தவம்அன்றே
பங்கம் ஆகும் அஞ்ஞானத்தைக் கருமங்கள் பகைசெயாது
உறவாக்கும்
துங்க ஞானமே கருமஅஞ் ஞானத்தைச் சுடுகின்ற நெருப்பாமே.

ஸ்படிகக் கல்லில் கறுப்புநிறம் ஆரோபமாக இருக்கிறது என்னும் திருஷ்டாந்தம் போல சச்சிதாநந்த வடிவ ஆத்மாவில் அசத்து, ஜடம், துக்கம் மூன்றும் கயிற்றில் தோன்றும் பாம்பு போன்று கற்பிதமே அல்லாமல் ஸ்வபாவமாய் உள்ளதல்ல. அஞ்ஞானத்தைப் புண்ணிய கர்மங்கள் பகைத்துக் கெடுக்காது, மாறாக நட்பாக இருக்கும். ஜீவ பிரம்ம ஐக்கிய ஞானமே கர்ம ரூபமாகிய அஞ்ஞானத்தை எரித்து சாம்பலாக்கும் நெருப்பாகும்.

★★★

## 71.

மனைக்குள் வைத்தபண் டங்களை மறந்தவன் வருடநூறு அழுதாலும்
நினைத்து ணர்ந்தபின் கிட்டும்அப் படிஇந்த நின்மல ஆன்மாவும்
அனர்த்தம் ஆனதன் மறதியைக் கெடுத்துத்தன் அறிவினால்
காணாமல்
கனத்த கர்மங்கள் நூறு(யு)கம் செய்யினும் காணுமோ காணாதே.

வீட்டில் வைத்த பொருளை வைத்த இடம் தெரியாமல் மறந்தவன் அதைப் பெறவேண்டி நூறு வருடங்கள் அழுதாலும் அவை கிடைக்காது. முன்பு வைத்த இடத்தை ஞாபகம் செய்து அறிந்தபின்பு கிடைக்கும். அதைப்போலவே பரிசுத்தமான ஆத்ம ஞானமும், துக்கத்துக்குக் காரணமான அறியாமையை விசாரத்தால் நீக்கி ஞானத்தினால் நான் சச்சிதானந்தன் என்று நிச்சயித்து அறிய வேண்டும். அவ்வாறு செய்யாமல் பெரிய பெரிய புண்ணிய கர்மாக்களை அநேக யுகங்கள் செய்தாலும் ஆத்மாவைக் காணமுடியாது.

★★★

## 72.

நன்மை யாம்குரு வேசுகம் தருவது ஞானமே எனும்வேதம்
தன்ம பாவமிச் சிரங்களால் தேவர்கள் தருவிலங் குகள்மாந்தர்
சென்ம மாகுவ சாதிஆ சாரமே செய்தவம் சுகம் என்று
கன்ம காண்டத்தில் விதித்த தென்விதித்துள காரணம் உரையீரே.

நிரதிசயானந்த குருவே! ஆனந்தத்தைக் கொடுப்பது ஞானமே என்று கூறும் வேதமானது, புண்ணிய கர்மங்களால் தேவ பிறவியும் பாவ கர்மங்களால் விலங்கு தாவர பிறவியும், மிஸ்ர கர்மங்களால் மனிதப் பிறவியும் கிடைக்கிறது என்றும்; தம்தம் சாதிக்குரிய ஒழுக்கமே செய்யத்தக்க தவம் என்றும் இந்தத் தவத்தால் சுகம் உண்டாகும் என்றும் கர்மகாண்டத்தில் கூறியிருப்பது எதற்காக? அதன் காரணத்தை தேவரீர் கூறியருளல் வேண்டும்.

★★★

## 73.

தினமும் மண்நுகர் பிள்ளைநோய்க்கு இரங்கியே தீம்பண்டம்
எதிர்காட்டிக்
கனம ருந்துகள் ஒழித்துவைத் தழைக்கின்ற கருணைநற் றாய்போல
மனைஅ றங்கள்செய் மகங்கள் செய் நன்றென்று மலர்ந்தவா சகம்
சொல்லும்
நினைவு வேறுகாண் சுவர்க்ககா மிகள் அந்த நிண்ணயம்
தெரியாரே.

தினமும் மண்ணைத் தின்னும் தன் பிள்ளையின் வியாதி குணமாக வேண்டி நல்ல மருந்துகளை இனிப்புப் பண்டங்களில் மறைத்து வைத்து அவற்றை உண்ணக் கொடுக்கும் கருணையுள்ள நல்ல தாயைப்போல வேதத்தின் கர்மகாண்ட வாக்கியங்கள் இல்வாழ்க்கைக்குரிய தர்மங்களைச் செய், யாகங்களைச் செய் இவற்றால் நன்மை கிடைக்குமென்று கூறுகின்றன. இவ்வாறு கூறும் கருத்து வேறாகும். சுவர்க்க போகத்தில் விருப்பமுடையவர்கள் அக்கருத்தை அறிய மாட்டார்கள்.

★★★

## 74.

**போகம் ஆருயிர் கண்டதை உண்பதும் புணர்வதும் இயல்பேகாண்**
**ஆக மங்களும் சுபாவத்தை விதிக்குமோ அத்தனை தெரியாதோ**
**காக மேகறுத் திடுநெருப் பேசுடு கசந்திடு வேம்பேநீ**
**வேக வாயுவே அசைஎன ஒருவரும் விதித்திட வேண்டாவே.**

இந்திரியங்கள் வாயிலாக போகத்தை அனுபவிக்கும் ஜீவர்கள் கிடைத்த உணவை உண்பதும், கிடைத்தப் பெண்களுடன் சேர்வதும் அவர்களுக்கு இயல்பாகும். ஜீவர்களுக்கு சுபாவமாய் உள்ளவற்றை வேதம் கூறவேண்டியதில்லை. அது அவர்களுக்குத் தெரியாதா? காக்கையே நீ கறுத்திடுவாயாக; நெருப்பே நீ சுடுவாயாக; வேம்பே நீ கசப்பாயாக; காற்றே நீ வீசுவாயாக; என்று ஒருவரும் கூற வேண்டியதில்லை.

★★★

## 75.

**கள்ளும் ஊனும்நீ விரும்பினால் மகங்கள்செய் காமத்தில் மனதானால்**
**கொள்ளும் பெண்டொடு கலவிசெய் எனில்இவன் குறைஎலாம் தொடான்என்றே**
**தள்ளும் வேதத்தின் சம்மதம் சகலமும் தவிர்வதே கருத்தாகும்**
**விள்ளும் இவ்விதி என்னெனில் பூருவ நியமமாம் விதி அன்றே.**

மது மாமிசங்களை நீ உண்ண விரும்பினால் யாகங்கள் செய்து உண்பாயாக. மாதர் போகத்தில் மனம் சென்றால் மணம் புரிந்து மனைவியுடன் சேரக்கடவாய்; என்று நாம் விதித்தால் இக்காமி நமது ஆக்கினைக்கு அஞ்சி தனக்குக் கிடைத்ததை உண்பதையும் நேரிட்ட மாதருடன் சேர்வதையும் நீக்கிவிடுவான் என்பதே வேதத்தின் சம்மதமாகும். இது கர்மகாண்ட விதியாகும், ஞானகாண்ட முடிவு அல்ல. சகலமும் விட்டு ஒழிப்பதே வேத சம்மதமாகும்.

★★★

## 76.

*மதுஇ றைச்சிகள் உண்என்ற சுருதியின் மணந்துபார் எனல்பாராய்*
*மிதுன இச்சையும் புத்திரோற் பத்தியால் விரும்பென்ற விதிபாராய்*
*இதையும் விட்டொழி அதிநயிட் டிகவந்நிக் கிகழ்ச்சி அற்றதும்பாராய்*
*அதைஅ றிந்துகன் மங்கள்ஆ சைகள் ஒழிந்து ஆனந்தம் அடைவாயே.*

அன்பனே! நீ மது மாமிசங்களை உண்ண விரும்பினால் உனக்கு நரகம் வராதபடி அவற்றை யாகம் செய்து உண்பாயாக என்று விதித்த வேதம் பின்பு அவற்றைப் புசிக்காமல் மோந்து மாத்திரம் பார்க்கக் கடவாய் என்று விதித்திருப்பதையும்; மனைவியோடு சேரும் சேர்க்கையும் புத்திர உற்பத்தியின் பொருட்டு விரும்பக்கடவாய் என்றும் விதித்திருக்கிறது. இவைகளையும் விட்டவன் நைஷ்டிக பிரம்மச்சாரி அவனை உலகம் பழிக்காது என்று கூறிய வேதத்தின் தாத்பரியத்தை அறிந்து யாகாதி கர்மங்கள், மனைவி மீதுள்ள ஆசைகளை விட்டுத் தத்துவ ஞானத்தால் ஆத்மாநந்தத்தை அடையக் கடவாய். (கர்ம காண்டம் கூறும் கர்மங்களால் அடையும் போகங்கள் எல்லாம் பின்பு துன்பங்களாக வருத்துவதைக் கண்டு அதை விடுத்து பரம சுகத்தைத் தேடவேண்டும் என்பது வேதத்தின் தாத்பரியம்).

★★★

## 77.

*உலகம் ஆனஅஞ் ஞானமும் கருமமும் உறவென்ற வழிகூடும்*
*பலவும் ஆனஅஞ் ஞானமும் ஞானமும் பகைஎன்பது உளதானால்*
*நிலவி லேமறுப் போல அஞ்ஞானமும் நிமலஞா னத்தோடே*
*குலவி நின்றிந்தச் சிருட்டிகள் செய்யவும் கூடுமோ குருமூர்த்தி.*

குருநாதனே! உலகமாக பரிணாமமடைந்த அஞ்ஞானமும், யாகாதி கிரியைகளும் தம்முள் உறவாகின்றன (பாடல் 70) என்று தாங்கள் கூறிய கருத்து ஏற்புடையதாகும். நாநாவிதமான அஞ்ஞானமும், ஏகமான ஞானமும் தம்முள் பகையாயிருப்பது உண்மையாயின், சந்திரனிடத்தில் களங்கம் இருப்பதுபோல, அந்த அஞ்ஞானமானது களங்கமற்ற பிரம்மத்தோடு சேர்ந்திருந்து சிருஷ்டிகள் செய்ய இயலுமா? அதனை உரைத்தருள வேண்டுகிறேன்.

★★★

## 78.

சொரூப ஞானமும் விருத்திஞா னமும்என்று சோதிஞான
மும்இரண்டாம்
சொரூப ஞானமே விருத்தியின் ஞானமாய்த் தோன்றும்
வேறிலைமைந்தா
சொரூப ஞானம்அஞ் ஞானசத் துருஅன்று சுழுத்தியில் கண்டாயே
சொரூப ஞானத்தில் மருவும்அஞ் ஞானத்தைச் சுடும்விருத்
தியின்ஞானம்.

மகனே! பிரகாசமான ஞானமானது சொரூப (சாமான்ய) ஞானம், விருத்தி (விசேஷ) ஞானம் என இருவகைப்படும். சொரூப ஞானமே விருத்தி ஞானமாக மாறுகிறது. அவ்வாறு மாறித் தோன்றினாலும் அவை வேறுவேறு அல்ல. சுழுத்தி நிலையில் ஆத்மாவிடம் அஞ்ஞானம் விளங்குகிறது. அதனால் சொரூபஞானம் அஞ்ஞானத்திற்குப் பகையானது அல்ல. ஆனால் சொரூப ஞானத்தில் கற்பிதமாக உள்ள அஞ்ஞானத்தை விருத்தி ஞானம் கெடுக்கும். ஆதலால் விருத்தி ஞானமே அஞ்ஞானத்திற்கு பகை என்று அறிந்துகொள்.

★★★

## 79.

துருத்தி மாயையைச் சுழுத்தியில் சுடாததற் சொரூப ஞானம்தானே
விருத்தி ஞானமாய்ச் சுட்டதெப்படிஎனின் வெய்யிலால் உலகெங்கும்
பரித்த சூரியன் சூரியகாந்தத்தில் பற்றிஅக் கினியாகி
எரித்த வாறுபோல் சமாதியில் விருத்தியால் எரிக்கும் என்றறிவாயே.

துருத்தியைப்போல உசுவாச நிசுவாசங்களையுடைய சடமாகிய அஞ்ஞானத்தைச் சுழுத்தியில் கெடுக்காத சொரூப ஞானம் சாக்கிரத்தில் விருத்தி ஞானமாய்க் கெடுத்ததெப்படி என்றால் சூரிய கிரணங்கள் உலகம் முழுவதும் வியாபித்திருந்தாலும் அதன் உஷ்ணம் பொருள்களை எரிப்பதில்லை. ஆனால் சூரிய காந்தக் கல்லில் பொருந்தி அக்னி வடிவமாகத் தோன்றி பஞ்சு முதலிய பொருள்களை எரிக்கிறது. அதுபோல எங்கும் வியாபித்துள்ள சொரூபஞானம் சமாதியில் அகம்பிரம்மாஸ்மி என்னும் விருத்தி ஞானமாகத் தோன்றி அஞ்ஞானத்தை அழிக்கிறது என்பதை அறிந்து கொள்வாயாக.

★★★

## 80.

*அருளும் ஐயனே திரிவிதக ரணத்தால் ஆகிய தொழில் எல்லாம்*
*கருமம் அல்லவோ விருத்திஞா னமும் அந்தக் கரணகாரியம் அன்றோ*
*உரியகர்மம் அஞ்ஞானத்தைக் கெடுக்கும் என்று ஓதினால் ஆகாதோ*
*பெரிய ஞானம்என்று அதற்கொரு பெயரிட்ட பெருமையை உரையீரே.*

எனது குருநாதா! மனம் வாக்கு காயம் என்னும் முக்கரணங்களால் செய்யும் கிரியைகள் எல்லாம் கருமங்களல்லவா? நான் பிரம்மம் என்னும் விருத்தி ஞானமும் மனதின் செயலாக இருப்பதால் அதுவும் கருமம் அல்லவா? இவ்வாறு நான் பிரம்மம் என்னும் அந்தக்கரண விருத்தி வடிவமான மானசகருமமானது அஞ்ஞானத்தை நீக்கும் கருமம் என்று கூறக்கூடாதா? அதற்கு ஞானம் என்று ஏன் பெரிய பெயரிடப்பட்டுள்ளது என்பதை உரைத்தருளல் வேண்டும்.

★★★

## 81.

*விருத்தி ஞானம்அந் தக்கரண ணத்தொடு விருத்திஆ கிலும்மைந்தா*
*ஒருத்தி மக்களே தங்களிற் பகைக்கின்றது உலகெங்கும் கண்டோமே*
*கருத்தன் ஆகிய புருடதந் திரங்களாம் கருமங்கள் அவைபோல*
*வருத்த ஞானமோ புருடதந் திரம்அன்று வஸ்துதந்திரம் ஆமே.*

நான் பிரம்மம் என்னும் விருத்தி ஞானமானது மனத்தினுடைய விருத்தி ஆனாலும் ஒரு தாயின் மக்கள் தங்களுக்குள்ளே பகைப்பது உலகெங்கும் உள்ளது. அதுபோல கருமங்கள் என்பவை கருத்தாவினுடைய அதீனமாகும் (புருஷ தந்திரம்) விசாரணையால் உதிக்கும் விவேக ஞானம் புருஷ தந்திரம் அல்ல, அது வஸ்து தந்திரமாகும். (செயல் மனிதனைச் சார்ந்து இருக்கிறது. அறிவு பொருளைச் சார்ந்து இருக்கிறது. பொருளை உள்ளபடி அறிந்துகொள்வது வஸ்து தந்திரம். 'சத்தியம் வத' என்பது வஸ்து தந்திரம் செயல்படுவதும், படாததும் புருஷ தந்திரம்).

★★★

## 82.

வகுத்த கருமங்கள் செய்யவும் தவிரவும் மற்றொன்றாக்கவும் கூடும்
மிகுத்த ஞானம்அப் படிஅன்று தியானமும் விவேக ஞானமும்வேறே
செகத்தில் ஒன்றையொன் றாஇவன் பாவிக்கும் தியானம்
கற்பிதயோகம்
முகத்த மாக்கண்ட ஞானமே வாஸ்தவம் மோகமாய் மயங்காதே.

மக்களால் வகுக்கப்பட்ட கர்மங்களை விதித்தபடி செய்யவும், செய்யாமலிருக்கவும், தம்விருப்பம் போல் மாற்றிச் செய்யவும் முடியும். ஆனால் ஞானம் பிரமாண, பிரமேயங்களின் வசமாக இருப்பதால் அதைச் செய்யவோ, செய்யாமல் விடவோ, மாற்றிச் செய்யவோ முடியாது. சாதகன் ஒரு பொருளை மற்றொரு பொருளாக பாவித்து (கற்பனை) செய்வது தியானம் (லிங்கம் = பரமேஸ்வரன்) பிரத்யட்சமாக தரிசித்தது ஞானம். அதனால் கர்ம வடிவான தியானமும், விவேக வடிவமான ஞானமும் தம்முள் வேறுபட்டனவாகும். இவற்றில் சந்தேகமுடையவனாக நீ மயங்காதே.

★★★

## 83.

கண்ட றிந்தது ஞானம் கேட்டதுதனைக் கருதுபா வனையோகம்
கண்ட பேர்சொலக் கேட்டது மறந்துபோம் கண்டது மறவாதே
கண்ட வஸ்துமெய் தியானவஸ் துக்கள்பொய் கறுவிஅஞ்
ஞானத்தைக்
கண்ட அக்கணம் கொல்வது ஞானமே கருமம் அன்று அறிவாயே.

அநுபவமாகப் பார்த்து அறிந்தது ஞானம்; சொல்லக் கேட்டதை தியானிப்பது யோகம்; பார்த்தவர்கள் சொல்லக் கேட்ட பொருள் மறந்து போகும்; ஆனால் (அனுபவமாக) பார்த்த பொருள் மறக்காது; பார்த்த பொருள் உண்மையானது; பாவிக்கின்ற பொருள் மித்தை ஆகும்; அஞ்ஞானத்தை தான் பார்த்த அப்பொழுதே கோபித்துக் கெடுப்பது விருத்தி ஞானம்தான்; தியானம் முதலிய கர்மங்கள் அல்ல; இந்த வேறுபாட்டை நீ நன்றாக ஆராய்ந்து அறிவாயாக.

★★★

## 84.

*சருவ முத்தியைத் தருகின்ற தியானமும் சத்தியம் அன்றென்றால்*
*சருவ முத்தியும் சத்தியம் அன்றென்று சங்கியா தேநீகேள்*
*உருவம் கேட்டவன் தியானிக்கும் பொழுதில்அவ் வுருவம்வாஸ்*
*தவம்அன்றே*
*உருவம் ஆகும்அப் பொழுதுகண் ணால்கண்ட உருவம்*
*வாஸ்தவம் ஆமே.*

சர்வம் பிரம்மமயம் என்று முத்தியைக் கொடுக்கின்ற நிர்குணப் பிரம்ம தியானம் மித்தை என்று சொன்னால், அத்தியானத்தால் வரும் முத்தியும் மித்தையாகுமே என்று நீ சந்தேகப்படாதே. பெரியோர் வாயிலாகப் பிரம்ம சொரூபத்தைக் கேட்டவன் கேட்டவாறு அதை தியானம் செய்யும்போது அது பாவனையாக இருப்பதால் அது உண்மை அல்ல. ஆனால் அந்த பாவனையானது தியானத்தின் முதிர்ச்சியில் அந்த ஸ்வரூபமாகும்போது பிரத்யட்சமாக அறிந்த அந்த பிரம்ம சொரூபம் உண்மையாகும் (நிர்குணப் பிரம்ம தியானம் மித்தையானாலும் அதனாலுண்டாகும், தானே தானாகும் முத்தி உண்மையாகும்).

★★★

## 85.

*சடம தாகிய தியானம்மெய் ஆகிய சர்வமுத் தியைநல்கும்*
*திடம தானதெப் படிஎனில் அவரவர் தியானமே பிறப்பாகும்*
*உடலம் ஆசையால் தியானிக்கில் தியானித்த உடல்கள்ஆ குவர்மைந்தா*
*தொடர்ப வம்கெடச் சொரூபமே தியானிக்கில் சொரூபமாகுவர்*
*மெய்யே.*

மித்தையாகிய நிர்குண தியானம் சத்தியமாகிய முத்தியைக் கொடுக்கும் சாமர்த்தியமுடையதாக இருப்பது எப்படி என்றால்? அவரவர் மரணகாலத்தில் உண்டாகும் எண்ணத்தைப் பொறுத்தே மறுபிறவி உண்டாகும். அவர்கள் ஆசையுடன் சிந்தித்தவண்ணம் ஆவார்கள். தொடர்ந்து வருகின்ற பிறவிகள் மீண்டும் வரக்கூடாது என்று ஆத்மசொரூபத்தைச் சிந்தித்தால் அச்சொரூபமே ஆவார்கள். இது உண்மையாகும்.

★★★

## 86.

**பிரம ரூபத்தைத் தியானித்த பேர்களும் பிரமம்ஆ குவர்என்றால்**
**நரச ரீரம்ஆம் குரவனே விசாரம்ஏன் ஞானம்ஏன் என்னாதே**
**பரம பாவனை பரோட்சம்ஆம் பின்புஅந்தப் பரோட்சமே**
**அபரோட்சம்**
**திரவி சாரம்ஆம் ஞானம்ஆம் முத்திஆம் தீர்வைஈ தறிவாயே.**

மானுட வடிவில் எழுந்தருளியுள்ள குருவே! பிரம்ம சொரூபத்தைத் தியானம் செய்தவர்களும் பிரம்மமே ஆவார்கள் என்று சொன்னால் விசாரம் எதற்கு? ஞானம் எதற்கு என்று கேளாதே. நிர்குண பிரம்ம தியானமானது தியானிக்கும்போது அது பரோட்ச ஞானமாகும். அத்தியானம் பரிபாகமான பின்பு அந்தப் பரோட்ச ஞானமே திடப்பட திடப்பட அபரோட்ச ஞானம் ஆகி மோட்சம் ஆகும். இதுவே முடிந்த முடிபு (சித்தாந்தம்) என்று அறிந்து கொள்வாயாக.

★★★

## 87.

**வீடுஅது ஆம்பரி பூரண சொரூபத்தில் விருத்திஞா னமும்கூடிச்**
**சேடம் ஆகினால் அகண்டம்ஆம் அநுபவ சித்திஎப் படிஎன்றால்**
**சாடி நீர்மண்ணைப் பிரித்ததேற் றாம்பொடி தானும்மண் ணொடுமாயும்**
**ஊடி ஞானமும் அறிவிலா மையைக் கெடுத்து ஒக்கவே கெடுந்தானே.**

சத்குருவே! முத்திரூபமாகிய பரிபூரண பிரம்மஸ்வரூபத்தில் அந்தக்கரணத்தின் விருத்தி ரூபமான தத்துவ ஞானமும் சேர்ந்தால் அகண்டாகார அநுபவம் எவ்வாறு உண்டாகும் என்றால், பாத்திரத்தி லுள்ள நீரில் சேர்ந்திருந்த சேற்றை வேறு செய்த தேற்றாங்கொட்டை தூளும் அச்சேற்றோடு சேர்ந்து கீழே படிந்துவிடும். அதுபோல விருத்தி ஞானமும் அஞ்ஞானத்தைக் கெடுத்துத் தானும் கூடவே கெட்டுப் போகும். அதனால் அகண்டானுபவம் சித்திப்பதற்கு யாதொரு தடையுமில்லை.

★★★

## 88.

*இந்த நிச்சயம் முத்தருள் அநுபம் இருப்பதெப் படிஎன்றால்*
*சிந்தை அற்றபூ மண்டல இராசனும் சிசுவும்போல் சுகம்ஆவர்*
*பந்த முத்திகள் மறந்துபோம் உண்டென்று பலர்சொலின் நகைஆவர்*
*அந்த ரத்தைஉண்டு உமிழ்ந்ததோர் கொசுகெனும் அவர்களை நகையாரே.*

தேசிக மூர்த்தியே! இவ்வகண்டானுபவம் ஜீவர் முத்தரிடம் எவ்வாறு இருக்கும் என்று கேட்பாயாகில் பகைவரே இல்லாமல் நிஸ்சிந்தையாய் இவ்வுலகம் முழுவதையும் ஆளுகின்ற சக்ரவர்த்தி போன்றும், இது நல்லது, இது தீயது என்று அறியாத குழந்தையைப் போலவும் பரமாநந்த வடிவமாகவே இருப்பவர்கள். அவர்களுக்கு பந்தம் முத்தி எதுவும் இன்றி பாவனா விகற்பங்கள் இல்லாது ஒழிந்துபோகும். பந்தம் முத்தி இருக்கிறது என்றும் ஆகாயத்தை ஒரு கொசு விழுங்கிக் கக்கிற்று என்றும் யாராவது கூறினால் அவர்களைப் பார்த்துச் சிரிப்பார்கள்.

★★★

## 89.

*மலடி மைந்தனும் தாணுவில் புருடனும் வான்மலர் முடிசூடி*
*இலகு கந்தர்ப்ப நகரிலே சுத்திகை இரசதம் விலைபேசிக்*
*கலகம் ஆய்முயல் கொம்பினால் குத்தியே களைத்து இருவரும் மாண்டார்*
*அலகை ஆயினார் எனும்விவ காரத்தை அறிந்தவன் மயங்கானே.*

மகனே! மலடியின் மகனும், கட்டையில் தோன்றிய மனிதனும், ஆகாயத்தாமரைப் பூவை சிரசில் சூடிக்கொண்டு, கந்தர்ப்ப நகர்க்குச் சென்று, அங்குள்ள ஒரு கடையில் கிளிஞ்சல் வெள்ளியை விலைபேசி, அதனால் கலகம் மூண்டு, முயல் கொம்பினால் குத்தி இருவரும் மாண்டார்கள் என்ற கதையைக் கேட்டு உண்மை தெரிந்தவன் மயங்க மாட்டான். (சர்வம் மித்தை, சர்வம் பிரம்மம், சர்வம் நான் என்பதை சுருதி யுக்தி அநுபவ வாயிலாக அறிந்தவன் மித்தையாயுள்ள உலக வியவகாரத்தைப் பற்றி மயங்க மாட்டான்).

★★★

## 90.

மாயை என்பது பொய் எனில் அதுபெற்ற வகையெலாம்
பொய்ஆமே
தாயை அன்றிமக் களுக்கொரு பிறவியும் சாதியும் வேறுண்டோ
சேய சொர்க்கமும் நரகமும் நன்மையும் தீமையும் பாராமல்
தூய சத்துச்சித்து ஆநந்த பூரண சொரூபமாய் இருப்பாயே.

மாயை என்று சொல்லப்படுவது மித்தை என்றால் அதனால் உண்டான உலகம், உயிர்கள், பொருட்கள் எல்லாமே மித்தை என்பதில் ஐயமில்லை. அது எவ்வாறென்றால் தாயினது பிறப்பையும் ஜாதியையும் விட்டு பிள்ளைகளுக்கு வேறொரு பிறப்பும், ஜாதியும் உண்டாகாது. ஆதலால் சுவர்க்கம், நரகம் என்பனவற்றையும், அவைகளை அடைவதற்கு ஏதுவான புண்ணியம், பாவம் என்பன வற்றையும் உண்மை என்று கொள்ளாமல் மித்தை என்று தள்ளி நீ சச்சிதாநந்த பரிபூரணப் பிரம்ம சொரூபமாய் இருப்பாயாக.

★★★

## 91.

பங்க யாசனன் முதற்பல தேவரும் பார்உள பெரியோரும்
கங்கை ஆதியாம் தீர்த்தமும் தேசமும் காலமும் மறைநாலும்
அங்கம் ஆறும்மந் திரங்களும் தவங்களும் அசத்தியம் எனச்
சொன்னால்
எங்கள் நாயகனே னேஅத னாற்குற்றம் இல்லையோ மொழியீரே.

எனதாண்டவரே! பிருமதேவன் முதலிய தேவர்களும், பூமியிலுள்ள மகான்களும், கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களும், காசி முதலிய புண்ணிய ஸ்தலங்களும், அர்க்கோதயம், மகோதயம் முதலிய புண்ணிய காலங்களும், நான்கு வேதங்களும், ஆறு அங்கங்களும், பிரணவாதி மகாமந்திரங்களும், தவங்களும் மித்தை என்று சொன்னால், அவ்வாறு சொல்வது குற்றமாகாதா? அதன் உண்மையை உரைத்தருள வேண்டுகிறேன். (ஆறு அங்கங்கள் - சிட்டை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தசு, சோதிஷம்).

★★★

## 92.

*சொற்ப னந்தனில் கண்டதைப் பொய்என்று சொல்வது பிழைஆனால்*

*அற்ப மாயையில் தோன்றிய சகங்களை அசத்தெனல் பிழைஆமே*

*சொற்ப னந்தனில் கண்டதைப் பொய்என்று சொல்லலாம் எனில்மைந்தா*

*அற்ப மாயையில் தோன்றிய சகம்எலாம் அசத்தியம் எனல்ஆமே.*

ஒருவன் கனவில் கண்டதை பொய் என்று சொல்வது குற்றமானால் தோன்றிய உலகங்களை பொய் என்பதும் குற்றம்தான். கனவில் கண்டதை பொய் என்று சொல்லலாம் என்றால் மாயையில் தோன்றிய உலகங்களை எல்லாம் பொய் எனக் கூறலாம். (அஞ்ஞானிக்கு பிரபஞ்சம் உண்மையாகத் தோன்றும்).

★★★

## 93.

*பொய்யை மெய்என்ற மூடர்புண் ணியர்என்று புராணம் கூப்பிடுமானால்*

*மெய்யை மெய்என்ற ஞானிக்குக் குற்றங்கள் விதித்த சாத்திரம் உண்டோ*

*பொய்யது ஏதெனில் நாமரூ பங்களாம் பூதம்ஆ கியமாயை*

*மெய்யது ஏதெனில் சச்சிதா நந்தமாய் வியாபிக்கும் ஆன்மாவே.*

மித்தையை சத்தியமென்று கூறும் அறிவிலிகளை தர்மவான்கள் என்று புராணங்கள் கூறுமானால், உண்மையை உண்மை என்ற ஞானிகளுக்கு அபராதங்கள் விதித்த சாஸ்திரங்கள் உள்ளனவா? இல்லையே மித்தை என்பது எது என்றால் நாமரூப வடிவங்களான பஞ்சபூத பௌதிகங்களாகிய மாயையே ஆகும். சத்தியம் என்பது எது என்றால் சச்சிதாநந்த ஸ்வரூபமாக வியாபித்திருக்கும் ஆத்மஸ்வரூபமாகும்.

★★★

## 94.

**மாயை என்பதேது உடையார்ஆர் எப்படி வந்தது வருவான்ஏன்**
**மாயை என்பது பிரமத்தின் வேறெனின் வஸ்துவும் இரண்டாமே**
**மாயை என்பதும் பிரமமும் ஒன்றெனின் வஸ்துவும் பொய்யாமே**
**மாயை என்றமே கங்களுக்கு ஒருசண்ட மாருத குருமூர்த்தி.**

மாயை என்னும் மேகங்களை அகற்றும் சண்டமாருத குருமூர்த்தியே! மாயை என்பதன் சொரூபம் என்ன? அதனை உடையவர் யார்? அது எவ்வாறு தோன்றியது? தோன்றியதற்குக் காரணம் என்ன? மாயை என்று சொல்வது பிரமத்துக்கு வேறாயின் துவிதமாகி (இரண்டு பொருள்கள்) விடுமே? ஒன்றாயின் பிரம்மமும் மித்தையாகி விடுமே? இதனுண்மையை எனக்குக்கூறி அருள்வீராக.

★★★

## 95.

**அதனை இன்னதென்று உரைத்திடப் படாமையால் அவாச்சிய வடிவுஆமே**
**இதுத னக்குஉளது உடல்யான் உலகுமெய் எனும்அவா உடையோர்கள்**
**கதைஇ லாதபொய் வந்ததிப் படிஎன்று கண்டபேர் இலைமைந்தா**
**விதன மாயைஏன் வந்ததென் றால்புத்தி விசாரம் அற் றதனாலே.**

அன்புள்ள மகனே! அம்மாயையை இத்தன்மையான சொரூப முடையது என்று நிச்சயித்துச் சொல்ல முடியாததால் அது அநிர்வசநீயம் (வாக்கால் விளக்க முடியாதது) என்று சொல்லப்படுகிறது. இந்த உடல்தான் ஆத்மா, உலகம் உண்மை என்னும் விபரீத புத்தியுடையவர்களே அதனை உடையவர்கள். இத்தன்மையது என்று கூறமுடியாத அந்த மாயை அநாதியாக, காரணமில்லாத மித்தையாக இருப்பதால் அது இவ்விதம் தோன்றியது என்று அறிந்தவர் யாரும் இல்லை. ஆத்ம ஞான விசாரம் செய்யாததினால் மாயை தோன்றியது.

★★★

## 96.

*அருவம் ஆகும்மா யாவிவித் தைகள்விளை யாடுமுன் தெரியாவே*
*உருவம் ஆம்பல கந்தர்ப்ப சேனையாய் உதித்தபின் வெளியாகும்*
*பிரம சத்திகள் அநந்தம்ஆம் அதைக்கண்டு பிடித்திடல் கூடாதே*
*பரவு பூதங்கள் கண்டுஅநு மானத்தால் பலருக்கும் வெளியாமே.*

இந்திர ஜாலம் செய்பவன் அருவமாகிய கந்தர்வ நகரம் முதலானவை காட்டி விளையாடுவதற்கு முன்பு அவனுடைய மாயா வித்தைகள் தோன்றுவதில்லை. பல வடிவங்களாகத் தோன்றுகின்ற அநேக கந்தர்வ சேனைகள் தோன்றிய பின்புதான் அவ்வித்தைகள் தெரிகின்றன. அதுபோல பிரம்மத்தின் சக்திகள் அளவற்றன. அவற்றை இன்ன தன்மையன என்று கண்டறிதல் ஒருவருக்கும் இயலாது. ஆனால் எங்கும் விரியும் பஞ்சபூதங்களைப் பார்த்து அனுமானப் பிரமாணத்தால் எல்லார்க்கும் பிரம்மசக்தி உண்டென்பது விளங்குகிறது.

★★★

## 97.

*காரி யங்களும் சத்திஆ தாரமும் காணுமற்று அதுமாயம்*
*பாரில் நின்றமா யாவியும் சேனையும் பார்ப்பவர் கண்காணும்*
*வீரி யம்திகழ் வித்தைஆ யினசத்தி வெளிப்படா ததுபோலே*
*பேரி யல்பிர மத்துக்கும் உலகுக்கும் பிரித்துசத் திகள்உண்டே.*

இந்திரஜாலக்காரனும் அவனது இந்திரஜால சக்தியால் தோன்றிய கந்தர்வ சேனையும் காண்பவர்களுக்குப் பிரதியட்சமாகத் தோன்றும். ஆனால் அந்த இந்திரஜால சக்தி பிரத்யட்சமாகத் தோன்றுவதில்லை. அதுபோல மாயா சக்தியின் காரியமான நாமரூப வடிவப் பிரபஞ்சமும் அச்சக்திக்கு ஆதாரமாகிய பிரமமும் காண்போருக்குப் பிரத்யட்சமாகத் தோன்றும். ஆனால் அந்த மாயா சக்தி பிரத்யட்சமாகத் தோன்றுவதில்லை. ஆதலால் ஆதாரமாகிய பிரம்மத்துக்கும் காரியமாகிய பிரபஞ்சத்துக்கும் வேறாக அளவிறந்த சக்திகள் உள்ளன.

★★★

## 98.

சத்தி சத்தனைத் தவிரவேறு அன்றுகாண் சத்தனாம் மாயாவி
வித்தை காட்டிய இந்திர சாலம்பொய் வித்வான் மெய்போலப்
புத்தி மைந்தனே சத்திமான் ஆகிய பூரண ஆன்மாவின்
வத்து நிர்ணயம் சொன்னதிட் டாந்தத்தின் வழிகண்டு
தெளிவாயே.

அறிவுள்ள மகனே! இந்திரஜால சக்தியானது அதனைக் காட்டிய ஜாலக்காரனை விட வேறானதல்ல. அச்சத்தியையுடையவனான இந்திரஜாலக்காரன் இந்திரஜால வித்தையால் தோற்றுவித்த இந்திரஜாலம் பொய், ஆனால் ஜாலக்காரன் உண்மை. அதுபோல மாயாப்பிரபஞ்சம் பொய்யாகவும், பிரம்மம் மெய்யாகவும் இருக்கிறது. அதனால் சர்வ சக்தியுடைய பரிபூரணமான ஆத்மா மெய் என்றும் அதன் காரியமான பிரபஞ்சம் பொய் என்றும் நிச்சயம் செய்து தெளிவாக அறிந்துகொள்.

★★★

## 99.

இல்லை ஆகிய சத்தியை உண்டென்ப தெப்படி எனக் கேட்கில்
புல்லை ஆதிஆம் அசேதனப் பொருள்எலாம் பூத்துக்
காய்ப்பனபாராய்
நல்லை ஆம்மக னேஅதில் சிற்சத்தி நடந்திடா திருந்தக்கால்
தொல்லை யாய்வரும் சராசர உயிர்க்கு எலாம் சுபாவங்கள் வேறாமே.

நன்மகனே! மித்தையாகிய மாயாசக்தி இருக்கிறது என்பதை எங்ஙனம் அறிவது என்று கேட்பாயாகில் புல் முதலான ஜடவஸ்துக்கள் அனைத்தும் பூக்கும் காலத்தில் பூத்து, காய்க்கும் காலத்தில் காய்ப்பதைப் பார்க்கிறாய். அப்பொருள்களில் சித்சத்தியானது வியாபியாது இருக்குமானால், தொன்றுதொட்டு வருகின்ற தாவர ஜங்கமங்களாகிய உயிர்கள் அனைத்திற்கும் அவைகளின் சுபாவங்கள் மாறிப்போய்விடும்.

★★★

## 100.

*கருப்பை முட்டையுள் பறவைகள் பலநிறம் கலந்தசித் திரம்பாராய்*
*அருப்பம் ஆம்சக்தி நியமம்இல் லாவிடில் அரசிலா நகர்போலாம்*
*நெருப்பு நீரதாம் கசப்புமே மதுரம்ஆம் நீசனும் மறைஓதும்*
*பொருப்பு மேகம்ஆம் கடல்எலாம் மண்கள்ஆம் புவனம்*
*இப்படிப்போமே.*

மேலும் கருப்பையிலிருக்கும் முட்டையிலுள்ள பறவைகள் பல வர்ணங்களில் இருக்கும் விசித்திரத்தைப் பார். இவ்வாறு நியமம் செய்யும் சக்தி இல்லாது போனால் அரசன் இல்லாத நகரம்போல பிரபஞ்சத்தின் சுபாவம் மாறிப்போகும். எவ்வாறெனில் உஷ்ண சுபாவமுள்ள நெருப்பு சீதள சுபாவமுள்ள நீராகிவிடும்; கைப்பு சுபாவமுள்ள வேம்பு மதுரசுபாவமுள்ளதாகிவிடும்; தகுதியற்றவனும் வேதம் ஓதும் அதிகாரியாகி விடுவான்; அசையாத மலை அசையும் மேகமாகி சஞ்சரிக்கும் திரவ சுபாவமுள்ள கடல் கடின சுபாவமுள்ள நிலமாகிவிடும்; இவ்வண்ணம் உலகமானது தன் சுபாவத்தில் மாறிவிடும்.

## 101.

*ஆர்க்கும் காணவும் அறியவும் படாதென்றும் அவாச்சிய*
*வடிவென்றும்*
*சேர்க்கும் நாமரூ பப்பயிர் வித்தென்றும் செப்பிய சிற்சத்தி*
*பேர்க்கும் ஆறெங்ஙன் பிரித்திடப் படாதெனில் பிரமபாவனை ஒன்றாப்*
*பார்க்கும் ஆறெங்ஙன் முத்திஆ குவதெங்ஙன் பரமசற்குரு மூர்த்தி.*

மேலான தேசிகரே! யார்க்கும் பார்க்கவும் உணரவும் முடியாத தென்றும் இன்னதென உணர்த்தக்கூடாத ரூபம் (அவாச்சியவடிவம்) என்றும்; நாமரூபங்களை உண்டாக்கும் விதை என்றும் தேவரீர் கூறிய சிற்சத்தியை (மாயை) நீக்குவது எப்படி? நீக்க முடியாது என்றால் அகம் பிரம்மாஸ்மி என்னும் அத்வைத பாவனையால் என்னையும் பிரம்மத்தையும் ஏகமாக அறிவது எப்படி? சர்வதுக்க நிவர்த்தி; பரமாநந்த பிராப்திவடிவ மோட்சமடைவது எப்படி? இவைகளுக்கு விடையருள வேண்டுகிறேன்.

★★★

## 102.

**வாயுத் தம்பனம் சலதம்ப னம்மணி மந்திர மருந்தாலே**
**தேயுத் தம்பனம் செய்திடில் அதிலதில் சிறந்தசத் திகள் எங்கே**
**நீஅச் சச்சிதா நந்தமாய் வேறொன்று நினைந்திடா திருபாயேல்**
**மாயச் சத்திபோம் ஈதன்றி மந்திர மறைகளில் காணோமே.**

மணி-மந்திர ஔஷதங்களினால் வாயு ஸ்தம்பனம், ஜல ஸ்தம்பனம், அக்கினி ஸ்தம்பனம் செய்தால் அவற்றில் இயல்பா யிருக்கும் அசைவு, நெகிழ்ச்சி, உஷ்ணம் என்னும் விசேச சக்திகள் காணாமல் போய்விடும், தெரியாது. அதுபோல் நீயும் அந்தச் சச்சிதாநந்த பிரம்ம வடிவமாகி, மற்றொன்றையும் நினைக்காமல் இருப்பாயாகில், மாயா சக்தி உன்னை விட்டு நீங்கிவிடும். மாயையை ஒழிப்பதற்கு இதைத்தவிர வேறு உபாயம் வேதங்களில் இல்லை (தம்பனம் - நீக்குதல்).

★★★

## 103.

**மேவும் மண்ணில் அவ்வியக்தமே வியத்தம் ஆம் விவகரித்திட வேண்டில்**
**நாவி னால்மண்ணைக் குடம்என்பர் அக்குடம் நசிப்பதும் நாவாலே**
**பாவும் நாமரூபங்களை மறந்துமண் பார்ப்பதே பரமார்த்தம்**
**சீவ பேதகற் பிதங்களை மறந்துநீ சின்மயம் ஆவாயே.**

குடம் உருவாவதற்கு முன்பு மண்ணில் மறைந்திருந்த குடசக்தி குடம் உருவான பின்பு வெளிப்பட்டுத் தோன்றி குடம் என்னும் பெயரைப் பெறுகிறது. அதை விவகரிக்கும் நிமித்தம் நாவினால் அம்மண்ணை குடம் என்று சொல்வார்கள். குடம் உடைந்தபின்னர் குடம் என்னும் பெயர் போய் மண் என்று சொல்வதும் நாவினால்தான். இவ்வாறு கற்பனையாக வழங்குகின்ற நாமரூப வடிவங்களை நினைக்காமல் மண் என்று பார்ப்பதே உண்மை ஞானமாகும். அவ்வாறே ஜீவன், ஈசுவரன், உலகம் என்னும் நாமரூப கற்பனை களைப் பொய் என அறிந்து நீக்கி, சர்வத்தையும் சின்மாத்திரமாகக் கண்டு நீ சின்மாத்திரமாய் இருப்பாயாக.

★★★

## 104.

***பூரிக் கும்கன சச்சிதா நந்தத்தில் பொய்சடம் துயர்மூன்றும்
தூரத்தது ஆயினும் தோன்றுபாழ் விபரிதம் துடைப்ப
துளப்படிஎன்றால்
நீரில் தோன்றும்தன் நிழல்தலை கீழதாய் நின்று அலையினும் நேராய்ப்
பாரில் தோன்றிய தன்னை நோக் கிடில்அந்தப் பாழ்நிழல்
பொய்யாமே.***

சற்குரு மூர்த்தியே! பூரணமாயிருக்கின்ற சச்சிதாநந்த சொரூபத்தில் அசத்து, ஜடம், துக்கம் ஆகிய மூன்றும் இல்லையாயினும், இருப்பது போலத் தோன்றுகிறது. இந்தப் பாழான விபரீதங்களைக் கெடுப்பது எவ்விதம் என்றால், நீரில் தோன்றும் தனது நிழலானது தலைகீழாக இருப்பது போலத் தெரிகிறது. அது அவ்வாறு தலைகீழாகத் தெரிந்தாலும், பூமியில் இருக்கும் தனது வடிவத்தைப் பார்க்கும்போது அப்பாழான நிழல் பொய்யாய்ப் போய்விடும். அதுபோல உனது கற்பித மாகிய நாமரூப பேதங்கள் தோன்றினாலும்; அதன் அதிட்டானமான சச்சிதானந்தம் மெய்யென்பதால் அவைகள் மித்தையாகி நீங்கிவிடும். இதுதான் அசத்து ஜட துக்கங்கள் தோன்றாமல் ஒழிக்கும் உபாயமாகும். (தன்னை தரிசித்தால் தனது சாயையான திரிசயம் தானாகவே நீங்கிவிடும்).

## 105.

***ஞானம் காரணம் அறிபொருள் காரிய நாமரூபப் பேய்கள்
ஆனது எப்படி அழிந்தது எப்படிஎன ஆய்குதல் பலன்அன்றே
மான மைந்தனே தீர்க்கசொப் பனசகம் வந்ததும் பாராமல்
போனதும்நினை யாமல்உன் போதம்ஆய்ப் பூரணமாய் இருப்பாயே.***

பெருமைமிகு மகனே! காரணமாவது ஞானத்தை அறியும் அறிவு ஆகும். காரியமாவது நாமரூபமான ஜீவ ஈசுவர ஜகங்களாகும். இவைகள் எவ்வாறு தோன்றுகின்றன, அழிகின்றன என்று விசாரிப்பதால் பயன் இல்லை. நீண்ட கனவாகிய உலகங்கள் தோன்றியதையும், அழிந்ததையும் விசாரிக்காமல் உனது ஆன்மாவாய், பரிபூரண பிரம்மமாய் இருப்பாயாக. இதுவே நீ செய்ய வேண்டியதாகும்.

★★★

## 106.

**அசத்தில் எம்மட்டுண்டு அம்மட்டும் பராமுகம் ஆகினால் அம்மட்டும்**
**நிசத்தில் உள்விழிப் பார்வையாம் இப்படி நிரந்தரப் பழக்கத்தால்**
**வசத்தில் உன்மனம் நின்றுசின் மாத்திர வடிவம்ஆ யிடின்மைந்தா**
**கசத்த தேகத்தில் இருக்கினும் ஆநந்தக் கடல்வடிவு ஆவாயே.**

மித்தையான நாமரூபப் பிரபஞ்சத்தில் இருந்த அபிமானம் எந்த அளவு விடப்படுமோ, அந்தஅளவு சத்தியப் பிரம்மத்தில் விழிப்புணர்வு உண்டாகும். இவ்வாறு இடைவிடாது நெடுங்காலம் சாதனை செய்தால் உன் மனம் கட்டுப்பட்டு நிலைபிறழாது இருந்தால் நீ சித்துவடிவமாகி விடுவாய். மகனே! வெறுக்கத்தக்க இவ்வுடம்பில் நீ இருந்தாலும் ஆனந்தக் கடல் வடிவமாகி விடுவாய்.

★★★

## 107.

**தான்அன்றி வேறுஒன்றும் இல்லாத பூரணச் சச்சிதாநந்த குணமாய்**
**ஊன்நின்ற உயிர்தோறும் ஒன்றாகும்என்றால் அஃதுஒக்கின்ற படிகண்டிலேன்**
**நான்என்ற சீவன்கள் சத்தான வகைஒக்கும் ஞானங்கள் வெளிகண்டதால்**
**ஆநந்தம் இதுபோல வெளியாக உதியாத அடைவேது குருநாதனே.**

குருநாதா! தானல்லாமல் மற்றொரு பொருளும் உண்மையில் தன்னிடத்தில் இல்லாத ஆன்மா; பரிபூரண சச்சிதாநந்த சுபாவமாய் 'நான்', 'நான்' என்று வியவகரிக்கும் ஒவ்வொரு உயிர்களின் உடல்களிலும் ஏகமாய் இருக்குமாயின் அந்த ஆன்மா அவ்வாறு எப்போதும் ஒத்திருக்கும் தன்மையை நான் கண்டதில்லை. 'நான்', 'நான்' என்று அகங்கரிக்கும் ஜீவர்கள் சத்தாயிருத்தல் பொருந்தும். 'நான் கண்டேன்', 'கேட்டேன்', 'சுவைத்தேன்' என்று கூறுவதால் சித்தாயிருப்பதும் விளங்குகிறது. இவற்றைப்போல ஆனந்தமானது வெளிப்படையாகத் தோன்றாத காரணம் யாது? அதனை உரைத்தருளல் வேண்டும்.

★★★

## 108.

***உருவங்கள் இரதங்கள் பரிசங்கள் ஒருபூவில் ஒன்றாகும் என்றாலுமே***
***கரணங்கள் ஓர்ஒன்றில் ஓர்ஒன்று தெரியுங்க ணக்கன்றி வாராதுகாண்***
***அருமந்த சச்சிதாநந்தச் சுபாவங்கள் ஆன்மாவின் வடிவாகிலும்***
***பிரபஞ்ச மயமாம் விருத்திபே தத்தினால் பேதங்கள் ஆம் மைந்தனே.***

மகனே! ஒரு மலரில் மாறுபட்ட குணங்களான ரூபம், ரசம், ஸ்பரிசம் எல்லாம் இருந்தாலும் அந்தந்த இந்திரியங்களுக்குத்தான் அந்தந்த விஷயங்கள் தெரியுமே அல்லாமல், ஒன்றிற்கு மற்றான்றின் விஷயம் தெரியாது. அதுபோலச் சச்சிதாநந்த இயல்புகள் ஆன்மாவின் சொரூபமாக இருந்தாலும் பிரபஞ்சமயமாகிய விருத்திகளின் வேற்றுமையினால் அவை மாறுபட்டுத் தோன்றுகின்றன.

★★★

## 109.

***தாமதம் இராசதம் சாத்துவிகம் முக்குணத் தால்வரும்***
***விருத்திமூன்றாம்***
***ஆமவைகள் மூடமும் கோரமும் சாந்தமும் அபிதானம் ஆகும்மகனே***
***ஏமுறஇ ருக்கின்ற சச்சிதா நந்தங்கள் என்றென்றும் ஒன்றாகிலும்***
***நாம்உரைக் கும்விருத் திப்பிரிவி னால்சொரூப ஞானாதி பிரிவாகுமே.***

மகனே! தாமசம், இராசதம், சத்துவம் ஆகிய மூன்று குணங் களினால் முறையே மூடவிருத்தி, கோரவிருத்தி, சாந்த விருத்தி என்னும் மூன்றுவிதமான விருத்திகள் தோன்றும். எப்பொழுதும் ஆன்மாவின் சொரூபமாக ஏகரசமாக இருக்கும் சச்சிதாநந்தம் ஒன்றுதான் மூட, கோர, சாந்தம் (அஸ்தி, பாதி, பிரியம்) என்னும் விருத்தி பேதத்தினால் ஒரே ஆன்ம வடிவான சச்சிதானந்தம் வெவ்வேறாகத் தோன்றுகிறது.

★★★

## 110.

சடமான மூடத் தருக் கல்லு மண்களில் சத்தொன்றுமே தோன்றுமால்
விடமான காமாதி கோரத்தில் ஆனந்தம் விளையாது மற்றவைகளாம்
திடமான ஒழிவாதி சாந்தத்திலே சச்சி தானந்தம் மூன்றும் வெளியாம்
மடமான மூடங்கள் கோரங்கள் விடுசாந்த மனமாகில் ஆநந்தமே.

ஆன்ம சுபாவம் சச்சிதானந்தம் ஆயினும் ஜடமான மண் கல் மரம் முதலியவற்றின் மூடவிருத்தியில் ஆன்மாவின் சத் மாத்திரம் தோன்றும். ரஜோ குணத்தின் விஷய ரூபமான கோரவிருத்தியில் சத்தும் சித்தும் தோன்றும் ஆநந்தம் தோன்றாது. சத்துவ குணத்தினால் திட வைராக்கியம் முதலியவற்றின் மயமான சாந்த விருத்தியில் சத் சித் ஆநந்தம் மூன்றும் தோன்றும். மனம் அஞ்ஞான மயமான மூட விருத்திகளையும், ஆசைமயமான கோர விருத்திகளையும் விட்டு விட்டு சாந்த விருத்தியைப் பெற்றால் தடையில்லாத ஆனந்தம் தோன்றும்.

★★★

## 111.

இகம்ஆன குருநாத னேசச்சி தாநந்தம் எனும்இலக்கணம்
அறிகிலேன்
அகலாத சத்தாவ தேதுசித் தாவதேது ஆநந்தம் ஏதென்றிடில்
மிகுகாலம் மூன்றும்கெ டாதிருப் பதுசத்து வேறுபாடு
அறிதல்சித்தாம்
மகிழ்காமம் நுகர்போது சுகம்ஆகும் அனுபூதி வாழ்வென்பது
ஆநந்தமே.

மானுட வடிவில் எழுந்தருளியுள்ள குருநாதா! சச்சிதாநந்தம் என்னும் இலக்கணம் எனக்குத் தெரியாது. சத் என்பது எது? சித் என்பது என்ன? ஆநந்தம் என்பது எது? என்று கேட்பாயாகில் மூன்று காலங்களிலும் அழியாமலிருப்பது சத் ஆகும். ஜடமான பொருள் களின் வேற்றுமைகளைப் (சித், ஜடம்) பிரித்து அறிவது சித் ஆகும். விரும்பிய பொருள் கிடைக்கப்பெற்று அதனை அநுபவிக்கும்போது உண்டாகும் அனுபவ சுகம் (ஆத்மாவின்) ஆனந்தம் ஆகும்.

★★★

## 112.

நாசச் சரீரத் திருக்கும் சரீரிதனை நால்வேத மாவாக்கியம்
நீசச்சி தாநந்தம் என்றிடினும் ஆசிரியர் நீ பிரமம் ஆகும்எனினும்
மாசற்ற சச்சிதா நந்தம்நான் என்னஇவன் மன்னும்
அனுபவம்எங்ஙனே
கோசப் புரங்களைஇ டித்துத் தகர்க்கும்மத குஞ்சரக் குருநாதனே.

பஞ்சகோசமாகிய மூன்று உடல்களையும் உடைத்துத் தூளாக்கிய மதயானை ஆகிய ஞான குருநாதா! அழிகின்ற உடலை நான் என்று அநுமானிக்கும் தேகியைப் பார்த்து நான்கு வேதங்களின் முடிவிலுள்ள மகாவாக்கியங்களும் நீயே சச்சிதாநந்த ஸ்வரூபமென்று சொன்னாலும், குருநாதர் 'நீயே பிரம்மம் ஆவாய்' என்று உபதேசித்தாலும்; நானே சச்சிதாநந்த வடிவ பிரம்மம் என்று உணராதிருப்பவன் அவ்வநுபவத்தை அடைவது எப்படி? என்று உரைத்தருள வேண்டுகிறேன்.

★★★

## 113.

சென்மாந்த ரம்செய்த வினைகளுடல் தரும்எனில் செல்காலம்
இவன்உண்டலோ
கன்மாநு பவம்நரக சொர்க்கமெனில் வருகின்ற காலத்தும்
இவன்உண்டலோ
உன்மாத யாதனா உடல்கடவுள் உடல்மநுட உடல்மாறி மாறிஅழியும்
தன்மாய உடல்கெடினும் இவன்இருப் பதுகொண்டு சத்தென்ப
தொக்கும்மகனே.

மகனே! முன்பிறவிகளில் செய்த நன்மைதீமைகள்தான் உடலைத் தருகிறது என்றால் சென்ற காலத்திலும் இவன் இருந்திருக்கிறான் அல்லவா? இப்போது செய்கின்ற நல்வினை தீவினைகளுக்கு ஏற்ப இனி சுவர்க்க நரகங்களை அடைவான் என்றால் எதிர்காலத்திலும் இவன் இருப்பான் அல்லவா? பாவ கர்மத்தை அநுபவிக்க யாதனா சரீரமும், புண்ணிய கர்மத்தை அநுபவிக்க தேவ சரீரமும், சுகதுக்கங் களைக் கலந்து அனுபவிக்க மானுட சரீரமும் மாறிமாறி உண்டாகி நாசமாகும். மித்தையாகிய சரீரங்கள் அழிந்தாலும் சரீரியான இவன் முக்காலங்களிலும் இருப்பதால் இவன் சத் என்று கூறுதல் பொருந்தும்.

★★★

## 114.

இருள்ஆக மூடும்சு ழுத்தியில் இராத்திரியில் இராவிசுடர்
அற்றபொழுது
மருளாமல் இருளையும் பொருளையும் தெரிகின்ற வகைகொண்டு
சித்தாகுமே
பெருவாழ்வு மிக்கதா னேதன்னி டத்தில் பேராத பிரியமதனால்
அருகாத பிரியம்சு கத்தில்வரும் ஆதலால் ஆநந்தம் ஆம்மைந்தனே.

மகனே! அந்தகாரமாக மூடிக்கொள்ளும் சுழுத்தி அவஸ்தையிலும், சந்திர, சூரிய ஒளி இல்லாதபோதும்; மயங்காமல் இருட்டையும், வஸ்துக்களையும் ஆத்மா காண்பதால் அது 'சித்' எனப்படுகிறது. பேரானந்தம் மிகுந்த தானே தன்னிடத்தில் நீங்காத பிரியம் வைத்திருப்பதனாலும்; யாவர்க்கும் குறையாத பிரியம் தமது சுகத்தில் வருவது அநுபவமாக இருப்பதனாலும் ஆத்மாவே ஆனந்தமும் ஆகும்.

★★★

## 115.

அன்னபா னாதிசுக சாதனம தாகையால் ஆர்க்கும்வெகு பிரியம் ஆகும்
இன்னவா றான்மாவும் ஆநந்த சாதனம் எனக்கருதல் பொருள் அல்லவே
சொன்னஆன் மாவைஒரு சுகசாத னங்களொடு சொல்லுவாய்
ஆகில்மகனே
உன்னது ஆநந்தம்வேறு ஏதுஅநுப விப்பதார்உபயஆன் மாவும்உளவோ.

மகனே! உண்பன, பருகுவன முதலியவை சுகத்துக்குச் சாதனமாகையால் யாவர்க்கும் அதில் மிகுந்த பிரியமுள்ளது. இவ்வாறே ஆத்மாவும் ஆநந்தத்துக்குச் சாதனம் என்று கருதுவது பொருத்தமாகாது. ஆத்ம ஸ்வரூபத்தையும் சுகசாதனமாக சொல்லுவாயாகில் உன்னுடைய ஆநந்தம் உன்னைத்தவிர வேறானதா? அதனை அநுபவிக்கும் கர்த்தா உன்னைத்தவிர வேறு யார்? ஆநந்த வடிவ ஆன்மா ஒன்று; அதனை அநுபவிக்கும் ஆன்மா ஒன்று; என்று இரண்டு ஆன்மாக்கள் உள்ளனவா? அங்ஙனமின்மையின் ஆத்மா ஆநந்த வடிவமே அன்றி அதன் சாதனமல்ல என்பதை உணர்ந்து கொள்வாயாக.

★★★

## 116.

*விடயசுக மதில்வருதல் பிரயமாத் திரம்ஆகும் வெகுபிரியம்*
*ஆன்மாவிலாம்*
*விடயசுகம் வருபிரியம் மாறிவரும் ஆன்மாவில் வெகுபிரியம்*
*மாறாதுகாண்*
*விடயசுகம் விடலும்ஆம் கொளலும்ஆம் ஆன்மாவை விடுவதெவர்*
*கொள்வதெவர்பார்*
*விடயசுக போகங்கள் விடும்அவனை அவனால் விடப்படா*
*தொருநாளுமே.*

விஷயானந்தத்தில் வரும் பிரியம் காலதேச நிமித்தங்களால் மாறிமாறி வரும்; ஆத்மாவில் வரும் பிரியம் எக்காரணத்தினாலும் மாறாதது; விஷயாநந்தத்தில் வரும் பிரியம் அற்பமானது; ஆன்மாவில் வரும் பிரியம் மகத்தானது ஆகும். அதனால் ஒரு விஷயாநந்தத்தை வெறுத்து விடுவதற்கும், மற்றொரு விஷயாநந்தத்தை விரும்பி ஏற்றுக் கொள்வதற்கும் இயலும். ஆனால் ஆன்ம சுகத்தை அவ்வாறு வெறுத்துவிட இயலுமா? அவ்வாறு வெறுத்து விட்டவன் தன்னை வெறுத்து விட இயலுமா? அது ஒருநாளும் இயலாது.

★★★

## 117.

*வேகின்ற கோபங்க ளால்என்னை நான்கொன்று விடுகிறேன் என்று*
*சிலபேர்*
*சாகின்ற படியினால் தன்னயே தான்கொன்று சாவன்எனல்*
*சங்கைஅலவே*
*தேகம்த னைக்கொல்லும் அவனால் விடப்பட்ட தேகம்அவன்*
*அல்லமகனே*
*ஆகம்த னிற்கோபம் அலதுதனை ஒருநாளும் ஆன்மாவெ*
*றுப்பதிலையே.*

மகனே! கோபதாபங்களால் என்னை நான் கொல்லுகிறேன் என்று சொல்லி தற்கொலை செய்து கொள்கிறார்கள். ஆன்மா தன்னைத் தானே கொலை செய்துகொண்டு சாகிறது என்று எண்ணுவது சரியல்ல. உடலைக் கொல்லுகின்ற அந்த மனிதனால் நீக்கப்பட்ட உடல் அந்த மனிதன் ஆகாது. தனக்கு வேறான உடலில் வெறுப்பு

வந்ததே அல்லாமல் ஆத்மாவிடம் (தன்னிடம்) வெறுப்பு வரவில்லை. அதனால் ஆத்மா ஒருபோதும் தன்னை வெறுப்பதில்லை என்பதை அறிவாயாக.

★★★

## 118.

தாகப்ப டும்பொருளி லும்மகன் பிரியமாம் தனயனிலும்
உடல்பிரியம் ஆம்
ஆகத்தி லும்பிரியம் இந்திரியம் ஆம்கரணம் அதனிலும் பிரியம்
உயிராம்
ஏகப்பி ராணனிலும் வெகுபிரியம் ஆன்மாவில் இந்தஆன்
மாமுக்கியம்
ஊகத்தி னால்கௌணம் மித்தைகர்த் தாமூன்றும் ஒரொன்றில்
அதிகம்மகனே.

மகனே! பிரியமாக சம்பாதிக்கும் தனங்களிலும் புத்திரனிடத்துள்ள பிரியம் அதிகமாகும். அப்புத்திரனிலும் உடலிலுள்ள பிரியம் அதிகமாகும். உடலினும் இந்திரியங்களிலுள்ள பிரியம் அதிகமாகும். இந்திரியங்களிலும் பிராணனிடம் பிரியம் அதிகமாம். பிராணனினும் ஆத்மாவிலுள்ள பிரியம் அதிகமாம். அதனால் ஆத்மாவே முக்கியமாகும். யுக்தி வாயிலாக பார்க்குமிடத்து கௌணான்மா, மித்தையான்மா, கர்த்தான்மா என்னும் மூன்று ஆன்மாக்களுக்குள் ஒன்றிலொன்று அதிக பிரியமாகும். (மகன் கௌணான்மா, உடல் மித்தையான்மா, ஜீவன் கர்த்தான்மா).

★★★

## 119.

கெடலான பொழுதிவன் காணிக்கு மகன்ஆன கௌண
ஆன்மாமுக்கியம்
விடலாத உடலம்ப ரிக்கும்நாள் உடல்ஆன மித்தை
ஆன்மாமுக்கியம்
திடம்ஆன நன்மைகதி வேண்டினால் கர்த்தனாம் சீவஆன்
மாமுக்கியம்
சடம்மாயும் முத்தியினில் ஞானஆன் மாஆன தானேம
காமுக்கியம்.

ஒருவர் தமது மரண காலத்தில் தம்முடைய புத்திரர் முதலியோர் நலமாக வாழ்தல் பொருட்டு தனத்தை அவர்களுக்கு உரிமையாக்குவதால் அத்தருணத்தில் புத்திரனாகிய கௌணான்மா முக்கியமாம். ஒருவன் மோட்சம் அடையும்வரையில் பல பிறவிகளில் தமது உடல் நலமாக இருக்கவேண்டி அதைக் காப்பாற்றும் பொழுது தேகமாகிய மித்தை ஆன்மா அவருக்கு முக்கியமாம். நற்கதி அடையும் பொருட்டு போகங்களைத் துறந்து தவம் புரியும்பொழுது கர்த்தாவாகிய ஜீவான்மா அவருக்கு முக்கியமாம். தத்துவ விசாரம் செய்து நாமரூப பிரபஞ்சமும், அஞ்ஞானமும் (திரிசியங்கள்) நீங்கிய மோட்சத்தில் ஞானாத்ம சொரூபமாகிய 'தானே' மிகவும் முக்கியமாம்.

★★★

## 120.

***புலியும்அது கூலம்எனில் இட்டம்ஆம் பகைசெயின் புதல்வன்***
***எனினும் வெறுப்பாம்***
***உலகில்இரு வகையும்அல் லாதபுல் ஆதியில் உதாசீனம்***
***ஆம்ஆதலால்***
***மலினம்அறு சின்மயன் பலவகையும் இப்படி மகிழ்ச்சியில்***
***விருப்பம்இகழான்***
***அலகில் ஆநந்தவடி வாகும்உன் சொரூபத்தை ஆராய்ந்து***
***பார்மைந்தனே.***

மகனே! வெறுக்கத்தக்க புலியும் அநுகூலம் செய்தால் அது எல்லோருக்கும் நட்பு ஆகும். மகனாயினும் பிரதிகூலமாக நடந்து கொண்டால் அவன் பகைவனாவான். பூமியில் விருப்பு வெறுப்புக்கு விஷயம் ஆகாத புல் முதலியவைகளில் இவனுக்கு உதாசீன புத்தி உண்டாகும். இவ்வாறு அவைகள் ஒவ்வொரு சமயத்தில் விருப்புக்கும், வெறுப்புக்கும் விஷயமாகின்றன. ஆனால் சின்மயமான ஆத்மா எவ்வகையிலும் தனது ஆத்மாநந்தத்தை இழப்பதில்லை. ஆகவே அபரிச்சின்ன ஆநந்த வடிவமாயுள்ள உனது ஆத்ம சொரூபத்தை விவேகத்தினால் பஞ்சகோசத்தினும் வேறாக ஆராய்ந்து அறிவாயாக.

★★★

## 121.

மானம்சி றந்தகுரு நாதனே ஆநந்த வகைகள்
எத்தனைஎன்னிலோ
ஞானம்தி கழ்ந்தபிர மாநந்தம் வாசனா நந்தம்விட
யாநந்தமென்று
ஆனந்தம் மூன்றுவிதம் எட்டுவகை என்பர்சிலர் அவ்வைந்தும்
இதிலடக்கம்
யான்அந்த வகைசொலக் கேள்மைந்த னேஎட்டும் இஃதின்ன
தின்னதெனவே.

பெருமைமிகுந்த குருநாதனே! ஆநந்தப் பிரிவுகள் எவ்வளவு என்று கேட்பாயாகில் பிரம்மாநந்தம், வாசநாநந்தம், விஷயாநந்தம் என ஆனந்தம் மூன்றுவிதமாகும். சிலர் இதை எட்டுவிதமாகவும் சொல்லுவார்கள். மற்றைய ஐந்தும் இம்மூன்றில் அடங்கிவிடும். எட்டுவகை ஆநந்தங்களையும்; அவற்றின் கூறுபாடுகளையும் கூறுகிறேன் அவற்றை நீ கவனமாகக் கேட்பாயாக.

★★★

## 122.

போகத்தில் வருசுகம் விடயசுகம்; நித்திரைப் போதுளது பிரமசுகமாம்;
மோகத்து அநந்தலில் சுகம்வா சனைச்சுகம்; முழுப்பிரியம் ஆன்மசுகம்;
யோகத்தில் உளதுமுக் கியசுகம்; உதாசீனம் உற்றசுகம் நிச சுகமதாம்;
ஏகத்தை நோக்கல்அத் துவிதசுகம் வாக்கியம் எழுந்தசுகம் ஞானசுகமே.

1) விரும்பிய பொருள்களை அடைந்து அனுபவிக்கும்போது அடையும் ஆநந்தம் விஷயானந்தம், 2) சுழுத்தி அவஸ்தையில் அனுபவிக்கும் ஆநந்தம் பிரம்மாநந்தம், 3) மயக்கமாகிய நித்திரைத் தெளிந்து வரும் சமயத்தில் அநுபவிப்பது வாசநாநந்தம், 4) பிரிய வஸ்துக்குள் நானே மிகவும் பிரியமானவன் என்று விவேகத்தால் அறியும்போது தோன்றுவது ஆத்மாநந்தம், 5) சமாதியிலுள்ள சுகம் முக்கியாநந்தம், 6) விருப்பு வெறுப்பற்ற உதாசீன காலத்தில் தோன்றும் ஆனந்தம் நிஜானந்தம், 7) நாமரூபங்கள் மித்தை என்று உணர்ந்து அவற்றை நீக்கி விவேகத்தால் தன்னை அத்வைதமாக நோக்கும்போது தோன்றும் ஆநந்தம் அத்வைதாநந்தம், 8) தத்துவமசி

மகாவாக்கிய விசார ஞானத்தால் அந்தக்கரண விருத்தியில் பிரதிபிம்பிக்கும் ஆநந்தம் வித்யாநந்தம் எனப்படும். (பிரம்மாநந்தத்தில் ஆத்மாநந்தமும், முக்கியாநந்தமும், நிசாநந்தமும், அத்துவிதாநந்தமும், ஞானாநந்தமும் அடங்கும் என்பர்).

★★★

## 123.

இவ்வாறு உரைசெய்யும் சுகபே தங்களின் இயல்பாம்
அவைசொல மகனேகேள்
ஒவ்வா நனவினில் உழல்வான் இடர்கெட உறங்கும் சயனமது
உறுநேரம்
செவ்வா மனம்அக முகமாம் அதில்ஒளிர் சித்தின் சுகநிழல்
சேருங்காண்
அவ்வாறு இவன்உள மகிழ்வாம் அநுபவம் அதுதான் விஷய
சுகாநந்தம்.

மகனே! இவ்வண்ணம் சொல்லிய பலவகை ஆநந்த வேறுபாடுகளின் இயல்பான தன்மைகளைச் சொல்கிறேன்; கவனமாகக் கேள். ஜாக்கிரதாவஸ்தையில் அநுகூலப் பொருள்களை நாடி அலைந்தவன் அலைச்சலின் துன்பம் நீங்கும் பொருட்டு தூங்குகிறான். அப்போது அவனுடைய மனோவிருத்தி முழுமையாக அந்தர்முகமாகும். அப்போது அம்மனதில் ஆத்மாநந்தம் பிரதிபிம்பிக்கும். அப்போது இவனது மனமானது ஆநந்தமாக விளங்கும். அவ்வநுபவம் விஷயாநந்தம் எனப்படுகிறது. (அதுபோல விரும்பிய பொருளை அநுபவிக்கும் போது மனோவிருத்தி அகமுகமாகும்).

★★★

## 124.

ஈனம் தருசுக விடயம் திரிபுடி இடராம் எனமனம் அசையாமல்
சேனம் தனதுகு லாயம் தனில்விழு செயல்போல் நித்திரை செறிசீவன்
தான்அந் தம்இல்பர னுடன்ஒன் றுவன்ஒரு தனைஅல் லதுபிற
நினையாமல்
ஆநந் தமயனும் ஆவன் சுகம்மிகும் அதுதான் உயர்பிர மாநந்தம்.

விஷய சுகமானது திரிபுடியான (அறிபவன், அறிவு, அறிபொருள்) துன்பம் என்று கருதி அது தீர்தற் பொருட்டு பருந்தானது தனது கூட்டில் அடங்கி இருப்பதைப்போல, நித்திரை செய்கின்ற ஜீவன், அழிவற்ற பிரம்மத்தோடு ஐக்கியமாவான். அத்வைதமான தன்னை அன்றி வேறு கருதாமல் ஆநந்த மயமாவான். சுழுத்தியிலுள்ள அந்த ஆநந்தம் பிரம்மாநந்தம் எனப்படும்.

★★★

## 125.

தூங்கும் சுகமது பிரமச் சுகம்எனல் சுருதிப் பொருள்விழி

துயில்வோர்கள்

தாங்கும் மலர்அணை நன்றுஆ கச்சிலர் சம்பாதிப்பது தான்யூகம்

தீங்கும் நன்மையும் ஆண்பெண் முறைமையும் தெரியாது

அமளிசெய் பொழுதேபோல்

ஆங்குள் வெளிகளும் அறியா அநுபவம் அதனால் அதுபிர மாநந்தம்.

சுழுத்தியில் ஜீவன் அடையும் ஆனந்தம் பிரம்மாநந்தம் என்று கொள்வது வேதமுடிவான மகாவாக்கியப் பொருள் ஆகும். நித்திரை செய்பவர்களில் சிலர் மலரணையில் உறங்குவது ஸ்தான சுகம் எனப்படும். அப்பொழுது நன்மை தீமை, ஆண் பெண் என்கிற முறைமை அறியாமல் சுகமாய் உறங்குவர். அதுபோல அகம்புறம் தெரியாத சுழுத்தி நிலையில் ஆனந்தம் அனுபவிப்பது (அறிதுயில்) பிரம்மாநந்தம் எனப்படும்.

★★★

## 126.

உதவும் புவியினில் ஒருவன் அநுபவம் ஒருவன் மனதினில் உதியாதே

மதியும் கெடுகிற துயில் கொண்டு ஆநந்த மயன்அன் றோசுகம்

உறுகின்றான்

இதுவிஞ் ஞானமயனாம் சிந்தையில் நினைவாய் வந்திடல் அழகன்றே

சுதைவிண் ணோர்புகழ் குருவே நீரிது சொல்லீர் சகலமும் வல்லீரே.

அனைத்து சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்து தேவர்கள் போற்றும் நாதரே! ஒருவனது அனுபவம் அவனுக்கன்றி மற்றொருவனது மனதில் நினைவு வடிவமாக உண்டாகாதென்பது நியமம் அல்லவா? மனோமய கோசத்தோடு விஞ்ஞானமய கோசமும் நாசமாகின்ற யோக நித்திரையின் பரம சுகத்தை ஆனந்தமய கோசத்திலுள்ளவனல்லவா அனுபவிக்கிறான். இவ்வநுபவம் விஞ்ஞானமயமான ஜீவனின் மனதில் நினைவாக வரும் என்பது எவ்வாறு பொருந்தும்? சுழூத்தியில் பிராக்ஞன் அனுபவித்த ஆனந்தம் சாக்கிரத்தில் விசுவனுக்கு எவ்வாறு தோன்றும்? எனச் சீடன் வினவுகிறான்.

★★★

## 127.

*நெய்யும் வெண்ணெயும் இருபேர் களும்அறி நினைவில்*
*பிறிவறிவினில் இல்லை*
*செய்யும் நனவினில் இறுகும் மனத்தொடு சேரும் சின்மய*
*விஞ்ஞானன்*
*நையும் துயர்மனம் நழுவும் பொழுதுணர் ஞானச் சுகம்உணும்*
*ஆனந்தன்*
*பெய்யும் துளிகளும் நீரும் குளமொடு பாகும் போல்இவர்*
*பிரிவன்றே.*

நெய்யும் வெண்ணெயும் உருகி இருத்தல், உருகாதிருத்தல்தான் வேறுபாடு. பொருள் ஒன்றுதான். அதுபோல ஆனந்தமயன், விஞ்ஞானமயன் என்னும் பெயர்களில்தான் வேறுபாடே தவிர (அவித்தை, அந்தக்கரண உபாதிகளால்) இரண்டிலும் உள்ள அறிவு ஒன்றேதான். வியவகாரங்களைச் செய்யும் சாக்கிரத்தில் மனம் முதலியவற்றோடு கூடியிருக்கும் விஞ்ஞானமயன், மனம் ஒடுங்கிய சுழூத்தி நிலையில் ஆனந்தத்தை அனுபவிக்கும் ஆனந்தமயன் ஆவான். இது மேகம் பொழியும் மழைநீரும், குளத்து நீரும் ஒன்று என்பது போலவும், வெல்லமும், பாகும் ஒன்று என்பதுபோலவும், ஆனந்தமயன், விஞ்ஞானமயன் என்போர் வெவ்வேறல்லர். (ஆனந்தமயனின் அனுபவம் விஞ்ஞானமயனுக்கும் தோன்றும்).

★★★

## 128.

ஒன்றாகியபிர மாநந்தச்சுகம் ஒழிவான் ஏன்வெளி வருவான்ஏன்
என்றால் முன்செய்தகருமம் வெளியினில் இழுக்கும்
சுழுத்திவிட்டு எழுந்தோனும்
நன்றுஆயின சுகம்அகலான் வெளியிலும் நடவான் மறதியும்
பெறமாட்டான்
அன்றுஆம் எனஇருந்து உறங்கும் சிலகணம் அதுவே வாதனை
ஆநந்தம்.

ஆநந்தமயமான ஜீவன் ஏகமாகிய பிரமாநந்த சுகத்தைவிட்டு ஜாக்கிரத அவஸ்தைக்கு வரக்காரணம் என்ன? என்று கேட்பாயாகில் ஜீவன் பூர்வத்தில் செய்த கர்மமானது அவனை வெளியில் கொண்டு வரும். அவன் சுழுத்தி நிலையிலிருந்து நீங்கிய பின்னரும் சிறிதுநேரம் பிரம்மானந்த அனுபவம் நீங்காது இருப்பான். அதனால்தான் புறத்தே மனம் செல்லாதவனாயும், அகத்தே அனுபவித்த ஆனந்தத்தை மறவாதவனாயும் இருப்பான். இதனால் சுழுத்தி சாக்கிரம் இரண்டுக்கும் நடுபட்டநிலையில் சிறிது பொழுது உறங்குவான் அப்போது தோன்றுவது வாசனானந்தம்.

★★★

## 129.

அந்தக் கணம்உடல் அகம்என்று இடர்களில் அலைந்தேசுகந்தனை
மறந்தேபோம்
முந்தைச் செயும்வினை சுகதுக்கம்தரும் மோனம் உருநடு
வடிவில் காண்
எந்தப் புருடனும் ஒருசிந் தையும் அற இருந்தேன் எனல்அநு
பவம்ஆகும்
இந்தப் படிதன் உதாசி னச்சுகம் இதுவே நிசம்எனும் ஆநந்தம்.

சுழுத்தி அவஸ்தையிலிருந்து நீங்கி உடலை நான் என்று நினைத்த அப்போதே ஆத்மா ஆநந்தத்தை மறந்துவிடும். முன்செய்துள்ள கர்ம பலனானது இன்பத்தையோ துன்பத்தையோ கொடுக்கும். இந்த சுகதுக்கங்களுக்கு இடையில் எப்படிப்பட்டவனுக்கும் நான் யாதொரு நினைப்பும் இன்றி, இருந்தேன் என்று கூறும் உதாசீன நிலை உண்டாகும். நான் ஒரு சிந்தனையுமின்றிச் சும்மா இருந்தேன் என்று கூறும் உதாசீன காலத்தில் உண்டான ஆநந்தம் நிஜானந்தம் எனப்படும்.

## 130.

*நிசம்ஆ னதுமுக் கியமோ குடத்துள நீர்அன் றேவெளி ஈரம்தான்*
*வசமா அகங்காரம் மறைந்தால் நிசமது படிந்தால் முக்கிய*
*வகையாகும்*
*திசைஆர் திரிசயம் அறியா தேதுயில் செறியாதே உடல் தறிபோல*
*அசையா தேமதி சமம் ஆகியநிலை அதுதான் முக்கிய ஆனந்தம்.*

இந்த நிஜானந்தம் முக்கியாநந்தம் ஆகாது. ஏனெனில் குடத்திலிருக்கும் நீர்தான் வெளியிலுள்ள குளிர்ச்சி, அது நீராகாது. அகங்காரம் நீங்கினால் (சமாதியோக அப்பியாசத்தால்) முக்கிய நிஜாநந்தம் தோன்றும். அகங்காரமானது விஷயங்களை அறியாமலும், நித்திரையை அடையாமலும், உடல் கட்டையைப்போல அசையாமலும் அறிவானது சமமாக நிற்கும்போது உணரப்படும் ஆநந்தம் முக்கியாநந்தம்.

★★★

## 131.

*மனுடன் மனுடகந் தருவன் தேவநன் மாகந் தருவன்ஒண் பிதிரோடோ*
*பனுமா ஜானர்கள் கருமத் தேவர் பகர்முக் கியர்இந் திரன்ஆசான்*
*கனம்ஆர் பிரஜா பதிஎன் விராட்டுபொன் கர்ப்பப் பிரமன்என்று*
*இன்னோர்கள்*
*பினஆ னந்தங்கள் நுரைஆம் பிரளய வெள்ளக் கடல்பிர மானந்தம்.*

மானுடன், மானுடகந்தர்வன், தேவகந்தர்வன், பிதிரர், ஆஜானதேவர், கருமத்தேவர், யமன், அக்னி போன்ற முக்கியத் தேவர், இந்திரன், பிரகஸ்பதி, பிரஜாபதி (விராட்) இரண்யகர்ப்பன் (பிருமன்) ஆகிய இவர்கள் அனுபவிக்கும் ஆனந்தங்கள் ஒருவரைவிட அடுத்தவர் ஆநந்தம் நூறு மடங்கு அதிகம். (மானுட ஆநந்தத்தைவிட மானுட கந்தர்வனின் ஆநந்தம் நூறு மடங்கு அதிகம்) பிரம்மாநந்தம் என்னும் பிரளய காலத்துப் பெருங்கடலில் இவைகள் நுரை திரை போல்வனவாம். (நிரதிசயாநந்தம் என்னும் பிரளய காலப் பெருங்கடலில் எட்டுவித ஆநந்தங்களாகிய நீரில் மானுட ஆநந்தம் முதல் பிரமதேவன் வரையுள்ள பதினொருவரின் ஆநந்தங்களும் அலை நுரை போன்றவையாம்.

★★★

## 132.

எவன்ஆ கிலும்இந்தத் துரியா தீதத்தில் ஏழாம் பூமியில் இருந்தானேல்

அவன்நா ரதன்சுகன் சிவன்மால் அயன்முதல் அறிவோர்

அநுபவசுகபோதன்

இதுவே விவகார அதிர்சயம் இதுவே அநுபவம் எனமுன் சொல்லிய

விவகாரி

உவமா னமும்அறி மகனே அவன்அடி உதிரும் பொடிகள் என்

முடிமேலே.

அன்புள்ள மகனே! யாராக இருப்பினும் இந்த துரியாதீதம் என்னும் ஏழாம் ஞானபூமியில் இருப்பானாகில், அந்த மகாபுருஷன் அரன், அரி, அயன் என்னும் மும்மூர்த்திகளுக்கும்; நாரதர், சுகர் முதலிய ரிஷிகளுக்கும் உள்ள சுவாநுபவமாகிய அறிவாநந்த வடிவினன் ஆவான். வியவகாரங்களில் திருசிய திருஷ்டி இல்லாத சச்சிதானந்த வடிவாய் இருக்கும் இந்த நிலையே முக்கிய நிஜாநந்தனுபவம். முன்னர் கூறப்பட்டவர்கள் இதற்கு உவமானம் ஆவார்கள் என்று அறிந்து கொள். அந்த அநுபவியினுடைய திருவடிகளினின்றும் உதிர்கின்ற பாததூளிகள் என் சிரசின் மீது தரிக்கத்தக்கனவாம்.

★★★

## 133.

இந்தவாறு ஐந்துசுகம் சொல்லினோம் வித்தைசுகம் இனிமேல்

சொல்வோம்

முந்தமா யையும்சச்சி தாநந்தப் பொருளுமே மொழியும் போதில்

அந்தம்ஆம் அத்துவித சுகம்ஆன்ம சுகம்இரண்டும் அங்கே

சொன்னோம்

தொந்தமாற் றியமகனே இன்னம்உனக் கையம் உண்டேல்

சொல்லுவாயே.

சுகதுக்காதி இருமைகளினின்றும் நீங்கிய மகனே! இவ்விதம் விஷயாநந்தம் பிரம்மாநந்தம் வாசநாநந்தம், நிஜாநந்தம், முக்கியாநந்தம்

என்னும் ஐந்துவித ஆநந்தங்களைக் கூறினோம். வித்யாநந்தத்தை இனிமேல் கூறுகிறோம். முன்பு மாயையின் இலக்கணத்தையும், சச்சிதாநந்தங்களுக்குப் பொருளும் கூறியபோது வேத முடிவான அத்துவிதாநந்தம், ஆத்மாநந்தம் ஆகிய இரண்டு ஆனந்தங்களையும் அவ்விடத்தில் கூறினோம். இன்னமும் உனக்கு ஐயமிருப்பின் அதனைக் கேட்பாயாக.

★★★

## 134.

*குகன்தனையும் எனையும்உல கினையும்ஈன் றளித்தருளும்*
*குருவே கேளீர்*
*புகன்றசச்சி தானந்தப் பதங்கள்தனித் தனிஆகிப் பொருள்*
*வேறானால்*
*உகண்டமனம் உறைப்பதெங்ஙன் பரியாய பதங்களைப்போல*
*உறவுகாணேன்*
*அகண்டமாய் ஒருசுவையாய்த் தேனிக்கூட்டிய மதுவாய்*
*அறிவிப்பீரே.*

குமரனையும், என்னையும், உலகங்களையும் (சக,சீவ,பரம்) சிருஷ்டித்து, ரக்ஷித்து அருளுகின்ற குருவே! அடியேன் விண்ணப்பத்தைக் கேட்டருளல் வேண்டும். முன்கூறிய ஆன்மவடிவம் சத்துசித்து ஆநந்தம் எனக்கூறினீர்கள். மூன்று பதங்களும் வெவ்வேறாகி அவைகளின் பொருளும் வேறுபடுமாகில், ஒரு விஷயத்திலிருந்து மற்றொரு விஷயத்துக்குத் தாவிச்சென்று கலங்கும் என் மனமானது ஆன்ம சொரூபத்தில் பிறழாதிருப்பது எவ்வாறு? ஒரே பொருளைக் குறிக்கும் பரியாய பதங்களைப் போல அவை ஏக அர்த்தத்தைப் போதிப்பனவா? என்பதை நான் அறியாதிருக்கிறேன். ஆதலால் அவற்றின் பொருளை ஏகமாகவும்; ஒரே சுவையாகவும் தேனிக்களால் சேகரிக்கப்பட்ட தேனைப்போல தெரிவித்தருளுவீராக.

★★★

## 135.

குளிர்இளகல் வெண்மைஎன்ற பதங்களினால் நீர் மூன்று
கூறுஆயிற்றோ
ஒளிவதனம் செம்மைஎன்ற பதங்களால் அக்னியும் இருமூன்று
ஆமோ
வெளிமுதலாம் சகம் அசத்து மூடம்இடர் எனப்பிரித்து
விலக்கிவேதம்
எளிதுஅறிய முரண்மொழிந்த சத்தாதி எனும்பிரமம்
ஏகம்தானே.

மகனே! குளிர்ச்சி, நெகிழ்ச்சி, வெள்ளை என்று சொல்லிய சொற்களால் தண்ணீர் மூன்று பொருள்கள் ஆகாது. பிரகாசம், உஷ்ணம், சிவப்பு என்று சொல்லிய சொற்களால் நெருப்பு மூன்று பொருள்கள் ஆகாது. அதுபோல ஆகாயம், காற்று, தீ, நீர், மண் முதலான உலகத்தை அசத்து என்றும், ஜடம் என்றும், துக்கம் என்றும் வேறுபடுத்திக் கூறிய வேதமானது பக்குவிகள் ஆத்மாவை எளிதில் உணர்ந்துகொள்ள அவைகளுக்கு மாறாகச் சொன்ன சத்சித் ஆநந்தம் என்னும் பிரம்மம் ஒன்றுதான். (ஆத்மா, மாயாப் பிரபஞ்சத்தின் அசத்தினது நோக்கத்தால் 'சத்' என்றும்; சடத்தினது நோக்கத்தால் 'சித்' என்றும்; துக்கத்தினது நோக்கத்தால் 'ஆநந்தம்' என்றும் சொல்லப்படுகிறது.

★★★

## 136.

நித்தியம் பூரணம்ஏகம் பரமார்த்தம் பரப்பிரம்மம் நிதாநம் சாந்தம்
சத்தியம் கேவலம் துரியம் சமம்திருக்குக் கூடத்தன் சாட்சி போதம்
சுத்தம் இலக் கியம்சநா தநம்சிவன் தத்துவம்விண் சோதிஆன்மா
முத்தம்விபு சூக்குமம் என்றிவ்வண்ணம் விதிகுணங்கள்
மொழியும்வேதம்.

நித்தியம் = உற்பத்தி நாசமற்றது. பூரணம் = எங்கும் நிறைந்தது ஏகம் = சஜாதீய, விஜாதீய, ஸ்வகத பேதமற்றது. பரமார்த்தம் = உண்மையானது. பரப்பிரம்மம் = ஞான வடிவமானது. நிதானம் = நாமரூபமாகிய அனைத்துக்கும் அதிட்டானமானது. சாந்தம் = எப்போதும் ஒரே தன்மையானது. சத்தியம் = காரிய காரணம் அற்றது.

கேவலம் = மோட்ச வடிவமானது. துரியம் = மூன்று அவஸ்தை களுக்கும் சாட்சி. சமம் = விவகாரம் ஏதுமற்றது. திருக்கு = திருசிய மெல்லாம் அறிவது. கூடஸ்தன் = கொல்லன் பட்டறை அடைக்கல் போல விகாரமடையாதது. சாட்சி = சர்வ பதார்த்தம் அறிவது. போதம் = அறிவு வடிவமானது. சுத்தம் = அசுத்தம் அற்றது. இலக்கியம் = இலக்ஷண விருத்தியால் அறிவது. சனாதனம் = எப்போதும் ஒரே வடிவானது. சீவன் = சரீர அபிமானி. தத்துவம் = தற்பதம், தொம் பதங்களால் உணர்வது. விண் = ஆகாசம் போல பிளவு படாது வியாபித்துள்ள சோதி = சுயம் பிரகாசமானது. ஆன்மா = அன்னியமற்ற ஆனந்த வடிவம். முத்தம் = பந்தமற்றது. விபு = எங்கும் வியாவித்திப்பது. சூக்குமம் = காண்பதற்கு அரிது. இவ்விதம் வேதம் ஆத்மாவின் விதி குணங்களை உடன்பாடு வாயிலாகக் கூறுகிறது.

★★★

## 137.

***அசலம்நிரஞ் சநம்அமிர்தம் அப்ரமே யம்விமலம் வசநா தீதம்***
***அசடம் அநாமயம் அசங்கம் அதுலம்நிரந் தரம் அகோசரம் அகண்டம்***
***அசம் அநந்தம் அவிநாசி நிர்குணம் நிட்களம் நிரவயம் அநாதி***
***அசரீரம் அவிகாரம் அத்துவிதம் எனவிலக்காம் அநேகம் உண்டே.***

அசலம் = சலனம் அற்றது. நிரஞ்சனம் = மலின சுபாவமற்றது. அமிர்தம் = மரணமற்றது. அப்பிரமேயம் = கண்ணால் காண முடியாதது. விமலம் = மலமற்றது. வாசனாதீதம் = வாக்கிற்கு எட்டாதது. அசடம் = சடம் ஆகாதது. அநாமயம் = நோய், கவலை அற்றது. நிரந்தரம் = இடைவெளி அற்றது. அகோசரம் = பிரமாணத்திற்கு விஷயமாகாதது. அகண்டம் = கண்டமற்றது (பின்னமற்றது). அஜம் = பிறப்பற்றது. அனந்தம் = முடிவு அற்றது. அவிநாசி = நாசமற்றது. நிர்குணம் = குணமற்றது. நிட்களம் = உருவமற்றது. நிரவயம் = அவயவம் அற்றது. அநாதி = உற்பத்தி அற்றது. அசரீரம் = சரீரம் அற்றது. அவிகாரம் = அறுவகை விகாரம் அற்றது. அத்துவிதம் = துவிதமற்றது (இரண்டற்றது). இவ்வாறு அளவிறந்த விலக்கு நாமங்கள் பிரம்மத்திற்கு உண்டு.

(ஒன்றை மற்றவற்றினின்றும் வேறு பிரித்து அறிவிப்பதற்கு ஏதுவாக இருப்பது 'விசேஷணம்' எனப்படும். உடன்பாட்டு வாயிலாக கூறும் விசேஷணம் விதிமுக விசேஷணம் எனப்படும். எதிர்மறை வாயிலாக கூறும் விசேஷணம் விலக்குமுக (நிசேதம்) விசேஷணம் எனப்படும்).

## 138.

இன்னவகை விதிவிலக்குக் குணங்கள் நன்றாய்ச் சேர்த்தொருமித்
தெல்லாம்கூடி
சொன்னபொருள் ஒன்றன்றி இரண்டில்லை ஒரு பொருளைச்
சொல்லும் சொற்கள்
பின்னபதம் ஆம்அதனால் சத்தாதி குணப் பொருளாம் பிரமம்ஏகம்
அன்னபொருள் ஒருமை அறிந்து அகண்டபரி பூரணமாய் ஆவாய்
நீயே.

இவ்வாறு வேதம் கூறிய விதிமுக, விலக்குமுக (நிசேதம்) குணங்கள் யாவும் நன்றாகச் சேர்ந்து ஒன்றுபட்டு அனைத்தும் கூடி கூறிய பொருள் ஒன்றே அன்றி இரண்டல்ல; ஒரே வஸ்துவை கூறும் வெவ்வேறு சொற்களாகும். ஆதலினால் சத்து சித்து ஆநந்தம் என்ற குண சொற்களுக்கு பொருள் பிரம்மம் ஒன்றுதான். அத்தகையதான பொருளின் ஒருமையை அறிந்து நீ அகண்ட பரிபூரண சொரூபமாயிருப்பாயாக.

★★★

## 139.

நிற்குணவத் துவின் குணங்கள் உரைப்பதுதாய் மலடிஎனல்
நிகர்என்னாதே
சற்குணனே வத்துநிலை உரையாமல் அறியவல்ல சதுரர்
உண்டோ
நற்குணவே தங்கள் இந்தச் சீவன்முத்தி பெறப்பிரமஞானம்
தோன்றச்
சொற்குணங்கள் பிரமத்தின் குணங்களன்று பிரமம்ஆம்
சொரூபம்தானே.

சற்குணனே! குணங்களற்ற பிரம்மத்திற்கு 'சத்தியம் ஞானம் அனந்தம் பிரம்மம்' என்று இத்தன்மையான நாமங்களைச் சொல்வது தாய் மலடி என்று கூறுவதற்கு நிகராக முன்னுக்குப் பின் முரணானது என்று எண்ணாதே. ஒரு பொருளை குருநாதர் சொல்லாமல் தானே தெரிந்துகொள்ளும் சீடர்கள் யாருமில்லை. அதனால் நற்குணமுடைய வேதங்கள், இந்த ஜீவன் முக்தி அடையவும் பிரம்மஞானம் உதிக்கவும் கூறிய சத்தியம் முதலான குணங்கள் பிரமத்தின் குணங்களல்ல. அதன் பொருள் பிரம்ம சொரூபமே ஆகும்.

## 140.

*மோகஇருள் கெடக்கோடி அருணன் எனவருகுருவே மொழியக் கேளீர்*
*ஏகபரி பூரணம்ஆம் என்சொரூபம் என்உளத்தில் இறுகும்வண்ணம்*
*ஆகமங்கள் சொன்னபடி என்னைஅகண் டார்த்தமா அறிந்தேன்ஐயா*
*ஊகமொத் திடஉரைத்தால் பசுமரத்தில் ஆணிபோல் உறைக்கும்*
*நெஞ்சே.*

மோக அந்தகாரம் நீங்க கோடி சூரியர்கள் உதயமானதுபோல எழுந்தருளியுள்ள குருநாதா! அடியேன் விண்ணப்பத்தைக் கருணைக் கூர்ந்து கேட்டருளல் வேண்டும். ஒன்றான பூரண சொரூபமாகிய எனது பிரம்ம சொரூபம் என் இதயத்தில் பதியுமாறு சுருதிகள் சொல்லியபடி எனது நிஜவடிவை அகண்ட அறிவு ஆனந்த வடிவமாய் அறிந்தேன் பெருமானே! தேவரீர் சச்சிதாநந்தங்கள் ஏகரசம் என்பதற்கு யுக்தியும் பொருந்துமாறு அருளிச் செய்தால், என் மனம் பச்சை மரத்திலறையும் ஆணியைப் போல் ஸ்திரப்படும்.

★★★

## 141.

*சத்தேசித் தாகும்அயல் எனில்அசத்தாம் அசத்தானால் சாட்சிஎங்கே*
*சித்தேசத் தாகும்அயல் எனில்சடம்ஆம் சடங்குகளுக்குத்*
*திதியும்இல்லை*
*ஒத்தேதோன் றியசத்தும் சித்தும் நல்லசுகம் ஆகும் ஊகத்துக்கோர்*
*வித்தே அன்னியம் ஆகில்சடம் அசத்தாம் சுகாநுபவம் விளைந்திடாதே.*

சத்தாக விளங்குவதே சித்தாகும். சத்துக்குச் சித்து வேறென்றால் அப்போது சத்து இல்லாததாகிவிடும். அதனால் நடுநிலையாய் இருந்து அறியும் சாட்சி என்பது பொருந்தாது. அதனால் சித்தாயிருப்பதே சத்து ஆகும். சித்துக்கு சத்து வேறு என்றால் ஜடம் ஆகிவிடும். திரிசயங் களுக்கு விளங்கும் தன்மை இல்லையாகிவிடும். அதனால் முக்காலங் களிலும் தெளிவாக விளங்கும் சத்தும் சித்தும் பரிபூரணாநந்தம் ஆகும். சத்திற்கும் சித்திற்கும் ஆநந்தம் வேறுபட்டதென்றால் அப்போது ஆநந்தத்திற்கு இருப்பும் விளக்கமும் இல்லாமல் அது அசத்தும் ஜடமுமாகி விடும். அசத்து ஜடங்களால் சுகாநுபவம் உண்டாகாது. அதனால் சத்தும் சித்துமே ஆநந்தமாகும். சச்சிதாநந்தங்களின் ஒருமையை ஆராய்ந்து அறிவதற்கு இவ்யுக்தியே தலையாய யுக்தி ஆகும்.

## 142.

**வியாத சத்துமுன்னம் விளங்குவது தன்னாலோ வேறொன் றாலோ**
**வாயால்வே றெனில் அதுவும் அசத்தோசத்தோ அசத்தேல்**
**மலடிமைந்தன்**
**பேயாகா ரியம் செயுமோ அசத்தெனஇப் படிஅதையும் பிரித்துச்**
**சொன்னால்**
**ஓயாத அவத்தையாம் குதர்க்கவிகற் பங்களைவிட் டொழித்தி டாயே.**

முக்காலங்களிலும் மாறுதல் அடையாத சத்து விளங்குவது தன்னாலேயோ? மற்றொன்றாலேயோ? வேறு ஒன்றால் என்றால் அதுவும் இருப்பதா? இல்லாததா? இல்லாதது (அசத்) என்றால் மலடி மகன் செயல் புரிவானா? (அசத்தால் சத்தை விளக்க முடியாது). அச்செயல்களையும் இங்ஙனம் அசத்து என்று பிரித்துச் சொன்னால் அது வரம்பின்றி சுற்றிக்கொண்டே இருக்கும் அநவஸ்தா தோஷமாகும். குதர்க்கமாகிய வேறுபாடுகளை விட்டு நீங்குவாயாக.

★★★

## 143.

**சுருதியுத்தி ஒத்ததுபோல் அநுபவமும் கேள்சுழுத்திச் சுகஆநந்தம்**
**மிகுதிவடி வாதலால் இவ் வாந்தமே அறிவாம் வேறங்கில்லை**
**கருது பிரளயம் சுழுத்தி இரண்டிலும்நீ இருந்துஇருளைக்**
**காண்கிறாயே**
**இருதயத் திப்படி நோக்கி ஏகபரி பூரணமாய் இருந்திடாயே.**

மகனே! சுருதியும் யுக்தியும் பொருந்தியிருப்பதுபோல அனுபவமும் ஒத்திருப்பதைக் கூறுகிறேன். சுழுத்தியில் அனுபவித்த ஆனந்தத்தை அப்போதே அறியாது விழித்தபின் நினைத்து அறிவதால் அதுவே அறிவு ஆகும். அங்கு ஆனந்தம் தவிர வேறு ஒன்றும் இல்லை. ஆதலால் அந்த ஆனந்தமே ஞானமாகும். பிரளயம் சுழுத்தி என்னும் இரண்டு அவஸ்தைகளிலும் நீ சத்தாக இருந்து அந்த இருளை அறிகின்றாய் அல்லவா? அதனால் உனது நிச வடிவம் சச்சிதானந்த வடிவம் ஆகும். இதை புத்தியால் ஊகித்தறிந்து ஒன்றேயான அகண்ட பரிபூரண சச்சிதானந்த வடிவமாய் இருப்பாயாக.

★★★

## 144.

*பலகலையும் உணர்ந்தகுரு மொழிந்தபடி இவனும் அநுபவம் விடாமல்*
*பலமலரின் மதுப்போலச் சச்சிதா நந்தம்ஒன்றாம் பரமார்த்தத்தைப்*
*பலபொழுதும் கண்மூடிச் சமாதியிருந்தான் விழித்துப் பார்த்தபோது*
*பலவடிவாம் சராசரசித் திரங்களெல்லாம் தோன்றும் ஒருபடம்*
*ஆனானே.*

சகல சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்த குருநாதர் அனுகிரகித்த வண்ணம் இச்சீடனும் அநுபவத்தை விட்டு நீங்காமல் பல மலர் களினின்றும் தேனீக்கள் எடுத்த தேன் ஒருமித்ததுபோல ஏகரசமான சச்சிதாநந்தமென்னும் பிரம்மப் பொருளை எப்போதும் ஊனக் கண்ணை மூடி ஸ்வரூப சமாதியில் இருந்தான். கர்மவசத்தால் சமாதியினின்றும் விழித்துத் தன்னைப் பார்த்தபோது நாநாவித உருவங்களான தாவர ஜங்கமமாகிய சித்திரங்களனைத்தும் அகண்ட சச்சிதாநந்தப் பிரம்மமாகத் தோன்றுகின்ற ஒரு சித்திரப் படமாக விளங்கினான்.

★★★

## 145.

*இதயம் ஒத்தசற்குருவே நமக்கிதுவே விநோதம் அன்றி*
*இனிவேறுண்டோ*
*அதை உரைத்தும் அதை நினைத்தும் இருப்பதன்றோ*
*ஞானிகளுக்கான நீதி*
*முதல்உரைத்த துரியாதீ தமும்ஏழாம் பூமியும்முக் கியமாம் என்ற*
*பதமும் அதன் வகையும்எனக் கெளிதாகத் தெரியும்வண்ணம்*
*பணித்திடீரே.*

அவ்வாறு விளங்கிய சீடன் வியப்பும் அன்பும் மேலிட குருவை நோக்கி எனது மனதுக்கினிய குருமூர்த்தியே! நமக்கு இவ்விசாரமே லீலை அல்லாமல் இனி வேறு ஒன்றும் உண்டோ? அந்தப் பிரமத்தை வாக்கினால் பேசியும், மனத்தினால் தியானித்தும் இருப்பதல்லவா ஞானிகளுக்குரிய நியதி. தேவரீர் முன்னர் கூறிய துரியாதீதமும், ஏழாம் பூமியும் முக்கியம் என்று அருளிச் செய்தீர். அதன் விவரங்களை அடியேனுக்கு எளிதாகப் புரிந்து கொள்ளும்வண்ணம் கூறியருளல் வேண்டும்.

★★★

## 146.

வினவுமிடத் தஞ்ஞான பூமிகள்ஏழ் ஞானபூ மிகள்ஏழ் என்பார்
இனிஅவற்றுள் அஞ்ஞான பூமிகள்ஏ ழையும்முந்தி
இயம்பக்கேளாய்
தனிவித்துச் சாக்கிரம்சாக் கிரம்மகா சாக்கிரம்சாக் கிரத்தைச் சார்ந்த
கனவுகனாக் கனவுசாக் கிரம்சுழுத்தி என்றெழுபேர் கணித்தோர்
மேலோர்.

மகனே! அஞ்ஞான பூமிகள் ஏழு, ஞானபூமிகள் ஏழு என்று அறிஞர்கள் கூறுவார்கள். இப்பொழுது அவற்றுள் அஞ்ஞான பூமிகள் ஏழினை முன்பு சொல்லுகிறோம் கேட்பாயாக. 1) தனிமையான வித்து (பீஜஜாக்கிரம்), 2) நனவு (ஜாக்கிரம்), 3) மகாநனவு (மகாசாக்கிரம்), 4) நனாக்கனவு (ஜாக்கிர சொப்பனம்), 5) கனவு (சொப்பனம்), 6) கனா நனவு (சொப்பன ஜாக்கிதம்), 7) சுழுத்தி என்று ஏழு பெயர்களை மகான்கள் கூறியுள்ளனர்.

★★★

## 147.

முந்தஅகண் டத்தெழுமோர் அறிவுமாத் திரம்அதுதான்
முதல்வித்து ஆகும்
இந்தஅறி வில்பண்டுஇல் லாதஅகந்தை முளைபோல்ஆம்
இதுநனாவாம்
வந்துவந்து பிறவிதொறும் அகமமதை வளரும்அது மகாந னாவாம்
நந்தும்அகம் கொடுநனவில் மனோராச்சி யம்செயலே நனாக்க
னாவே.

1)சிருஷ்டியின் (ஜாக்கிரதம்) ஆரம்பத்தில் மாயையோடு கூடிய சேதனத்தினின்றும் வெளிப்பட்ட ஆபாசசேதனம் (ஜீவன், பிரதம அவஸ்தை) வித்து நனவு (உடல் தோன்றிய பின்பு வெளிப்படும் சித்தம், புத்தி அகங்காரங்களுக்குக் காரணமாய் இருப்பதால் இது பீஜ சாக்கிரம் என்று கூறப்படுகிறது. 2) ஜீவனிடத்தில் முன்பு இல்லாத நான் என்னும் தன்மை முளைபோல சூக்குமமாகத் தோன்றுவது

சாக்கிரமாகும். 3) பிறவிகள்தோறும் 'நான்' 'எனது' என்கிற சம்ஸ்காரங்கள் மரம்போல வளருதல் மகாசாக்கிரமாகும். 4) ஜீவன் சாக்கிர அவஸ்தையில் முன்னர் அறிந்த அறியாத விசயங்களைப் பற்றி மனோராஜ்ஜியம் செய்வது சாக்கிர சொப்பனமாகும் (பகல் கனவு).

★★★

## 148.

உண்டுறங்கி மனோராச்சி யம்செயல்சொப் பனம்எனும்பேர்
உடையதாகும்
பண்டுகனாக் கண்டுமறந் ததைமீண்டும் நினைப்பது சொப்பனந
னாவாம்
மண்டுஇருள் மூடுவது சுழுத்தியாம் அஞ்ஞான வகைகள்
சொன்னோம்
விண்டுநிறை முத்திதரு ஞானபூ மிகள்ஏழும் விளம்பக் கேளாய்.

5) ஜீவன் உண்டு உறங்கி மனோராஜ்ஜியம் செய்வது கனா எனப்படும். 6) ஜீவன் முன்னர் சொப்பனத்தில் கண்டு மறந்த விஷயங்களை மீண்டும் நினைப்பது சொப்பன சாக்கிரம் ஆகும். 7) ஜீவன் மேற்கூறிய ஆறு அவஸ்தைகளும் நீங்கப்பெற்று அஞ்ஞான வடிவ இருளால் மூடப்பட்டுள்ள நிலை சுழுத்தி எனப்படும். இதுகாறும் அஞ்ஞான பூமிகளைப் பற்றிக் கூறினோம். இனி அவித்தையினின்றும் நீங்கி சர்வ வியாபகமாக விளங்கும் மோட்சத்தை ஜீவனுக்குத் தருகின்ற ஞானபூமிகள் ஏழையும் கூறுகிறோம் கேட்பாயாக.

★★★

## 149.

புலவர்புகழ் முதல்பூமி சுபேச்சைவிசா ரணைஇரண்டாம்
பூமிஆகும்
நல்லதநுமா னசிமூன்றாம் பூமிசத்து வாபத்தி நாலாம் பூமி
சொலும் அசம்சத் திப்பேரும் பதார்த்தபா வனைப்பேரும்
துரியப்பேரும்
மலினம்அறு மகனேஐந் தாறேழு பூமிகளா வகுத்தார் மேலோர்.

களங்கமற்ற மைந்தனே! அறிஞர்களால் துதிக்கப்படுவதாகிய முதல் பூமி சுபம் விரும்பல் (சுபேட்சை) இரண்டாம் பூமி விசாரம் செய்தல் (விசாரணை) மூன்றாம் பூமியானது மனஞ்சிறுகல் (தநுமாநசி) நான்காம் பூமியானது உண்மையிலேயே நிலைபெற்று நிற்றல் (சத்துவாபத்தி) செல்லா நின்ற சங்கற்பம் அறல் (அசம்சத்தி) என்னும் பெயருடையதையும், பதார்த்த எண்ணம் அறுந்திடல் (பதார்த்த அபாவனை) என்றும் பெயருடையதையும், துரியம் என்னும் நாமம் உடையதையும், முறையே ஐந்து, ஆறு, ஏழாம் பூமிகளாக மகான்கள் பிரித்துள்ளனர்.

★★★

## 150.

**துற்சங்க நிவிர்த்திவந்து சிவஞானம் விரும்புவது சுபேச்சை ஆகும்**
**நற்சங்க மொழிவினவி ஞானநூல் பழகல்விசா ரணையா நம்பி**
**முற்சங்க ஏடணைகள் விடல்தநுமா நசிஇந்த மூன்றி னாலும்**
**சற்சங்க மனதிலுண்மை அறிவுஉதித்தல் சத்துவா பத்திதானே.**

1) நல்லாரல்லாரது கூட்டத்தினின்றும் நீங்கி சிவஞானம் அடைய விரும்புவது சுபேட்சையாகும். 2) சாதுக்களைச் சேர்ந்து அவருரைக்கும் வாக்கியத்தைக் கேட்டு ஞானநூல்களை அப்பியாசிப்பது விசாரணை ஆகும். 3) விசாரத்தில் வெளிப்படும் பொருளை நம்பி தன்னுடைய ஆசைகளை நீக்குதல் தனுமானசி ஆகும். 4) இம்மூன்று பூமிகளின் அப்பியாசத்தினால் சத்சங்கம் பழகிய மனதில் மெய்யுணர்வு பிறத்தல் சத்துவாபத்தி ஆகும்.

★★★

## 151.

**தத்துவத்தில் மனம்உறைத்து மித்தை எலாம்மறத்தல்**
**அசம்சத்திஆகும்**
**அத்துவிதா நந்தம்வரும் திரிபுடிபோம் பதார்த்தபா**
**வனையதுஆகும்**
**வத்துநிலை இருந்தபடி இருந்தமவு னசுபாவம் துரியம் ஆகும்**
**இத்துரிய பூமியைமுன் துரியாதீ தப்பத மென்றதும் கேளாய்.**

5) சத்தியத்தில் மனம் ஸ்திரப்பட்டு பொய்மைகள் (நாமரூபங்கள்) அனைத்தையும் மறந்துவிடுவது அசம்சத்தி ஆகும். 6) திரிபுடி (பதார்த்த எண்ணம்) நீங்கி அத்துவிதாநந்தம் உண்டாதல் பதார்த்த அபாவனை ஆகும். இந்த ஆறு பூமிகளின் சாதனையால் 7) ஆன்ம சுபாவத்தில் நீடித்து இருக்கும் மேலான மௌனநிலை துரியமாகும். இந்தத் துரிய பூமியை முன்னர் யாம் துரியாதீதப் பூமி என்று கூறியதன் காரணத்தைக் கேட்பாயாக.

★★★

## 152.

*முற்புவிமூன் றினும்உலகம் தோன்றுதலால் சாக்கிரம்ஆம்*
*மூன்றற்கப்பால்*
*சொற்பனமாம் அதுவும் மெள்ள நழுவும்ஐந்தாம் பூமியே சுழுத்தி*
*ஆகும்*
*அற்புதம்ஆம் சுகாநுபவம் மிகும்ஆறாம் புவிதுரியம்*
*அதற்கப்பாலோர்*
*கற்பனைஇ லாதஇடம் அதீதமென்று மௌனமாக்*
*காட்டும்வேதம்.*

சுபேட்சை முதலான மூன்று பூமிகளில் உள்ளோருக்கு உலகம் சத்தியமாகத் தோன்றுவதால் அம்மூன்றும் சாக்கிர அவத்தையாகும். சத்துவாபத்தியில் உலகம், சொப்பனம் போன்று மித்தையாகத் தோன்றுவதால் அது சொப்பன அவஸ்தை. நாமரூபங்கள் கிரமமாக நீங்கி யாதொன்றும் தோன்றாத ஐந்தாம் பூமி சுழுத்தி. ஆறாம் பூமியாகிய பதார்த்த பாவனை ஆனந்த அனுபவம் மிகுந்து உண்டாகும் துரியமாகும். அதற்கு மேலே சத்து அசத்து என்னும் கற்பனைகள் ஒரு சிறிதும் இல்லாத அதீத நிலை ஏழாம் பூமியாகிய துரியாதீதமாகும். அதை வேதமானது மௌனமாகக் காட்டும்.

★★★

153.

துரியநிலம் தனைதுரியா தீதம் எனில் மயக்கும் என்று
கருதிமேலோர்
அரியதொரு விதேகமுத்தி அதீதம் என்பார் அது கணக்கில்
ஆறாம் பூமி
மருவுசுழுத் தியிற்காட சுழுத்திஎன்பார் என்பதும்நீ மனத்தில்
கொள்வாய்
பெருமைதரும் ஞானபூ மியின்விகற்பம் இன்னம்உண்டு
பேசக்கேளாய்.

துரிய பூமியைத் துரியாதீத பூமிஎன்றால் மந்த புத்தியினருக்கு மயக்கம் உண்டாகும் என்றெண்ணி, வேதாந்தமுணர்ந்த மகான்கள் எட்டுதற்கரிய ஒப்பற்ற விதேக முத்தியை துரியாதீதமென்று சொல்லு வார்கள். அந்தக் கணக்கின்படி பதார்த்த அபாவனை என்னும் ஆறாவது பூமியை காட சுழுத்தி (ஆழ்ந்த உறக்கம்) என்பார்கள். இவர்கள் கணக்குப்படி ஏழாவது பூமியை துரியாதீத மென்னாது துரியம் என்று கூறுவார்கள். இதை நீ மனதில் கொள்வாயாக. பெருமைமிக்க ஞானபூமிகளின் பேதங்கள் இன்னமிருக்கின்றன அவற்றையும் கேட்பாயாக.

★★★

154.

முன்நிலங்கள் ஏறியமூ வரும்அப்பி யாசிகள்ஆம் முத்தர் அல்லர்
பின்நிலங்கள் வரன்வரியான் வரிட்டன்எனும் சிவன்முத்தர்
பேதம்ஆகும்
சொன்னநடுப் பூமிவந்த ஞானிகளே பிரமவித்தாம் தூயமுத்தர்
இன்னமும்அப் பூமிகளின் பெருமைதனை நீஅறிய
யான்சொல்வேனே.

முதல் மூன்று பூமிகளான சுபேட்சை, விசாரணை, தநுமாநசி என்னும் மூன்று பூமிகளைக் கடந்து வந்தவர்கள் சாதகர்கள் (ஜிஞ்ஞாசு) ஆவார்கள் ஜீவன் முத்தர்களல்லர். பின்னுள்ள அசம்சத்தி, பதார்த்த அபாவனை, துரியம் என்னும் மூன்று பூமிகளிலிருப்பவர்கள் முறையே பிரமவரன், பிரமவரியான், பிரமவரிட்டன் என்று சொல்லப் படுவார்கள். இது ஜீவன் முத்தர்களின் பேதங்களாகும்.

5) சத்தியத்தில் மனம் ஸ்திரப்பட்டு பொய்மைகள் (நாமரூபங்கள்) அனைத்தையும் மறந்துவிடுவது அசம்சத்தி ஆகும். 6) திரிபுடி (பதார்த்த எண்ணம்) நீங்கி அத்துவிதாநந்தம் உண்டாதல் பதார்த்த அபாவனை ஆகும். இந்த ஆறு பூமிகளின் சாதனையால் 7) ஆன்ம சுபாவத்தில் நீடித்து இருக்கும் மேலான மௌனநிலை துரியமாகும். இந்தத் துரிய பூமியை முன்னர் யாம் துரியாதீதப் பூமி என்று கூறியதன் காரணத்தைக் கேட்பாயாக.

★★★

## 152.

முற்புவிமூன் றினும்உலகம் தோன்றுதலால் சாக்கிரம்ஆம்
மூன்றற்கப்பால்
சொற்பனமாம் அதுவும் மெள்ள நழுவும்ஐந்தாம் பூமியே சுழுத்தி
ஆகும்
அற்புதம்ஆம் சுகாநுபவம் மிகும்ஆறாம் புவிதுரியம்
அதற்கப்பாலோர்
கற்பனைஇ லாதஇடம் அதீதமென்று மௌனமாக்
காட்டும்வேதம்.

சுபேட்சை முதலான மூன்று பூமிகளில் உள்ளோருக்கு உலகம் சத்தியமாகத் தோன்றுவதால் அம்மூன்றும் சாக்கிர அவத்தையாகும். சத்துவாபத்தியில் உலகம், சொப்பனம் போன்று மித்தையாகத் தோன்றுவதால் அது சொப்பன அவஸ்தை. நாமரூபங்கள் கிரமமாக நீங்கி யாதொன்றும் தோன்றாத ஐந்தாம் பூமி சுழுத்தி. ஆறாம் பூமியாகிய பதார்த்த பாவனை ஆனந்த அனுபவம் மிகுந்து உண்டாகும் துரியமாகும். அதற்கு மேலே சத்து அசத்து என்னும் கற்பனைகள் ஒரு சிறிதும் இல்லாத அதீத நிலை ஏழாம் பூமியாகிய துரியாதீதமாகும். அதை வேதமானது மௌனமாகக் காட்டும்.

★★★

## 153.

துரியநிலம் தனைதுரியா தீதம்எனில் மயக்கம்என்று
கருதிமேலோர்
அரியதொரு விதேகமுத்தி அதீதம் என்பார் அது கணக்கில்
ஆறாம் பூமி
மருவுசுழுத் தியிற்காட சுழுத்திஎன்பார் என்பதும்நீ மனத்தில்
கொள்வாய்
பெருமைதரும் ஞானபூ மியின்விகற்பம் இன்னம்உண்டு
பேசக்கேளாய்.

துரிய பூமியைத் துரியாதீத பூமிஎன்றால் மந்த புத்தியினருக்கு மயக்கம் உண்டாகும் என்றெண்ணி, வேதாந்தமுணர்ந்த மகான்கள் எட்டுதற்கரிய ஒப்பற்ற விதேக முத்தியை துரியாதீதமென்று சொல்லுவார்கள். அந்தக் கணக்கின்படி பதார்த்த அபாவனை என்னும் ஆறாவது பூமியை காட சுழுத்தி (ஆழ்ந்த உறக்கம்) என்பார்கள். இவர்கள் கணக்குப்படி ஏழாவது பூமியை துரியாதீத மென்னாது துரியம் என்று கூறுவார்கள். இதை நீ மனதில் கொள்வாயாக. பெருமைமிக்க ஞானபூமிகளின் பேதங்கள் இன்னமிருக்கின்றன அவற்றையும் கேட்பாயாக.

★★★

## 154.

முன்நிலங்கள் ஏறியமூ வரும்அப்பி யாசிகள்ஆம் முத்தர் அல்லர்
பின்நிலங்கள் வரன்வரியான் வரிட்டன்எனும் சிவன்முத்தர்
பேதம்ஆகும்
சொன்னநடுப் பூமிவந்த ஞானிகளே பிரமவித்தாம் தூயமுத்தர்
இன்னமும்அப் பூமிகளின் பெருமைதனை நீஅறிய
யான்சொல்வேனே.

முதல் மூன்று பூமிகளான சுபேட்சை, விசாரணை, தநுமாநசி என்னும் மூன்று பூமிகளைக் கடந்து வந்தவர்கள் சாதகர்கள் (ஜிஞ்ஞாசு) ஆவார்கள் ஜீவன் முத்தர்களல்லர். பின்னுள்ள அசம்சத்தி, பதார்த்த அபாவனை, துரியம் என்னும் மூன்று பூமிகளிலிருப்பவர்கள் முறையே பிரமவரன், பிரமவரியான், பிரமவரிட்டன் என்று சொல்லப் படுவார்கள். இது ஜீவன் முத்தர்களின் பேதங்களாகும்.

சத்துவாபத்தி என்னும் நான்காவது பூமியிலுள்ள ஞானவான்கள் பிரமவித்து என்னும் ஜீவன்முத்தராவார்கள். மேலும் அந்த ஞானபூமியின் பெருமைகளை உனக்குத் தெரியும் பொருட்டு சொல்லுகிறேன்.

★★★

## 155.

நாலாம்பூ மியில்வரும்முன் மூன்றுபூ மியும்அடைந்து நடந்து மாண்டோர்

மேலான பதம்அடைந்து பிறந்துமெள்ள மெள்ளவந்து வீடுசேர்வார்

மாலான பவத்தில்விழார் முதற்பூமி கிடைப்பதுவே வருத்தம் மைந்தா

காலான முதல்பூமி கைவந்தால் முத்தியும் கைவந்ததாமே.

மகனே! சத்துவாபத்தி நான்காம் பூமிக்கு வருவதற்கு முன்னம் முதல் மூன்று பூமிகளில் அநுஷ்டித்து வரும்போது மரணம் அடைந்தவர்கள் சுவர்க்கம் முதலிய பதவிகள் அடைந்து புண்ணியம் தீர்ந்தபிறகு பூமியில் பிறந்து காலக்கிரமத்தில் நான்காம் பூமிக்கு வந்து முத்தி அடைவார்கள். இச்சா ரூபமான பிறவியில் விழ மாட்டார்கள். முதல் பூமியான சுபேட்சை அடைவதே எவர்க்கும் பிரயாசமாகும். முதல் பூமி கைவசமானால் முத்தியும் அவனுக்கு கைவசம் ஆகும்.

★★★

## 156.

இப்புவியில் இஞ்ஞான பூமிஒன்றில் இரண்டில் அடைந்திருந்தாரானால்

அப்புருடர் மிலேச்சர்ஆ கிலும்முத்தர் குருபாதத் தாணைமெய்யே

தப்புரைஎன் றவர்கெடுவார் நடுவான மறைகளைநீ சங்கியாதே

செப்புமொழி வழிதிடமாய் அகம்பிரமம் என்றிருந்து தெளிந்திடாயே.

மகனே! இங்கு கூறிய ஞானபூமிகள் ஏழில் சுபேச்சையிலாவது விசாரணையிலாவது இருப்பவர் மிலேச்சர்களானாலும்; சற்குரு

பாதத்தின்மீது ஆணை, அவர்கள் ஜீவன் முக்தர்கள் ஆழ்வார்கள் என்பது சத்தியம். இதைப் பொய் வசனம் என்று கூறுபவர்கள் பவத்தில் அழிவார்கள். நடுவுநிலைமையான வேதவாக்கியங்களைக் குதர்க்கமாக நீ சங்கை செய்யாதே. வேதம் கூறும் வாக்கிய நெறியில் ஸ்திரமாகச் சென்று 'நான் பிரம்மம்' என்று சகஜ சமாதியிலிருந்து தெளிவடைவாய்.

★★★

## 157.

பொல்லாத மிலேச்ச ருக்கும் விதேகமுத்தி தரும்ஞான பூமிஎன்று
நெல்ஆகி முளைக்கும்எனைத் தண்டுலம் ஆக்கிய குருவே
நீர்சொன்னீரே
இல்லாளும் குடும்பம்விட்டுச் சந்நியா சம்புகுந்து ஏகாங்கி ஆனோர்
அல்லாமல் முத்திபெறார் என்றுசிலர் சொலும் மயக்கம்
அகற்றுவீரே.

நெல்லைப்போல பிறந்து இறந்து கொண்டிருந்த அடியேனை அரிசியைப் போல பிறவாமற் செய்த குருமூர்த்தியே! கொடியவர்களான மிலேச்சர்களுக்கும் விதேக முத்தியை ஞானபூமி கொடுக்கும் என்று தேவரீர் அருளிச் செய்தீர். மனைவி முதலிய குடும்பத்தைத் துறந்து துறவறம் ஏற்று தனித்துச் சென்றவர்கள் அல்லாமல் மற்றைய இல்லறத்தார் மோட்சமடைய மாட்டார்களென்று சிலர் மாறுபாடாகச் சொல்லுகின்ற பிரமையை நீக்கி அருளுங்கள்.

★★★

## 158.

சிட்டர்புகழ் மகனேநீ சங்கித்த சங்கைநன்று தெரியக் கேளாய்
கட்டுஅழியும் துறவுநால் வகைஆகும் அவைகளுக்காங் காகும்பேர்கள்
பட்டதுயர் கெடும்குடீ சகம்வெகூதகம் அஞ்ம்பரம அஞ்சம்
விட்டகலும் துறவுக்கு விராகம்கா ரணம்அன்றி வேடம் அன்றே.

நல்லோரால் புகழப்படுகின்ற மகனே! நீ கேட்ட கேள்வி மிகவும் நல்ல கேள்வி. அதற்கு விடை கூறுகிறோம். பந்தத்தை நீக்குகின்ற சந்நியாசம் நான்கு விதமாகும். அவை முறையே குடீசகம்

வெகூதகம் ஹம்சம் பரமஹம்சம் எனப்படும். இச்சந்நியாசத்திற்கு நிராசைதான் (வைராக்கியம்) காரணமே தவிர வேஷம் காரணமல்ல.

★★★

## 159.

**மந்தமும்தீ விரமும்தீ விரதரமும் எனமூன்று வகைவி ராகம்**

**வெந்துயரம் வரும்பொழுது குடும்பத்தை வெறுத்துவரும் விராகம் மந்தம்**

**இந்தவுடல் அளவும்மனை தனம் வேண்டாம் எனவிடல் தீவிரம் என்பார்கள்**

**அந்தணன்ஊர் மித்தைஎன விடல்அதுதீ விரதரம்ஆம் அறிந்திடாயே.**

விராகம் (நிராசை) என்பது மந்தம், தீவிரம், தீவிரதரம் என்று மூன்று வகைப்படும். மனைவி - மக்கள் - பிரிவு - பொருள் - புகழ் - இழப்பு போன்ற கொடிய துக்கம் உண்டான காலத்தில் சம்சாரத்தை வெறுக்கும் வைராக்கியம் மந்த வைராக்கியம் ஆகும். இந்த உடல் இருக்கும்வரை மனைவி மக்கள் செல்வம் முதலியவைகள் வேண்டாம் என்று துறத்தல் தீவிர வைராக்கியம் எனப்படும். கர்ம காண்டத்தால் கிடைக்கும் பிரம்ம லோகமும் மித்தை என்றும் அதை வேண்டாம் என்றும் துறத்தல் தீவிரதர வைராக்கியம் ஆகும்.

★★★

## 160.

**பாவிமந்த விராகத்தில் சந்நியா சங்கள் ஒன்றும் பலித்திடாதே**

**தீவிரத்தில் குடீசகமும் வெகூதகமும் என்றிரண்டு திறங்கள் உண்டாம்**

**தாவிநடந் திடத்திடம்இல் லாதவர்க்குக் குடீசகமும் சகங்கள் எங்கும்**

**மேவிநடந்திடத்திடம்உள்ளவர்க்குவெகூதகமும்எனவிதித்தார்மேலோர்.**

தீவினையுடையோன் மந்தவைராக்கியத்தில் மேற்கொள்ளும் சந்நியாசத்தில் யாதொரு பலனும் சித்திக்காது. தீவிர வைராக்கியத்தில் குடீசகம், வெகூதகம் என்னும் இருவகை சந்நியாசங்கள் உள்ளன. யாத்திரைகள் செய்ய பலமில்லாதவர்களுக்கு குடீசக சந்நியாசமும் உலகில் எவ்விடத்திற்கும் செல்ல பலமுள்ளவர்களுக்கு வெகூதக சந்நியாசமும் என்று மேலோர் விதித்துள்ளனர்.

★★★

## 161.

இருவகைதீ விரத்தரத்தும் அம்சனென்றும் பரமாம்சன் என்றும்
சொல்வார்
வரும்அம்ச னுக்குமுத்தி சத்தியலோ கத்தன்றி வாரா தென்பார்
பரமாம்ச னுக்குமுத்தி இவ்வுலகில் ஞானத்தால் பலிக்கும் என்பார்
திரம்மருவும் பரமாம்சன் தானும்இரு வகைஆகும் செப்பக் கேளாய்.

தீவிர சந்நியாசிகளுள் ஹம்ச சந்நியாசி என்றும்; பரமஹம்ச சந்நியாசி என்றும் இருவகையாக மேலோர் கூறுவார்கள். ஹம்ச சந்நியாசிக்கு மோட்சமானது சத்திய லோகத்தில்தான் கிடைக்கும்; இவ்வுலகில் கிடைக்காது. பரமஹம்ச சந்நியாசிக்கு மோட்சம் தத்துவஞானத்தால் இவ்வுலகிலேயே கிடைக்கும் என்று சொல்வார்கள். பரமஹம்ச சந்நியாசிகளுள் இரண்டுவிதம் இருக்கிறார்கள். இதைச் சொல்கிறேன் கேட்பாயாக.

★★★

## 162.

சிஞ்ஞாசு ஞானவான் என்றிரண்டு பேர்கள் அவரிற் சிஞ்ஞாசு
மெய்ஞ்ஞான பூமியில்முன் மூன்றுபூ மியுள்நடக்கும் விவேகி
ஆனோன்
சுஞ்ஞான வான்என்போன் சீவன்முத்தி அடைந்திருக்கும்தூய
மேலோன்
அஞ்ஞானம் அகலும் அந்தச் சிஞ்ஞாசும் இருவகைஆம் அதுவும்
கேளாய்.

அவர்கள் சிஞ்ஞாசு என்றும் சுஞ்ஞானவான் என்றும் இருதிறத்தராய் இருப்பார்கள். அவ்விருவர்களில் சிஞ்ஞாசு என்பவன் ஞானபூமிகள் ஏழில் முதல் மூன்று பூமிகளுள் ஒன்றினை அப்பியசிப்பான். சுஞ்ஞானவான் என்பவன் பின்னுள்ள நான்கு பூமிகளில் ஏதேனும் ஒன்றில் ஜீவன் முக்தியைப் பெற்றிருக்கின்ற பரிசுத்த மகானாவான். அச்சிஞ்ஞாசுகளில் இரண்டுவிதமுண்டு. அதையுங் கேளாய்.

★★★

## 163.

**பந்தம்மனை துறந்துசிலர் அதிதிகளாய் இருந்தடைவர் பரம ஞானம்**
**அந்தணர்மன் னவர்வணிகர் சூத்திரராய் இருந்துசிலர் அடைவர்ஞானம்**
**இந்தவகைச் சாத்திரத்தும் உலகத்து நடப்பது கண்டிருந்தும்மைந்தா**
**சிந்தனையின் மயக்கம்என்னே சுருதியுக்தி அநுபவத்தால்**
**தெளிந்திடாயே.**

மகனே! சிஞ்ஞாசுகளில் சிலர் பந்தமான இல்வாழ்க்கையை புத்திபூர்வமாக முறையாகத் துறந்துவிட்டு, சற்குருவை அடுத்து சிரவண - மனன - நிதித்யாசனம் செய்து தத்துவஞானம் அடைவார்கள். சிலர் பிராமணர்களாகவும், சத்திரியர்களாகவும், வைசியராகவும், சூத்திரராகவும் இருந்து தத்தமக்கு விதித்துள்ள கர்மங்களை நிஷ்காமிய மாகச் செய்து அகத்துறவு உடையவர்களாய் சற்குருவை அடுத்திருந்து சிரவணாதிகளால் பிரம்மஞானம் அடைவார்கள். இவ்வாறான துறவிகளை ஆகம பிரமாணங்களிலும், உலகில் நடப்பதாகிய பிரத்தியட்ச பிரமாணத்தாலும் பார்த்திருந்தும் உன் மனதில் சந்தேகம் வரக் காரணம் என்ன? சுருதி, யுக்தி, அனுபவம் என்னும் மூன்றினாலும் இச்சந்தேகத்திலிருந்து தெளிவடைவாயாக (முத்தி அடைவதற்கு வைராக்கியத்தால் வரும் சாந்தியே காரணமல்லாமல் இல்லறம் துறவறம் அல்ல).

★★★

## 164.

**பிறந்ததுண் டானால் அன்றோ பிறகுசா வதுதான் உண்டாம்**
**பிறந்ததே இல்லை என்னும் பிரமம்ஆ வதுவும் நானே**
**பிறந்தது நான்என் றாகில் பிரமம்அன்று அந்த நானே**
**பிறந்ததும் இறந்தது அற்ற பிரமம்ஆம் நானே நானே.**

பிறந்திருந்தால்தானே இறப்பு உண்டாகும். பிறப்பே இல்லாத பிரம்மம் ஆகவே நான் இருக்கிறேன். பிறந்தது 'நான்' என்பது வாச்சிய அர்த்தமான அகங்காரமே அல்லாமல் லட்சிய அர்த்தமான பிரம்மம் ஆகாது. பிறப்பும் இறப்புமற்ற பிரம்மமாகிய நானே (நானாக) 'நான்' என்பதன் பொருளாக இருக்கிறேன்.

★★★

## 165.

நான்என்ற பிரமம்ஆன நானேநான் அறியேன் என்றால்
நான்என்பது ஏது பின்னை நம்முடையப் புந்தி என்னில்
தான்அது மயக்கம் தன்னில் சாகுமே சாவா தாகில்
நான்என நிறைந்திருந்த ஞானம்ஆம் நானே நானே.

நானென்று சொல்லும் ஆன்மாவே நான். அந்த ஆன்மாவை அறியவில்லை என்றால் 'நான்' என்பது எது? அது நமது புத்தி என்று சொன்னால் அந்த புத்தியும் சுழுத்தியில் இல்லாமல் போய்விடுகிறது. அத்தகைய சுழுத்தியிலும் அழியாமல் இருக்குமானால் 'நான்' 'நான்' என்று பூரணமாய் விளங்கும் ஞானவடிவான ஆன்மாவே 'நான்' என்னும் பதத்தின் உண்மைப் பொருளாகும்.

★★★

## 166.

நிறைந்தவாறு எந்த வாறு நிலைதெரிந் திலன்என் றாயேல்
அறிந்ததாம் சுழுத்தி தன்னில் ஆநந்தம் அதுவே ஆகும்
குறைந்ததற்கு ஆநந் தம்தான் குவலயம் தன்னில் இல்லை
நிறைந்ததே இந்த ஆன்மா நிதானம்இவ் வறிவுதானே.

நான் பரிபூரணமானவிதம் எவ்வண்ணம் என்று நிச்சயமாகத் தெரியவில்லை என்பாயாகில், சுழுத்தி நிலையில் (அஞ்ஞானத்தை) அறிந்திருப்பதாகிய அந்த ஆன்மா ஆனந்தமாகும். குறைவற்ற முழு ஆனந்தம் உலகில் எங்கேயும் காணப்படுவதில்லை. ஆதலால் இவ்வாத்மா பரிபூரணமானது. இப்பரிபூரணப் பிரம்மமே (ஆத்மாவே) உலகிற்கு ஆதிகாரணம் ஆகும்.

★★★

## 167.

மனத்தினால் எண்ணித்தானே வந்ததிவ் வுலகம் ஆகும்
நினைத்திடில் அநேக லோகம் நிற்பதவ் வறிவில் அன்றோ
அனைத்தையும் கடந்தப் பாலும் அந்தம்அற் றறிவிதாம்என்று
எனைத்தனி விசாரித் திட்டால் ஏகம்ஆய் நிறைந்தோன் நானே.

மகனே! ஐம்பூத விகாரமாகிய இப்பிரபஞ்சம் மனோபாவனையில் உண்டானது ஆகும். ஆராய்ந்து பார்த்தால் எல்லா உலகங்களும் நிலைத்திருப்பது அவ்வாத்மாவிலல்லவா? ஆத்மாவின் கண் உண்டாகிய மனம் பிரபஞ்சம் ஆகிய எல்லாம் பிரம்மமே ஆகும் என்று அறிவாகிய என்னை ஏகாந்தமாய் இருந்து விசாரித்துப் பார்த்தால், மனத்திற்கும், அதன் காரியமாயுள்ள பிரபஞ்சத்திற்கும் அப்பாற்பட்டு அவற்றிற்கு மேலும் எல்லையின்றி ஏகமாய் பூரணமாக நிறைந்திருப்பவன் நானே ஆவேன்.

★★★

## 168.

**அந்தவாறு இருந்து கொண்டே ஆநந்தம் அநுப விக்க**
**எந்தவாறு இருந்து கொண்டால் எனக்கிது தெரியும் என்னில்**
**இந்தமூன்று அவத்தை தம்முள் எழுந்திடும் விருத்தி நீக்கில்**
**அந்தவாறு இருந்துநீயும் ஆநந்தம் அடையல் ஆமே.**

அவ்வாறு பூரணமாய் இருந்துகொண்டு பிரம்மாநந்தத்தை அநுபவிக்க எவ்வண்ணம் இருக்கவேண்டுமென்று கேட்பாயாகில் ஜாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்னும் மூன்று அவஸ்தைகளிலும் முறையே எழுகின்ற இந்திரிய விருத்தி, மனோவிருத்தி, அவித்யாவிருத்தி (சாந்த, கோர, மூட) என்னும் மூன்று விருத்திகளையும் ஒழிப்பாயானால் நீ பரிபூரண ஞானமாயிருந்து கொண்டு நிரதிசயாநந்தத்தை அடையலாம்.

★★★

## 169.

**வாதனா வசத்தினாலே வருகின்ற விருத்தி எல்லாம்**
**ஏதினால் அடக்கல் ஆகும் என்றுதான் விசாரம் செய்யில்**
**போதம்ஆம் இராசன் தானாய்ப் புந்திஐம் புலன்கள் எல்லாம்**
**தாதராய் இருக்கப் பெற்றால் சகலமும் அடங்கும்தானே.**

மகனே! பழக்க வாசனையால் (சம்ஸ்காரம்) அந்தக்கரணத்தில் உண்டாகிற விருத்திகளையெல்லாம் எந்த உபாயத்தால் அடக்கலாம்

என்று கேட்பாயாகில் தான் (ஆத்மா) ஞானவடிவ அரசனாக இருந்து அந்தக்கரண சதுஷ்டயம், ஞானேந்திரிய பஞ்சகம், கர்மேந்திரிய பஞ்சகம் ஆகிய அனைத்தையும் தனது ஆளுகையில் வைத்திருந்தால் சகல விருத்திக்கும் தாமாகவே அவன் வசமாய் அடங்கிவிடும்.

★★★

## 170.

**விருத்திகள் அடக்கஇன்னம் விநோதம்ஆம் யோகத்தாலே**
**துருத்திபோல் ஊதும் மூச்சைச் சுகமுடன் அடக்கில் நிற்கும்**
**கருத்ததற்கு இல்லை என்னில் காரண சரீரம் ஆகிப்**
**பெருத்ததோர் அவித்தை தன்னைப் பிடிங்கிடில் அடங்கும்தானே.**

மகனே! விநோதமாகச் செய்யும் பிராணாயாமம் என்னும் யோகத்தினால் கொல்லனது துருத்திபோல நாசித்துளை வழியே செல்லுகின்ற சுவாசத்தை (பிராண வாயுவை) அநாயாசமாக (இன்பமாக) ஒடுக்கினால் விருத்திகள் ஒடுங்கிவிடும். அவ்வாறு செய்ய விருப்ப மில்லை என்றால் ஸ்தூல, சூக்கும சரீரங்களுக்குக் காரணமாக விளங்கும் காரண சரீரத்துச்'குக் காரணமாக இருக்கும் அவித்தையை நாசம் செய்தால் விருத்திகள் நாசம் ஆகும். (அவித்தை நாசமானால் அதன் காரியமான அந்தக்கரணமும் நிவிருத்தியாகும்) (இவ்விரண்டில் முன்னது யோகாப்பியாசம், பின்னது ஞானாப்பியாசம். ஞானாப்பியாசம் மேன்மையானது).

★★★

## 171.

**காரண சரீரம் தன்னைக் களைவதெவ் வாறென் றோதில்**
**ஆரணம் பொய்சொல் லாதே அதன்பொருள் அகத்தில் உன்னி**
**பூரணம் ஆகும் என்மேல் புவனங்கள் தோன்றும் என்று**
**தாரணை வந்த தாகில் தரித்திடும் அவித்தை எங்கே.**

காரண சரீர அவித்தையைக் கெடுப்பது எவ்வாறு என்று கேட்பாயாகில் வேதம் பொய் சொல்லாது உண்மையைத்தான் சொல்லும் ஆதலால் அதன் மகாவாக்கியார்த்தத்தை (அனைத்தும் பிரம்மம் என்பதை) மனதில் சிந்தித்துப் பூரண சொரூபமாகிய என்னிடம் ஆரோபமாக (மித்தையாக) பிரபஞ்சங்கள் தோன்றியுள்ளன என்ற நிச்சயம் (தாரணை) ஏற்பட்டால் அவித்தை இருக்காது. அழிந்துவிடும்.

## 172.

*அப்படி இருக்கச் சித்தம் அலைதலால் விவகா ரத்தில்*
*எப்படிக் கூடும் என்னில் என்னைவிட் டொன்றும் இல்லை*
*இப்படிக் கண்ட எல்லாம் என்மயம் என்க னாப்போல்*
*கற்பிதம் என்று தானே காண்கின்ற சித்து நானே.*

பிராரத்த கர்மத்தால் உலக விவகாரங்களில் மனமானது சஞ்சலப்படும்போது தாரணை எங்ஙனம் கூடும் என்று கேட்பாயாகில் இருப்பதெல்லாம் கடல் அலை போன்று நாமரூபம்தான். என்னைத் தவிர வேறு ஒரு வஸ்து இல்லை பொன் ஆபரணம், மண்குடம் எனக் காணப்படும். திரிசயங்கள் எல்லாம் எனது சொரூபம்தான். எனது சொப்பனத்தைப் போல கற்பிதம், அதைக் காண்கின்ற சைதன்யமே நான் என்று நிச்சயிக்க வேண்டும் (இந்த அநுபவ திருஷ்டியால் யாவும் தன்மயமாக விளங்கும்).

★★★

## 173.

*சித்துநான் நிறைந்தோன் என்ற திடம்மற வாதி ருந்தால்*
*எத்தனை எண்ணினாலும் ஏதுசெய் தாலும் என்ன*
*நித்திரை உணர்ந்தபின்பு நிற்கின்ற கனாவே போல*
*அத்தனை யும்பொய் தானே ஆநந்த வடிவு நானே.*

சித்தாயுள்ள நான் பூரணமாய் இருப்பவன் என்று திடச்சித்தத்தோடு கூடியிருந்தால், வாக்கால் எவ்வளவு கூறினாலும் (சங்கல்பம்) உடலால் எத்தொழிலைச் செய்தாலும் அதனால் அவனுக்கு யாதொரு கெடுதியும் இல்லை. நித்திரை தெளிந்த பின்பு மித்தையாக இருக்கின்ற சொப்பனம் போல மனம் வாக்கு காயத்தால் செய்யப்படும் செயல்கள் எல்லாம் மித்தையேயாகும். அதனால் ஆநந்த வடிவமே நான்.

★★★

## 174.

*நான்என உடலைத்தானே நம்பினேன் அநேக சென்மம்*
*ஈனராய்ப் பெரியோர் ஆகி இருந்தவை எலாம்இப் போது*
*கானலில் வெள்ளம் போலக் கண்டுசற் குருவி னாலே*
*நானென என்னைத் தானே நம்பிஈ டேறி னேனே.*

கழிந்துபோன அநேக பிறவிகளில் பிராந்தியால் இந்த உடலையே நான் என்று நம்பியிருந்தேன். அப்போது இழிந்தவராகவும், உயர்ந்தவராகவும் இருந்த அனைவரையும் இப்போது சற்குருவின் உபதேசத்தால் கானல் நீர்போல மித்தையாகக் கண்டு நானே பிரம்மம் என்று அறிந்து உய்வுற்றேன்.

★★★

## 175.

என்னபுண் ணியமோ செய்தேன் ஏதுபாக் கியமோ காணேன்
நன்னிலம் தனில் எழுந்த நாரணன் கிருபை யாலே
தன்னியன் ஆனேன் நான்உத் தரீயத்தை வீசு கின்றேன்
தன்னியன் இன்னும் நானே தாண்டவம் ஆடு கின்றேன்.

சென்ற பிறவிகளில் எப்படிப்பட்ட மேலான புண்ணியச் செயல்களைச் செய்தேனோ? என்ன பாக்கியம் பெற்றேனோ? அதை அறியேன். நன்னிலம் என்னும் புண்ணிய நகரில் மானுடனாக அவதரித்த நாராயண தேசிகரது கிருபா விசேசத்தால் நான் கிருதார்த்தன் ஆனேன். அதனால் உண்டான பரமாநந்தத்தில் என்னுடைய மேலாடையை ஆகாயத்தில் எறிந்து விளையாடுகின்றேன் தன்னியன் ஆகிய நான் இன்னும் ஆநந்தக்கூத்தாடிக் கொண்டிருக்கிறேன்.

★★★

## 176.

தத்துவ ஞானம் வந்த சந்தோஷ அதிச யத்தால்
நித்தம்ஆ டுவன்காண் என்ற நிலை முன்னமே அறிந்த
சத்தியம் அதனால் அன்றோ தாண்டவா என்ற ழைத்தார்
அத்தனை மகிமை உள்ளோர் அன்னையும் பிதாவும் தானே.

நான் தத்துவ ஞானத்தால் உதயமான வித்தியாநந்தத்தின் மிகுதியால் ஆனந்தக் கூத்தாடுவேன் என்னும் நிச்சயத்தை நான் பிறந்த அன்றே தெரிந்த உண்மையாலன்றோ எனது தாயும் தந்தையும் என்னை தாண்டவராயன் என்று பெயரிட்டு அழைத்தனர். அதனால் அவர்கள் மகிமையுள்ளவராவார்கள்.

★★★

## 177.

*வந்ததோர் இவ்வா நந்த மகிழ்ச்சியா ருடன்சொல் வேன்யான்*
*சிந்தையில் எழுந்து பொங்கிச் செகம்எலாம் நிறைந்து தேங்கி*
*அந்தம்இல் லாதது ஆயிற் றப்படி குருவே தாந்த*
*மந்திரம் அருளும் ஈசன் மலர்அடி வணங்கி னேனே.*

அறிவிலுதித்த ஒப்பற்ற இந்த நிரதிசயானந்தத்தினால் மகிழ்ச்சி அடைந்ததை யாருடன் உரைப்பேன்? உள்ளத்தில் ஊறி மேலிட்டு உலகங்கள் அனைத்தும் பூரணமாய் முடிவில்லாததாயிற்று. அவ்வண்ணமே வேதமுடிவான மகாவாக்கியார்த்த ரகசியத்தை அருளிய இறைவனாகிய தேசிகருடைய கமல மலர் போன்ற திருவடிகளை வணங்குகின்றேன்.

★★★

## 178.

*வித்தியா நந்தம் இந்தவிதம் என விளம்பினோமே*
*பத்தியால் இந்த நூலைப் பார்த்தநு பவித்த பேர்கள்*
*நித்திய தருமநிட்டை நிலைதனை அறிந்துசீவன்*
*முத்தியை அடைந்தி ருந்த முனிவரர் ஆகு வாரே.*

ஞானாநந்தமானது இவ்வகையாம் என்று சொல்லினோம். அன்பாக இந்த கைவல்ய நவநீதம் என்னும் ஞான சாஸ்திரத்தை விரும்பி குருவின் வாயிலாக உணர்ந்து அப்பொருளை அறிந்த அநுபவமான பேர்கள் புண்ணிய கரும விசேஷத்தால் நித்தியமான ஞான நிஷ்டை அடைந்து தமது நிச வடிவத்தை அறிந்து ஜீவன் முத்தி பதத்தைப் பெற்று முற்காலத்து இருந்த முனிவர்களுக்கு நிகர் ஆவார்கள்.

★★★

## 179.

*ஆரணப் பொருளாம் வித்தி யாநந்தம் விளங்க ஏதும்*
*காரணம் குறைவில் லாமல் கைவல்ய நவநீ தத்தைப்*
*பூரணம் ஆக்கவேண்டி பூர்வம் நன்னி லத்தில்*
*நாரண குரு நமக்கு நவின்றனர் கனவில் வந்தே.*

சுருதியின் பொருளான சாதன சதுட்டயம் முதல் வித்தியானந்தம் முடிவாக எடுத்து விளக்கவேண்டிய காரணங்களுள் குறையேது மின்றி, நன்கு விளங்கச் செய்து, கைவல்ய நவநீதம் என்னும் இந்நூலைப் பூரணமாக்க விரும்பி, பழம்பெருமை வாய்ந்த நன்னிலம் என்னும் இத்தலத்தில், நாராயண குருவானவர் எழுந்தருளி எனது தியானத்தில் தோன்றி அனைத்தையும் நவின்று அருளினார். (அவர் கூறியருளியதால் இந்நூல் முற்றுப் பெற்றதே அன்றி எனது அறிவால் முற்றுப் பெறவில்லை).

★ ★ ★

## 180.

**குலவுசற் குருவின் பாதக் குளிர்புனல் தலைமேல் கொண்டால்**
**உலகினில் தீர்த்தம்எல்லாம் உற்றபே றடைவார் போல**
**நலம்மெய் ஆகிய கைவல்ய நவநீத நூலைக் கற்றோர்**
**பலகலை ஞான நூல்கள் படித்த ஞானிகளாய் வாழ்வார்.**

சற்குருவின் திருவடியில் அபிஷேகம் செய்த தீர்த்தத்தைத் தமது தலையில் தெளித்துக் கொண்டவர், அதனால் கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்கள் அனைத்திலும் சென்று நீராடிய பலன்களை யெல்லாம் அடைவார்கள். நற்பயன்களைத் தரும் கைவல்ய நவநீதம் என்னும் இந்த மெய்ஞ்ஞான சாஸ்திரத்தை சற்குருவிடம் முறையாகக் கற்றறிந்தவர்கள் ஞான சாஸ்திரங்கள் பலவற்றையும் படித்துணர்ந்த ஞானிகளைப் போலச் சிறப்புற்று வாழ்வார்கள்.

**சந்தேகம் தெளிதல் படலம் நிறைவுற்றது**
**கைவல்ய நவநீதம் நிறைவுற்றது.**

★ ★ ★

# ஆசியரின் பிற நூல்கள்

1. குருந்தமலை வரலாறு
2. வாரியார் சுவாமிகள்
3. வாழ்வாங்கு வாழ்ந்த வள்ளல்
4. ஆலயம் தொழுவோம்
5. தவத்திரு சுந்தர சுவாமிகள்
6. ஸ்ரீ காஞ்சி மகா முனிவர்
7. பிரதோஷகால வழிபாடு
8. திருமண மலர் (இல்லறம்)
9. ஸ்ரீ ஜெயமங்கள ஆஞ்சநேயர்
10. திருக்கோயில்கள்
11. தியானம்
12. ஆலய வழிபாடு
13. கும்பாபிஷேகம்
14. அருள்மிகு விநாயகர்
15. ஸ்ரீ வைணவம்
16. திருக்குறளில் கடவுள் வாழ்த்து
17. கீதாசார விளக்கம்
18. இளைஞர்களுக்கான இன்னுரை
19. மணமக்களுக்கு
20. இன்பமாக வாழ இனிய வழி
21. முழுமதியும் மலை வலமும்
22. வழிபாட்டு மலர்
23. ஆறுமுகனும் ஆறுகால பூசையும்
24. வள்ளுவத்தில் இல்வாழ்க்கை
25. வள்ளுவத்தில் அறிவுடைமை
26. இறைவாக்கு
27. எமது குருநாதர்
28. ஈத்து உவக்கும் இன்பம்
29. ஆத்ம ஞானம்
30. ஒழுக்கம் உடைமை
31. கர்மம் - கர்மயோகம்
32. நன்மக்கட்பேறு
33. பற்று - குழப்பம் - தெளிவு
34. மனிதப்பிறவின் மாண்பு
35. வள்ளுவத்தில் இன்சொல்
36. வீடு
37. முக்குணங்கள்
38. பிரார்த்தனை
39. அன்பு
40. பண்புடன் கல்வி
41. அறத்தின் அவசியம்
42. தியாகச்சுடர்
43. அறிவு - செயல் - அறிவு
44. மனிதனே மகாதேவன்
45. தியாக வாழ்வு
46. சைவ சமயம்
47. பொருளும் அருளும்
48. ஸ்ரீ சர்கூர் அம்மன்
49. பக்தி
50. நட்பு
51. திருமுருகன்
52. தேர்த்திருவிழா

53. சுந்தரகாண்டம்
54. அறிவு - அனுபவம் - அனுபூதி
55. விதியும் மதியும்
56. கல்வியும் கேள்வியும்
57. ஸ்ரீ சாமுண்டீஸ்வரி அம்மன்
58. ஈசுவர ஞானம்
59. முயற்சியும் முன்னேற்றமும்
60. ஸ்ரீ சத்ய சாயி பாபா
61. பொறுமையும் பொறாமையும்
62. ஆலய வழிபாடும் அகப்பூஜையும்
63. இன்பமும் துன்பமும்
64. ஸ்ரீ மகாகாளி அம்மன்
65. மோட்ச தீப வழிபாடு
66. தியான மோகம்
67. தெய்வ தரிசனம்
68. நான் யார்?
69. ஔவையார் அறிவுரை
70. ஆசையும் கோபமும்
71. சூரிய பகவான்
72. கடவுள் இருக்கிறாரா?
73. ஸ்ரீ மாரியம்மன்
74. சிவபுராணம்
75. திருவாசகத் தேன்
76. செங்கூர் மாரியம்மன்
77. திருவிளக்கு வழிபாடு
78. குடும்பம் ஒரு கோயில்
79. ஸ்ரீ ராமானுஜர்
80. திருமுருகாற்றுப்படை
81. கொன்றை வேந்தன்
82. சுவாமி விவேகானந்தர்
83. அன்னையும் பிதாவும்...
84. விநாயகர் வழிபாடு
85. மதியால் விதியை...
86. ஸ்ரீ சுயம்பு பெருமாளப்பன்
87. தெய்வ அசுர குணங்கள்
88. அகிம்சை
89. கடவுள் யார்?
90. ஸ்ரீ திம்மரமாயப் பெருமாள்
91. ஸ்ரீ வீரமாஸ்தி அம்மன்
92. அன்னதானம்
93. சக்தி வழிபாடு
94. பிறவியின் நோக்கம்
95. இராமாயணம்
96. கீதை சொல்வதென்ன?
97. பன்னிரு ஆழ்வார்கள்
98. வள்ளுவத்தில் விருந்தும் மருந்தும்
99. நன்னெறி
100. உறுதியின் உருவம்
101. பெண்ணின் பெருமை
102. ஸ்ரீ ரங்கநாதர் தல வரலாறு
103. உலக உத்தமர் அப்துல்கலாம்
104. ஸ்ரீ பக்தப்ரகலாதாழ்வார்
105. வாழ்வாங்கு வாழ
106. மகாபாரதம்
107. தியானப் பயிற்சி
108. கைவல்ய நவநீதம்




என் தாயும் எனக்கருள் தந்தையும் நீ
இந்தாகுளம் தீர்த்து எனையாய்
கந்தா முருகா கதிர்வேலவனே
உமையாள் மைந்தா மறைநாயகனே!